॥ श्रीः ॥



श्रीमते श्रीलक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः ॥

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

श्रीमन्निगमान्तमहादेशिकविरचित

# श्रीमद्रहस्यत्रयसारः

## द्वितीयो भागः

श्रीमदहोबिलमठे द्विचत्वारिंशत्तमपट्टे मूर्द्धाभिषिक्तैः श्रीमद्वेदमार्गप्रतिष्ठापनाचार्य
परमहंसपरिव्राजकाचार्य सर्वतन्त्रस्वतन्त्रोभयवेदान्ताचार्य
श्रीभगवद्रामानुज सिद्धान्तनिर्द्धारणसार्वभौमः श्रीलक्ष्मीनृसिंह दिव्यपादुकासेवक श्रीवण्शठकोप
श्री श्रीरङ्गशठकोपयतीन्द्रमहादेशिकैः अनुगृहीतया

## श्री सारबोधिनी

### व्याख्यया संवलितः

श्रीमदहोबिलमठे द्विचत्वारिंशत्तमपट्टे मूर्द्धाभिषिक्तानां श्रीमत्परमहंसेत्यादि सार्थकबिरुदावलीभाजां
श्रीलक्ष्मीनृसिंह दिव्यपादुकासेवक श्रीवण्शठकोप श्रीरङ्गशठकोप यतीन्द्र महादेशिकानां
षष्टितम वार्षिक महाराधन महोत्सवे वीक्षारण्यक्षेत्रे नन्दन वर्षे कुम्भ मासे (२८) कृष्ण प्रथमायां
भौम वासरे (२६.२.२०१३) श्रीमत्परमहंसेत्यादि विशेषबिरुदावलीभाजां (४५ पट्टे)
श्रीलक्ष्मीनृसिंह दिव्यपादुकासेवक श्रीवण्शठकोप श्रीनारायण यतीन्द्र महादेशिकानां,
(४६ पट्टे) श्रीवण्शठकोप श्रीरङ्गनाथ यतीन्द्र महादेशिकानां च आध्यक्ष्ये प्रकाशितः ।

---

प्रकाशकः

श्रीनृसिंहप्रिया ट्रस्ट्

चेन्नै

நந்தன ஷூ 2013 [மாசி மீ 14 உ க்ருஷ்ண ப்ரதமை]

ஸ்ரீ:



ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

## ஸ்ரீ நிகமாந்த மஹாதேஶிகன் அருளிய

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்

## இரண்டாம் பாகம்

ஸ்ரீமதஹோபிலமடம் திவ்யாஸ்தானத்தில் மூர்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த
ஸ்ரீமத் வேதமார்க ப்ரதிஷ்டாபநாசார்ய, பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய,
ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரோபய வேதாந்தாசார்ய,
ஸ்ரீபகவத் ராமானுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌம,
ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண் ஶடகோப
ஸ்ரீ ஸ்ரீரங்க ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன் (42வது பட்டம்) அநுக்ரஹித்த

# ஸ்ரீ ஸாரபோதிநீ

## எனும் வ்யாக்யானத்துடன் கூடியது.

ஸ்ரீமதஹோபிலமடம் திவ்யாஸ்தானத்தில் மூர்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த
ஸ்ரீமத் வேதமார்க ப்ரதிஷ்டாபநாசார்ய பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய,
ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரோபய வேதாந்தாசார்ய,
ஸ்ரீபகவத் ராமானுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌம,
ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண் ஶடகோப
ஸ்ரீ ஸ்ரீரங்க ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகனின் (42வது பட்டம்) அறுபதாவது வருஷத்திய
ஆராதன மஹோத்ஸவத்தில், ஸ்ரீமத் வேதமார்கேத்யாதி விஶேஷ பிருதாலங்க்ருத
ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீநாராயண யதீந்த்ர
மஹாதேஶிகன் (45வது பட்டம்) ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீரங்கநாத யதீந்த்ர மஹாதேஶிகன்
(46வது பட்டம்) ஆத்யக்ஷ்யத்தில் வீக்ஷாரண்ய க்ஷேத்ரத்தில் நந்தன ௵ மாசி மீ 14ந்தேதி
(26.02.2013) செவ்வாய்க்கிழமை க்ருஷ்ண ப்ரதமையன்று வெளியிடப்பட்டது.

வெளியீடு

ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ட்ரஸ்ட் – சென்னை

முதற் பதிப்பு — 1956
இரண்டாம் பதிப்பு — 2013

விலை ரூ. 375/- (பாகம் – 2)

கிடைக்குமிடம்:–

ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா,
நெ.30, வெங்கடேச அக்ரஹாரம்,
மைலாப்பூர், சென்னை – 600 004.
போன்: 044 – 2461 1540 / 2461 4402

*Printed at:*
Elango Achukoodam,
(Old No.40) 83, Mundakakanni Amman Koil Street,
Mylapore, Chennai – 600 004.
Phone: 044 – 2499 1821 / 98841 84061

|| श्री ||

**Sri Ahobila Mutt**

ஸ்ரீ அஹோபிலமடம்

Camp ______

SRI AHOBILA MATH
8-A, Aarathi Nagar,
(Behind Selaiyur Police Station)
East Tambaram, Chennai-600 059.

Sri ______

Date: 23 - 08 2012

|| श्रीमते श्रीलक्ष्मीनृसिंह परब्रह्मणे नमः ||
|| श्रीमते श्रीवण्शठकोप श्री वेदान्तदेशिक यतीन्द्र महादेशिकाय नमः ||

ஸ்ரீ:

आभगवत्तः प्रथितामनघामाचार्यसन्ततिं वन्दे ।
मनसि मम यत्प्रसादाद्वसति रहस्यत्रयस्य सारोऽयम् ॥

குற்றமற்றதும், ப்ரஸித்தமானதுமான, ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹன் தொடக்கமாக, ஸ்ரீமதாதிவண்சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் வழியாக ப்ரவஹித்துக் கொண்டிருக்கும் ஆசார்ய பரம்பரைகளின் அநுக்ரஹத்தாலே நம் ஹ்ருதயத்திலே ஸ்ரீவேதாந்தாசார்யன் அருளிய, எளியதும் - கம்பீரமானதுமான, ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தின் ஸார, ஸாரதமமான அர்த்தங்கள் நிலைபெற்றிருக்கின்றன. அந்த ஆசார்ய பரம்பரைக்கு நம்முடைய ப்ரணாமங்கள்.

நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஸதாசார்யர்கள் பக்கலிலே காலக்ஷேபமாக பண்ணக்கடவதான க்ரந்த சதுஷ்ட்யங்களில் முக்யமானது ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிய ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம். ஸாமாந்ய ஸாஸ்த்ரங்களின் ஜ்ஞாநம் கொண்டே, ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களை, காலக்ஷேபம் செய்யாமலேயே அறிந்தாலும் அறியலாம். ஆனால், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தை மட்டும் காலக்ஷேபம் செய்தால்தான் அறியமுடியும் என்பர் பெரியோர்கள்.

ஸ்ரீ ஸந்நிதி ஸம்ப்ரதாயத்தில், நடுநாயகமாய், ஸர்வ சாஸ்த்ர பாரங்கதராய், ஜகத் விக்யாதராய், ஸுப்ரஸித்த வைபவம் உடையவராய், ஸதாசார்யராய் ஸ்ரீமதஹோபிலமடம் திவ்யாஸ்தானதில் 42-வது பட்டத்தை அலங்கரித்தவராய், எழுந்தருளியிருந்த ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்ய பாதுகா ஸேவக ஸ்ரீவண்சடகோப ஸ்ரீரங்க சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் திருவடியை ஆச்ரயித்து ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களைப் பூரணமாக அப்யஸித்து, பின்னர் ஸ்ரீமத் தேவனார் விளாகம் அழகியசிங்கரின் சேர்த்தியில், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம், ஸ்ரீ பகவத் விஷயம், ஸ்ரீ கீதா பாஷ்யம் ஆகியவற்றை அதிகரித்தோம். பல நியமங்களுடன் கூடிய காலக்ஷேப கோஷ்டி. இன்னமும், ஸ்ரீ இஞ்சிமேட்டு அழகியசிங்கர் ஸாதித்தவைகள் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. அந்த அழகியசிங்கரின் பரிபூர்ண அநுக்ரஹமே, நாம் இந்த திவ்யாஸ்தானத்தை ஏற்றதற்கு காரணமாகும்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு, ஸ்ரீ இஞ்சிமேட்டு அழகியசிங்கர் ஓர் அத்யத்புதமான வ்யாக்யானத்தை அருளியுள்ளார். அதற்கு, "ஸ்ரீ ஸாரபோதினீ" என பெயரிட்டுள்ளார். மணிப்ரவாள நடையில் அமைந்துள்ள இந்த க்ரந்தத்தை, ஸ்ரீஸந்நிதி ஸம்ப்ரதாய வித்வான்களும், மற்றுமுள்ள மஹான்களும், ஸ்ரீஅழகியசிங்கரின் வ்யாக்யானத்தைக் கொண்டு, காலக்ஷேபம் ஸாதித்துள்ளனர். நாமும், பல பேருக்கு சொல்லியுள்ளோம்.

இன்றைய காலத்தில் க்ரந்த பரிசயம் குறைவாக உள்ளதால் தத்கால வித்வான்களும், ஸ்ரீ அழகியசிங்கரின் வ்யாக்யானத்தைக் கொண்டே காலக்ஷேபம் சொல்ல வேண்டும். கேட்பவர்களும் வ்யாக்யானத்தில் உள்ள ரஸத்தை அனுபவிக்க வேணும் என்கிற எண்ணத்துடன், ஸ்ரீ மாலோலனிடத்திலும், ஸ்ரீஅழகியசிங்கர்கள் திருவடிகளிலும், அசஞ்சலமான பக்தி உடையவரும், ஸ்ரீமத் இஞ்சிமேட்டு அழகியசிங்கரின் பூர்வாச்ரம தௌஹித்ரரும், ஸ்ரீஸந்நிதி ஆஸ்தான வித்வானும் 'ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியா'வின் 50 ஆண்டுகாலம் ஸம்பாதகரும், நமக்கு மிகவும் ப்ரிய ஸுஹ்ருத்துமான புரிசை நடாதூர் ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸனம் ஸ்ரீ. உவே. க்ருஷ்ணமாசார்யர் ஸ்வாமியிடம் "ஸ்ரீ ஸாரபோதினீ" இரண்டு பாகத்தையும் நாகர அக்ஷரத்தில் அச்சிட்டு வெளியிட வேணும் என்கிற அபிலாஷையைத் தெரிவித்ததும், அதற்கான செலவை நாமே ஏற்கிறோம் என முன்பணமும் கொடுக்கப்பட்டது. அந்த ஸ்வாமியும், அதற்கான ஏற்பாடுகளை உடனே செய்தாயிற்று. ஸ்ரீ மாலோலன் அந்த ஸ்வாமியை தன் மலரடிக்கீழ் வைத்துக் கொண்டு விட்டான்.

பல ச்ரமங்களைக் கடந்து தற்போது இரண்டாம் பாகம் வெளிவரப் போவதாகவும், அதற்கான ஸ்ரீமுகத்தை "ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியா" டிரஸ்டிகள் ப்ரார்த்தித்ததின் பேரில், இந்த ஸ்ரீகோசம் வெளிவருவதற்கான கைங்கர்யத்தில் ஈடுபட்டவர்கள் அனைவருக்கும் ஸ்ரீமாலோலன் ஸ்ரீ அழகியசிங்கர்களின் பரிபூர்ண அநுக்ரஹங்கள் உண்டாகி, ஸகல ஸௌபாக்கியங்களுடன் இம்மாதிரி கைங்கர்யங்கள் செய்து வரவேணுமாய் மங்களாசாஸனம் பண்ணுகிறோம். கூடிய சீக்ரத்தில் இரண்டாம் பாகத்தையும், வெளிக் கொணர வேணும் என ஆசாஸிக்கிறோம்.

त्र्यन्तगुरुभिर्दत्तः सर्वेषां श्रेयसे भवन् ।
रहस्यत्रयसारोऽयं रहस्येषु विशिष्यते ॥



H. H. THE JEER OF
SRI AHOBILA MUTT

॥ श्री ॥

**Sri Ahobila Mutt**

**ஸ்ரீ அஹோபிலமடம்**

Camp ____________

**SRI AHOBILA MATH**
8-A, Aarathi Nagar,
(Behind Selaiyur Police Station)
East Tambaram, Chennai-600 059.

Sri ____________

Date: 23 - 08 2012

॥ श्रीमते श्रीलक्ष्मीनृसिंह परब्रह्मणे नमः॥

॥ श्रीमते श्रीवण्शठकोप श्री वेदान्तदेशिक यतीन्द्र महादेशिकाय नमः॥

॥ श्रीमते श्रीलक्ष्मीनृसिंह दिव्य पादुका सेवक श्रीवण्शठकोप श्री नारायण यतीन्द्र महादेशिकाय नम ॥

---

**अहोबिले गारुडशैलमध्ये कृपावशात् कल्पित सन्निधानम् ।**
**लक्ष्म्या समालिङ्गित वामभागं लक्ष्मीनृसिंहं शरणं प्रपद्ये ॥**

நம் ஆஸ்தானத்தில் 42ம் பட்டத்தில் மூர்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த இஞ்சிமேடு ஸ்ரீமதழகியசிங்கர் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு ஸாரபோதிநீ என்கிற அத்யத்புதமான வ்யாக்யானம் அருளிச் செய்தாயிற்று. அதை தேவனூர்விளாகம் ஸ்ரீமதழகியசிங்கர் 1954ம் வருஷம் முத்ரணம் பண்ணி ப்ரகாசம் செய்தாயிற்று. நல்ல வித்வான்களுக்குக் கூட மிகவும் கடினமானதை எல்லோருக்கும் புரியும்படியாக மணிப்ரவாளத்தில் அனுக்ரஹித்ததை தற்சமயம் நம் ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா மூலம் தேவநாகரீ அக்ஷரத்தில் முத்ரணம் செய்துள்ளது. இந்த ஸ்ரீகோஶத்தை நன்கு பரிசோதித்து அச்சிட்டு வித்வான்களுக்கும், காலக்ஷேபம் செய்கிறவர்களுக்கும் நன்கு புரியும்படியாக வெளியிட்டுள்ள நம் ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ஸம்பாதகர் வில்லிவலம் லக்ஷ்மீ நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமிக்கும், இக் கைங்கர்யத்தில் ஈடுபட்ட மற்றையோர்க்கும் நமது மங்களாசாஸனத்தைச் செய்கிறோம். இதேபோல் நம் ஸந்நிதியில் உள்ள ப்ராசீனமான ஸ்ரீகோஶங்களை அச்சிட்டு லோகோபகாரம் செய்ய அவர்களுக்கு அரோக த்ருட காத்ரத்தையும், ஆயுளையும் அநுக்ரஹிக்க வேணுமாய் நம் ஸ்ரீமாலோலன் திருவடிகளிலும், ஸ்ரீமதாசார்யன் திருவடிகளிலும் ப்ரார்த்தித்து இந்த ஸ்ரீமுகம் அனுக்ரஹிக்கப்பட்டது. இந்த ஸ்ரீகோஶத்தை வித்வான்கள் மற்றும் ஸம்ப்ரதாயம் தெரிந்து கொள்ள ஆசை உடையவர்கள் வாங்கி ஸ்ரீமாலோலன், ஸ்ரீதேசிகன், ஸ்ரீமதாசார்யர்கள் அனுக்ரஹத்திற்குப் பாத்ரபூதர்களாக வேண்டும்.

**समस्त मङ्गलानि भवन्तु**

ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீ ரங்கநாத யதீந்த்ர மஹாதேசிக:

**46ம் பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர் ஸ்ரீ அஹோபிலமடம்**

ஸ்ரீ:

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்
# (ஸாரபோதிநீ)

## பொருளடக்கம்

ஸ்ரீமதாதிவண் ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன் (முதல் பட்டம்)



॥ प्रपद्ये निरवद्यानां निषद्यां गुणसंपदाम् । शरणं भवभीतानां शठकोप मुनीश्वरम् ॥

42வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர்

**श्री सारबोधिनी व्याख्यातारः**



॥ श्रीमद्रङ्गशठारि योगिनृपतिं श्रेयोनिधिं संश्रये ॥

ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ திவ்ய பாதுகா ஸேவக ஸ்ரீவண் ஶடகோப
ஸ்ரீ ஸ்ரீரங்க ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன்

ஸ்ரீமதழகியசிங்கர்



॥ सेवे यतीन्द्रं सकलगुणनिधिं वीरराघवीट् शठारिम् ॥

ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீவீரராகவ ஶடகோப
யதீந்த்ர மஹாதேஶிகன்

# விஜ்ஞாபனம்

**वन्दे नृसिंहजायां अनादिमायां अपोहितुं हेयाम् ।**

**सुललितसुन्दरकायां सुरेन्द्रमेयाम् सुरऋषिभिर्ध्येयाम् ॥**

ச்ரிய: பதியாய், ஸகல கல்யாண குணங்களையுடையனுய், பரம காருணிகனுய்ப் போந்த எம்பெருமான் ஒரு கல்பத்திற்கொரு ஜீவனாவது தன்னையுள்ளபடி அறிந்து உஜ்ஜீவிக்கக் கடவனென்கிற எண்ணத்தாலே அடிக்கடி ஜகத்தை ஸ்ருஷ்டி செய்து ப்ரஹ்மாவுக்கு அடியிலேயே வேதோபதேசாதிகளைப் பண்ணியும், ஸநகாதிகளைக் கொண்டு நிவ்ருத்தி தர்மங்களை ப்ரவர்த்திப்பித்தும், நரநாராயண கீதாசார்யனுய் தானே வெளி நின்று ஜ்ஞானோபதேசங்களைச் செய்தும், கலியுகாரம்பத்தில் ஸ்ரீபாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தை ப்ரவர்த்திப்பித்தும், அது மந்தமதிகளுக்கு ப்ரயோஜனமில்லாதிருந்தமை கருதி, தாமே **வென்றி புகழ் திருவேங்கடநாதனென்றும் குருவாய்** தூப்புலில் அவதரித்து நாத, யாமுன, யதிவராதிகளாலே ப்ரவர்த்திதமான வ்யாஸ ஸித்தாந்தத்தைப் பல க்ரந்தங்களாலும் பலபடியாக ஸ்திரப்ரதிஷ்டிதமாக்கி, ப்ரபத்தியை ஸபரிகரமாய், ஸாதிகாரமாய் மாசற விளக்கும் **ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரமென்னும்** இம் மஹாப்ரபந்தத்தை வெளியிட்டருளினுன்.

பின்னர், **பக்தஸ்ய தாநவ ஶிஶோ: பரிபாலநாய பத்ராம் ந்ருஸிம்ஹ குஹநாமதிஜக்முஷஸ்தே । ஸ்தம்பைக வர்ஜமதுநாபி கரீஶ நூநம் த்ரைலோக்யமேததகிலம் நரஸிம்ஹ கர்பம் ॥** என்னும்படிக்கு மங்களாசாஸனம் பண்ணப்பட்ட ஸ்ரீந்ருஸிம்ஹன், இம் மஹாப்ரபந்தத்தை, அந்தணர் அந்தியர் எல்லையில் நின்ற அனைத்துலகும் அறிய வேண்டி, தன் சக்தி அனுப்ரவேசமாக ஸ்ரீமதாதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகனை அவதரிக்கும்படி அநுக்ரஹித்தான். ஸ்ரீமதாதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகனும், தன்னை ஆச்ரயித்தவர்களுக்கு இப் ப்ரபந்தத்தை காலக்ஷேபமாக ஸாதித்து, **ரஹஸ்யத்ரயஸாராக்ய ராகா சந்த்ரஸ்ய வாரிதி: । வேதாந்த தேசிகஸ் ஸோऽயம்** என விளங்கினார்.

ஸ்ரீகுருபரம்பராஸாரம் தொடக்கமாக முப்பத்திரண்டு அதிகாரங்களைக் கொண்ட இந்த க்ரந்தம், நான்கு பாகங்களாக – அதாவது – 1. அர்த்தாநுஶாஸன பாகம், 2. ஸ்த்திரீகரண பாகம், 3. பதவாக்ய யோஜநா பாகம் 4. ஸம்ப்ரதாயப்ரக்ரியா பாகம் என பிரிக்கப்பட்டுள்ளன. இம் மஹாக்ரந்தத்திற்கு பல மஹான்கள் உரையிட்டருளியுள்ளனர். அவைகளில் ஸாராஸ்வாதிநீ, ஸாரதீபிகை, ஸாரப்ரகாசிகை, ஸாரவிவரணீ, ஸாரதீபிகா ஸங்க்ரஹம் முதலியன வெகு காலத்திற்கு முன் அச்சிடப்பட்டவை. 1920ல் சேட்லூர் வித்வான் ஸ்ரீ.உ.வே. நரஸிம்மாசார்யர் ஸ்வாமியால் எழுதப்பட்ட உரை வெளியிடப்பட்டுள்ளது. 1980ல் ப்ரஸித்த மஹாவித்வான், உத்தமூர் ஸ்ரீ.உ.வே. வீரராகவாசார்யர் ஸ்வாமி ஸாரவிஸ்தரம் எனும் உரையுடன் வெளியிட்டுள்ளார்.

**ஸ்ரீமதஹோபிலமடம் திவ்யாஸ்தானத்தில் மூர்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் வேதமார்க ப்ரதிஷ்டாபநாசார்ய, பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய, ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரோபய வேதாந்தாசார்ய, ஸ்ரீபகவத் ராமானுஜ ஸித்தாந்த நிர்தாரண ஸார்வபௌம, ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீரங்க ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன் "ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார"த்திற்கு அத்யத்புதமான "ஸ்ரீஸாரபோதிநீ" எனும் வ்யாக்யானத்தை அருளிச்செய்தார்.**

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் க்ரந்தத்தை **ஸ்ரீஸாரபோதிநீ** வ்யாக்யானத்துடன் ஸ்ரீ இஞ்சிமேட்டு அழகியசிங்கர் பல சிஷ்யர்களுக்குக் காலக்ஷேபம் ஸாதித்தாயிற்று. அவர்களில் ஸ்ரீமதழகியசிங்கரால் **ஸாரஸாரஜ்ஞர்** என அநுக்ரஹிக்கப்பட்ட ஸ்ரீ. உ.வே. திருக்கள்ளம் நரஸிம்மராகவாசார்யர் ஸ்வாமி, ஸ்ரீ. உ.வே. பெருக்காரணை சக்ரவர்த்தியாசார்யர் ஸ்வாமி, ஸ்ரீ. உ.வே. பழவேரி ராஜகோபாலாசார்யர் ஸ்வாமி, (ஹிந்தி பண்டிட்) முதலானோர் இதனை ஸ்ரீகோசமாக வெளிவர, ப்ரூப் பரிசோதனைகளைச் செய்து இரு பாகங்களாக ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீவண்ஶடகோப ஸ்ரீவீரராகவஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன் ஆத்யக்ஷயத்தில் 1954லிலும், 1956லிலும் ப்ரகாஶப்படுத்தப்பட்டது. ஸ்ரீ இஞ்சிமேட்டு அழகியசிங்கர் புஸ்தகமாக வெளிவருதற்கு முன்னமேயே திருநாட்டை அலங்கரித்தாயிற்று.

பின்னர் அவதரித்த ஸ்ரீமதழகியசிங்கர்கள் ஸ்ரீஸாரபோதிநீ வ்யாக்யானத்தைக் கொண்டே ரஹஸ்யத்ரயஸார காலக்ஷேபத்தை ஸாதித்தாயிற்று. ஸ்ரீஸந்நிதி ஆஸ்தான வித்வான்களும் இன்றளவும் ப்ரசாரம் செய்து வருகின்றனர்.

ப்ரக்ருதம் பெரிய ஸ்ரீமத் அழகியசிங்கர் பூர்வாச்ரமத்தில் பல இடங்களில் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம் காலக்ஷேபம் ஸாதித்தாயிற்று. ஸ்ரீஸாரபோதிநீ வ்யாக்யானம் ஓர் ஒப்பற்றதான வ்யாக்யானம். இதில் ஆழங்கால்பட்ட ஸ்ரீமதழகியசிங்கர், பாமரர்களும் அவச்யம் தெரிந்து கொள்ளவேண்டுமென்கிற நோக்கத்துடன் மிகவும் எளிய தமிழில் **ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார விவரணம்** என ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியாவில் பரிபூர்ண ப்ரஹ்மாநுபவ அதிகாரம் வரையில் எழுதி அருளியாயிற்று. பலரும் இதை வாசித்து தங்களுடைய ஸந்தோஷத்தை வெளிப்படுத்தியுள்ளனர். ஸ்ரீகுருபரம்பராஸாரம் முதல் ஸ்ரீபரதேவதாபாரமார்த்யாதிகாரம் வரை (6 அதிகாரங்கள்) முதல் பாகமாக ஸ்ரீஸந்நிதியிலேயே அச்சிட்டு 1998ல் வெளியிடப்பட்டது. அடுத்த பாகத்தைக் கூடிய விரைவில் வெளியிடவேணும். ஸ்ரீமாலோலன் அநுக்ரஹம் பண்ணவேணும்:

ஸ்ரீஇஞ்சிமேட்டு அழகியசிங்கர், **ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம்** ஸரளமான மணிப்ரவாள நடையிலமைந்திருப்பதாலும், ஸத் ஸம்ப்ரதாயத்தோடு ஸ்ரீபாஷ்யத்தில் சிரபரிசயம் பண்ணின மஹாப்ராஜ்ஞர்களுக்கும் அறியவரிதான அர்த்தங்களைப் பொதிந்து கொண்டிருப்பதாலும் மந்தப்ராஜ்ஞரோடு மஹாப்ராஜ்ஞரோடு வாசியற குணக்ராஹிகளான ஸர்வ ஜனங்களாலும் கொண்டாடப்படும் ஓர் அற்புத க்ரந்த ரத்னம் என க்ரந்தத்தின் மேன்மையைக் கூறி, ஆகையாலிதை சிரகாலம் மஹாபாக்யலப்த ஸதாசார்ய ஶுஶ்ரூஷையாலே ஸம்யக் க்ரஹணம் பண்ணி, பஹுதா மநநம் பண்ணி, பஹுதா ப்ரவசனம் பண்ணி க்ருதார்த்தனானது மாத்ரமன்றிக்கே இத்தோடு வ்யாக்யாத்ருத்வ ரூப ஸம்பந்தத்தையும் பெற்று க்ருதார்த்தனாகக் கருதி இதற்கு வ்யாக்யானம் எழுதுகிறோம் என தன்னுடைய மனோரதத்தையும் வெளியிட்டாயிற்று.

ஸ்ரீமதழகியசிங்கரின் ஸாரபோதிநீ வ்யாக்யானத்தில் மிகவும் அறிய வேண்டியவைகள் பல. அவற்றில் சிலவற்றை இங்கே குறிப்பிடுகிறோம்.

1. குருபரம்பராஸாரம் தனி க்ரந்தமா? அல்லது ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தோடு சேர்ந்ததா?
2. தத்த்வத்ரய சிந்தநாதிகாரத்தில் ப்ரத்யக்த்வ, ஏகத்வாதிகளின் விளக்கமும், விசாரமும்.
3. பரதேவதா பாரமார்த்யாதிகாரத்தில் எம்பெருமானை ஆச்ரயித்தே மோக்ஷத்துக்கு அநுகுணமான ஆநுஷங்கிக பலன்களைப் பெறலாம் என்பதின் விளக்கம்.
4. அதிகாரி விபாகாதிகாரத்தில் உக்தி நிஷ்டையின் ப்ரபாவத்தை விளக்கும் ப்ரகரணம்.
5. உபாயவிபாகாதிகாரத்தில் பரபக்தி, பரஜ்ஞான விஷய விளக்கம்.
6. கதிசிந்தநாதிகாரத்தில் விரஜைக்கு அக்கரைப்படுத்தி என்பதற்கு வ்யாக்யானம். இப்படி இன்னும் பல.

இப்படிப்பட்ட அத்புதமான க்ரந்தம் க்ரந்தலிபியில் அமைந்திருப்பதால், அனைவரும் அறிந்து ஸ்திரப்ரதிஷ்டமான ஸம்ப்ரதாய ஜ்ஞானத்தைப் பெறவேண்டும் எனத் திருவுள்ளம் கொண்டவராய், அதனை ஸம்ஸ்க்ருதத்தில் (நாகரத்தில்) வெளியிடும்படி, ஸ்ரீமத்வேதமார்கேத்யாதி ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண்சடகோப ஸ்ரீநாராயண யதீந்த்ர மஹாதேசிகன் (45வது பட்டம்) தன்னுடைய மேன்மைக்கு ஸர்வவிதத்திலும் காரணபூதரான ஸ்ரீமத் இஞ்சிமேட்டு அழகியசிங்கரின் 120வது திருநக்ஷத்ரத்தன்று மஹாவித்வான், ஸ்ரீஸந்நிதி ஆஸ்தான வித்வான், ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸனம், ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ஸம்பாதகர்(முன்னுள்) ஸ்ரீ.உ.வே புரிசை நடாதூர் க்ருஷ்ணமாசார்யர் ஸ்வாமியின் வலக்கரத்துக்கு ஸ்வர்ணத்தில் தோடா அநுக்ரஹித்து, நியமித்து பல மந்த்ராக்ஷதை அநுக்ரஹித்தாயிற்று.

ஸ்ரீ.உ.வே. புரிசை ஸ்வாமியும் ஸ்ரீநியமனத்தை சிரமேற்கொண்டு ஏற்பாடுகளைச் செய்தாயிற்று. ஸ்ரீமாலோலன் அந்த ஸ்வாமியை மாக வைகுந்தத்துக்கு அழைத்துக் கொண்டுவிட்டான்.

இப்புஸ்தகம் வெளிவருவதற்கு பலர் உறுதுணையாக இருந்துள்ளனர். மதுராந்தகம் ஸம்ஸ்க்ருத கலாசாலை அத்யாபகர்கள் ஸ்ரீ.உ.வே. திருக்குடந்தை ஸ்ரீநிவாஸாசார்யார், ஸ்ரீ.உ.வே. தையார் லக்ஷ்மீ நரஸிம்ஹாசார்யார், ஸ்ரீ.உ.வே. ஸ்ரீநிவாஸ ராகவாசார்யர், ஸ்ரீ.உ.வே. குரிச்சி நாராயணாசார்யார், ஸ்ரீ.உ.வே. காவனூர் சக்ரவர்த்யாசார்யார் முதலானோர் பலவிதங்களில் உதவி செய்தனர். அச்சுப்பிழைகள் வராமல் இருக்கவேணும் எனக் கருதி, ஸ்ரீ.உ.வே. வித்வான் புலிக்குன்றம் ஸ்தலசயனாசார்யர் ஸ்வாமியை இப்புத்தகம் முழுவதையும் பார்த்து பரிசோதித்துத் தரவேணுமென ப்ரார்த்தித்தோம். அந்த ஸ்வாமியும் மிகவும் உத்ஸாஹத்துடன் சோதனம் செய்து கொடுத்தார். டாக்டர் ஸ்ரீ.உ.வே. தேவனூர்விளாகம் பத்மநாபாசார்யர் ஸ்வாமியும் இக் க்ரந்தத்தை டைப் செய்வதற்கு சிறந்த நபரை ஏற்பாடு செய்தார். அனைவருக்கும் ஸ்ரீமாலோலன், ஸ்ரீமதழகியசிங்கர்கள் அநுக்ரஹங்களால் ஸகல க்ஷேமங்களும் ஏற்படவேணுமாய் ப்ரார்த்திக்கிறோம். மேலும் ஸ்ரீமான் C. ஸம்பத் பலவிதங்களில் உறுதுணையாக இருந்து கைங்கர்யம் செய்துள்ளார். இவருக்கும் ஸ்ரீ மாலோலன், ஸ்ரீமதழகியசிங்கர்களின் அநுக்ரஹங்கள் பரிபூர்ணமாக உண்டாக வேணும்.

இப் புஸ்தகத்தை நல்ல முறையில் பல தடவைகள் ப்ரூப் பார்ப்பதற்காக டைப் செய்து கொடுத்த ஸ்ரீ G.பெரியசாமிக்கு நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்புஸ்தகத்திற்குத் தேவையான போட்டோக்களை ஏற்பாடு செய்த ஸ்ரீமான்கள் N.கோவிந்தராஜன், S.பார்த்தசாரதி (DTP ஆபரேட்டர்கள்) முதலானோர்க்கு எங்களது நன்றி உரித்தாகுக. நல்ல முறையில் ப்ரிண்ட் செய்து கொடுத்த இளங்கோ அச்சுக்கூடத்தாருக்கும் (மைலாப்பூர்), பைண்ட் செய்து கொடுத்தவர்களுக்கும் எங்களது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இக் கைங்கர்யத்தில் பங்கு கொண்ட அனைவருக்கும் எம்பெருமான், ஸ்ரீஅழகியசிங்கர்கள் அநுக்ரஹத்தால் நீண்ட ஆயுளையும், ஐச்வர்யங்களையும் பெற்று வாழ்வார்களாக. இஞ்சிமேடு ஸ்ரீமதழகியசிங்கரின் அனுக்ரஹத்தால் ஆரம்பிக்கப்பட்ட ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகை, பிற்காலத்தில் ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ட்ரஸ்டாக உருவாக்கப்பட்டு, ஸ்ரீமதழகியசிங்கர்களின் நியமனத்துடன் நடத்தப்பட்டு வருகிறது. மேற்படி ட்ரஸ்டின் நிர்வாகிகள் இக்க்ரந்தத்தை வெளியிடுவதில் உறுதுணையாக இருந்தார்கள். அவர்களுக்கும் ஸ்ரீமாலோலன், ஸ்ரீமதழகியசிங்கர்கள் அனுக்ரஹத்தால் ஸகல க்ஷேமங்களும் உண்டாகவேணுமாய் ப்ரார்த்திக்கிறோம்.

ஸ்ரீமாலோலன் ஸ்ரீமதழகியசிங்கர்கள் அநுக்ரஹத்தை அவலம்பித்தே ஆரம்பித்த இக் கைங்கர்யம், பல ச்ரமங்களைக் கடந்து பூர்த்தி பெற்று, நந்தன ஸ்ரீ ஆவணி மீ 25ந் தேதி (10.09.2012) திங்கட்கிழமை திருவாதிரை நக்ஷத்ரம் கூடிய சுபதினத்தில் ஸ்ரீமதழகியசிங்கர்களின் திருக்கரங்களால் வித்வான்கள் முன்னிலையில் புஸ்தகமாக (முதல்பாகம்) வெளியிடப்பட்டது பெரிய பாக்யமே. முதல் ப்ரதியை நாவல்பாக்கம், சதுர்வேதஶதக்ரது மஹாவித்வான் ஸ்ரீ. உ.வே. வரதாசார்யர் ஸ்வாமி பெற்றுக்கொண்டார். இந் நன்னுள் ஸ்ரீமதழகியசிங்கர் பட்டாபிஷேகம் கண்டருளி இருபது ஆண்டுகள் பூர்த்தி பெற்ற தினம் என்பது குறிப்பிடத்தக்கது.

மேலும், ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீ ஸ்ரீரங்க ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகனின் அறுபதாவது வருஷத்திய ஆராதன மஹோத்ஸவ தினமான நந்தன ஸ்ரீ மாசி மீ 14ந் தேதி (26.02.2013) செவ்வாய்க்கிழமை க்ருஷ்ண ப்ரதமையன்று வீக்ஷாரண்ய க்ஷேத்ரத்தில் ஸ்ரீமதழகியசிங்கர்களின் திருக்கரங்களால் வித்வான்கள் முன்னிலையில் **இரண்டாம் பாகம்** வெளியிடப்பட்டது நாம் பெற்ற பெரும் பாக்யமே. முதல் ப்ரதியை நம் ஸ்ரீ ஸந்நிதி ஆஸ்தான வித்வான் சோகத்தூர் ஸ்ரீ. உ.வே. ராமாநுஜாசார்யர் ஸ்வாமி பெற்றுக் கொண்டார். ஸ்ரீமத் இஞ்சிமேடு அழகியசிங்கர் அர்ச்சாவதாரத்தில் எழுந்தருளியிருக்க அம்மஹான் திருமுகப்பே, ப்ரக்ருதம் ஸ்ரீமதழகியசிங்கர்கள் எழுந்தருளி வெளியிடப்பட்டது குறிப்பிடத்தக்கது.

மிகுந்த க்ருபையுடன் ஸ்ரீமுகங்கள் அநுக்ரஹித்ததற்கு அடியோங்களுடைய க்ருதஜ்ஞதையை ஸ்ரீமதழகியசிங்கர்கள் திருவடிகளில் ஸவிநயம் ஸமர்ப்பிக்கிரோம்.

இந்த புஸ்தகம் பிழையின்றி நன்கு அச்சிட்டு வெளியிட்டிருப்பது ஸ்ரீமதழகியசிங்கர்களின் அனுக்ரஹமே. இத்தருணத்தில், இந்த இரண்டாம் பதிப்பு பிழையின்றி நன்கு வரவேண்டுமென சீரிய நோக்குடன், மிகவும் உத்ஸாஹத்துடன் நன்கு சோதனம் பண்ணிக்கொடுத்த (நான்கு முறை) வித்வான்; புலிக்குன்றம் ஸ்ரீ. உ.வே. ஸ்தலசயனுசார்யர் ஸ்வாமிக்கு ப்ரத்யேகமான அஞ்ஜலிபுரஸ்ஸரமாக க்ருதஜ்ஞதையை ஸமர்ப்பித்துக் கொள்கிறோம். ஏதாவது பிழையிருப்பின் அது அடியோங்களைச் சார்ந்தது.

ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாய குணக்ராஹிகளான வித்வான்கள் அனைவரும் இக் க்ரந்தத்தை ஸேவித்து, ஏதாவது தவறுகள் இருப்பின், சுட்டிக்காட்டி, சிக்ஷித்து, அநுக்ரஹிக்க வேணுமாய் ப்ரார்த்திக்கிரோம்.

**பழவேரி, வில்லிவலம் லக்ஷ்மீ நரஸிம்மதாஸன்**
**மன்னுர்குடி ராஜகோபாலதாஸன்**

॥ श्रीः ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

॥ श्रीमद्रहस्यत्रयसारे सिद्धोपायशोधनाधिकारः ॥

युगपदखिलं प्रत्यक्षेण स्वतस्सततं विद-
न्निरवधिदयादिव्योदन्वानशक्यविवर्जितः ।
जलधिसुतया सार्धं देवो जगत्परिपालयन्
परमपुरुषस्सिद्धोपायः प्रतीष्टभरस्सताम् ॥ ५१ ॥

॥ श्रीः ॥

॥ श्रीमते श्रीलक्ष्मीनृसिंह परब्रह्मणे नमः ॥

श्रीसारबोधिन्यां

सिद्धोपायशोधनाधिकारः ॥

இப்படி இருபத்திரண்டதிகாரரூபமான अर्थानुशासनभागம் व्याख्यातமாயிற்று. இனி अधिकारचतुष्टयात्मकமான स्थिरीकरणभागத்திற்கு व्याख्यानம் செய்யப்படுகிறது. स्थिरीकरणभाग த்தில் सिद्धोपायशोधनाधिकारமென்றும், साध्योपायशोधनाधिकारமென்றும், प्रभावव्यस्थाधिकार மென்றும், प्रभावरक्षाधिकारமென்றும் நான்கு அதிகாரங்கள் உள்ளன. இவற்றில் முதலில் सिद्धोपायத்தை शोधिக்கக் கருதி, அதன் स्वरूपத்தை श्लोकத்தாலே संग्रहिத்துக் காட்டுகிறார் **युगपदिति** । **अखिलं** – उभयविभूतिகளிலுள்ள सर्ववस्तुக்களையும், **युगपत्** – एक-कालத்தில், இதனால் क्रमिकसाक्षात्कारம் व्यावृत्तिக்கப்படுகிறது. **प्रत्यक्षेण** என்பதனால் अनुमानादिजन्यज्ञानம் व्यावृत्तिக்கப்படுகிறது. **स्वतः** – उपाधिயின்றிக்கே, இதனால் योगज-साक्षात्कारம் व्यावृत्तिக்கப்படுகிறது. **सततं** – सर्वकालம், இதனால் कादाचित्कसार्वज्ञव्यावृत्तिः । **विदन्** – साक्षात्ताக அறியுமவனாய், இவ்வளவால் स्तनन्धयप्रायர்களான நம்முடைய क्लेशங் களை सर्वदा साक्षात्करिத்துக்கொண்டிருக்கும் भगवान् व्याजनिरपेक्षமாக रक्षणोन्मुखனாக வேண்டாவோ என்கிற ஶங்கைக்கு ஹேது சொல்லப்பட்டது. இப்படி நம்முடைய क्लेशங்களை ஸாக்ஷாத்தாக அறிந்தானாகிலும் कारुणिकனாகிலன்றோ रक्षणोन्मुखனாவது என்னவருளிச்செய்கிறார் **निरवधिदयेति** । स्वतः என்பது இங்கும் अन्वयिக்கிறது. निरवधि என்பதால் सावधिकமான प्रसिद्धसमुद्रம் व्यावृत्तिக்கப்படுகிறது. **दयादिव्योदन्वान्** – दयैக்கு दिव्यसमुद्रமாய், दिव्यशब्दத்தாலே स्वरूपतोऽपि समुद्रान्तरம் व्यावृत्तिக்கப்படுகிறது. இதனால் व्याजनिरपेक्षरक्षणोपयुक्तமான परमकारुणिकत्वरूपशङ्काहेतु சொல்லப்பட்டது. இப்படி सर्वज्ञனாய்

**அனாதிகாலம் संसरित्துப்போந்த क्षेत्रज्ञன் अवसरप्रतीक्ஷயான भगवत्कृपैயாலே புரிந்து समीचीनशास्त्रमुखத்தாலே तत्त्वहितपुरुषार्थங்களைத் தெளிந்து, मुमुक्षुவாய் स्वाधिकारानुरूपமாயிருப்பதொருவுपायविशेषத்தை परिग्रहिத்து, कृतकृत्यனாய், தன் निष्ठैயைத் தெளிந்து, அதுக்கனுरूपமாகவிங்கிருந்த நாள் यथाशास्त्रं निरपराधமாகப்பண்ணும் कैङ्कर्यरूपपुरुषार्थமிருக்கும்படியும், शरीरपातानन्तरमर्चिरादि-**

परमकारुणिकனானாலும் நம்மை ரக்ஷிப்பது शक्यமாகிலன்றோ रक्षणोन्मुखனாவது என்ன வருளிச்செய்கிறார் **अशक्यविवर्जित** इति । अशक्येन विवर्जितः – அவனுக்கு अशक्यமானது ஒன்றுமில்லையென்றபடி. இப்படி सर्वज्ञனாய், परमकारुणिकனாய், सर्वशक्तனாயிருந்தும் व्याजनिरपेक्षமாக रक्षकனாகாமைக்குக் காரணமென்னவென்ன வருளிச்செய்கிறார் **देव** इति । **लीलाप्रवृत्त**னாயென்றபடி. स्वत एव रक्षकனாகில் लीलाप्रवृत्तिயே கூடாதாகையால் व्याजसापेक्षனாக ரக்ஷிக்கிறானென்று தாத்பர்யம். அப்படி ரக்ஷிப்பதும் பிராட்டியோடு கூடி என்கிறார் **जलधिसुतया सार्धमिति** । இதனால் ''लक्ष्म्या सह हृषीकेशो देव्या कारुण्यरूपया । रक्षकः'' என்கிற वचनार्थம் सूचितமாகிறது. **जगत्परिपालयन्** – जगத்தை सर्वप्रकारத்தாலும் ரக்ஷிக்கிறவனான. இங்கு ''रक्षणहेत्वोः शतृ'' इति हेत्वर्थத்தில் शतृप्रत्ययம். परिपालनம் பண்ணுகைக்கு என்றபடி. **परमपुरुषः** – ''पुरुषान्न परं किञ्चित्'' என்று சொல்லப்பட்ட पुरुषोत्तमன். **प्रतीष्टभरस्सन्** – अकिञ्चनர்களால் ஸமர்ப்பிக்கப்பட்ட भरத்தை स्वीकरिத்தவ னாய்க்கொண்டே. இதனால் व्याजसापेक्षனாகவே सिद्धोपायனாகிறான் என்னுமிடம் सूचितம். **सतां** – ब्रह्मज्ञानिகளுக்கு, **सिद्धोपायो भवतीति** । இதனால் व्याजनिरपेक्षனாக सिद्धोपाय னாகமாட்டானென்கிற இவ்வधिकारार्थம் सूचितமாகிறது.

இனி अर्थानुशासनभागத்தில் சொன்ன சிலவर्थங்களை स्थिरीकरणம் பண்ணக்கருதி அந்த भागத்தில் சொன்னவर्थங்களை संग्रहமாகவनुवदिக்கிறார் **अनादिकालमित्यादिना** । **புரிந்து** – संसारान्निवृत्तனாய், இது उपोद्घाताधिकारार्थம். **समीचीनशास्त्रमुखத்தாலே** इति । இது सारनिष्कर्षाधिकारार्थம். **तत्त्वहितपुरुषार्थங்களைத் தெளிந்து** इति । இதனால் प्रधानप्रतितन्त्र, अर्थ पञ्चक, तत्त्वत्रय, परदेवतापारमार्थ्याधिकारங்களினर्थம் अनुवदिக்கப்பட்டது. **मुमुक्षुவாய்** என்ப தால் मुमुक्षुत्वाधिकारार्थம் अनूदितம். **स्वाधिकारानुरूपமாயிருப்பதொரு** என்பதால் अधिकार-विभागाधिकारार्थமும், **उपायविशेषத்தை परिग्रहिத்து** என்பதால் उपायविभागाधिकारம் முதலான अधिकारचतुष्टयार्थமும், **कृतकृत्यனாய்** என்பதால் कृतकृत्याधिकारार्थமும், **தன் निष्ठैயைத் தெளிந்து** என்பதால் स्वनिष्ठाभिज्ञानाधिकारार्थமும், **அதுக்கனுरूपமாக** इत्यादिயால் उत्तर-कृत्याधिकारार्थமும், पुरुषार्थकाष्ठाधिकारार्थமும், **यथाशास्त्र**மென்பதால் शास्त्रीयनियमनाधिकारार्थமும், **निरपराधமாகப்பண்ணு**மென்பதால் अपराधपरिहाराधिकारार्थமும், கீழே **இங்கிருந்த**

**गतियாலே अप्राकृतदेशविशेषத்திலே சென்றால் இவனுக்கனவச்छिन्नभगवदनुभव-परीवाहமாக வரும் परिपूर्णकैङ्कर्यरूपपरमपुरुषार्थसिद्धियிருக்கும்படியுஞ்சொன் னோம். இவ்வர்थங்களில் ज्ञातव्यतमமான सिद्धोपायத்தைப்பற்றவும் साद्ध्यो-पायविषयமாகவும் இவ்வுपायप्रभावविषयமாகவும் कर्मवश्यருக்குக்கடுகத்தெளிவு பிறவாமைக்கு स्वतन्त्रனான सर्वेश्वरன் இவர்களுடைய पूर्वापराधத்தாலே யிட்ட நினைப்பீடுமாறுகைக்கு प्रधानकारणம் மூன்றுண்டு. அவையெவை யென்னில்; ''अस्तु मे'' என்றபேक्षित्தால் ''अस्तु ते तयैव सर्वं संपत्स्यते'' என்கிற திருமுகப்பாசுரமும், सदाचार्यानुग्रहமும், सत्संप्रदायसिद्धिயும். இவற்றில் सदा-चार्यानुग्रहத்துக்கு व्याजங்களும் இதின் फलविशेषங்களும் पराशरमैत्रेयसञ्जयाश्वलाय-**

---

**நாள்** என்றதால் स्थानविशेषाधिकारार्थமும், अनुवदिக்கப்பட்டது. **शरीर पातानन्तरம்** என்பதால் निर्याणाधिकारार्थமும், **अर्चिरादिगतियாலே** என்பதால் गतिचिन्तनाधिकारार्थமும், **अप्राकृते**त्यादियால் परिपूर्णब्रह्मानुभवाधिकारार्थமும், अनुवदिக்கப்பட்டது. இப்படி अर्थानुशासनभाग த்திலேயே सर्वार्थமும் சொல்லப்பட்டிருக்க स्थिरीकरणभागம் अवश्यकर्तव्यமோ? கீழ்ச் சொன்னவர்थங்களில் தெளிவு உண்டாய் प्रपन्नரானார்களுக்கு उक्तार्थத்தில் கலக்க முண்டாகுமோ? हैतुकரோட்டை संसर्गத்தாலே बुद्धिचलनமும், அதடியாக शङ्कादिகளும் संभविக்கலாமென்னில்; அப்போது எல்லா अर्थத்தையும் स्थिरीकरिக்கவேண்டியிருக்க, सिद्धोपाय साद्ध्योपाय तत्प्रभावमात्रशोधनம் போதுமோவென்ன வருளிச்செய்கிறார் **இவ்வர்थங்களிலி**त्यादिना । **ज्ञातव्यतमமான** इति । இதனால் सिद्धोपायादिகள் प्रधानतमங்களாகையாலே तच्छोधनமே आवश्यकமென்பது ज्ञापितம். **கடுகத் தெளிவுபிறவாமைக்கு** – शीघ्रமாக समीचीननिर्णयமுண்டாகாமைக்கு. **இட்ட நினைப்பு** – இவன் सिद्धोपायादिகளை शीघ्र மாக வறியக்கடவனல்லன் என்கிற भगवत्सङ्कल्पம். **ஈடுமாறுகைக்கு** – निवृत्तिயடை வதற்கு, निवृत्तिपूर्वकமான समीचीनज्ञानोत्पत्तिக்கு என்றபடி. **प्रधानकारणம் மூன்றுண்டு** इति । अप्रधानकारणங்கள் अनेकங்களிருந்தாலும் प्रधानकारणம் மூன்றே என்று திருவுள்ளம். அதின் स्वरूपத்தை प्रश्नपूर्वकமாக விவரிக்கிறார் **அவையெவையென்னிலி**त्यादिना । **अस्तु ते तयैव सर्वं संपत्स्यते என்கிற திருமுகப்பாசுரமும்** – श्रीगद्यத்தில் प्रत्युत्तरம் போலருளிச்செய்யப்பட்ட लक्ष्मियிினுடைய திருப்பவளத்தின் श्रीसूक्तिயும், **सदाचार्यानुग्रहமுமிதி** । இதுவும் अदृष्टविधया समीचीनज्ञानकारणம். **सत्संप्रदायसिद्धिயுமிதி** ॥ இது साक्षात् ज्ञानहेतुவென்பது மேலே विशदம். இம் மூன்றில் प्रथमोद्दिष्टமான திருமுகப் பாசுரத்திற்குக் காரணம் ''अस्तु मे'' என்கிற प्रपत्तिपूर्वकप्रार्थनை யென்றும், फलविशेषம் ''तयैव सर्वं संपत्स्यते'' என்றநுग्रहித்த ज्ञानादिसर्वமென்றும் स्पष्टமாகையாலே द्वितीयोद्दिष्ट-सदाचार्यानुग्रहத்திற்கு हेतुफलங்களைக் காட்டுகிறார் **இவற்றில் सदाचार्यानुग्रहத்துக்கு**

**नादिवृत्तान्तங்களிலே கண்டுகொள்வது. सत्संप्रदायसिद्धियாவது; தான் सत्वोत्तरனாய் सम्यगुपसन्नனாய் सावधानனாயிருக்குமवस्थैயிலே ख्यातिलाभपूजानिरपेक्षனாய் कारुण्यपरतन्त्रனான सदाचार्यன் सर्वருக்கும் प्रथमाचार्यனான सर्वेश्वरன் முதலாகவுपदेशपरंपरैயாலே வந்த तत्त्वहितங்களை अनपेक्षितविस्तरமுமपेक्षितसङ्कोचமுமில்லாதபடி [1]"सर्वेषामेव लोकानां पिता माता च माधवः । गच्छध्वमेनं शरणं शरण्यं पुरुषर्षभाः" என்கிற கட்டளையிலேயுपदेशिக்கப்பெறுகை. बहुक्लेशமாய் बुद्धिचलनसंभावனை**

इत्यादिना । **व्याजம்** – காரணம். **फलविशेषங்கள்** – सम्यक्ज्ञानादिகள். **पराशरेत्यादि** । पराशरர் विषयத்தில் पुलस्त्यवसिष्ठप्रशासनानुवर्तनம் அவர்களுடைய अनुग्रहத்திற்கு व्याजம்; அதாவது காரணம். परदेवतापारमार्थ्यवेदनादिகள் फलம். मैत्रेयர் विषयத்தில் पराशरानुग्रहத்திற்கு पराशरानुवर्तनம் व्याजம். "त्वत्तो हि वेदाध्ययनमधीतमखिलं गुरो । धर्मशास्त्राणि सर्वाणि तथाङ्गानि यथाक्रमम् ॥ त्वत्प्रसादान्मुनिश्रेष्ठ मामन्येनाकृतश्रमम्" इत्यादिகளில் சொல்லப்பட்ட सर्वविषयकसमीचीनज्ञानादिகள் फलம். सञ्जय विषयத்தில் व्यासानुग्रहத்திற்கு व्याजம் तदनुवर्तनம். "व्यासप्रसादाच्छ्रुतवानेतद्गुह्यमहं परम् । योगं योगेश्वरात् कृष्णात्साक्षात्कथयतः स्वयम्" என்று சொல்லப்பட்ட अतीन्द्रियार्थसाक्षात्कारादिகள் फलம். आश्वलायनர் विषयத்தில் शौनकानुग्रहத்திற்கு शौनकानुवर्तनம் व्याजம். ऋग्वेदप्रवर्तनादि हेतुभूतसमीचीनज्ञानादिகள் फलம். இதனால் सदाचार्योपसर्पणத்தால் तदनुग्रहத்தைப் பெற்றவனுக்கு ज्ञानोत्पत्तिविरोधिகளான पापங்கள் கழிந்து समीचीनज्ञानம் உண்டாகுமென்று ज्ञापिக்கப்பட்டது. மூன்றாவதாக निर्देशिக்கப்பட்ட सत्संप्रदायसिद्धिயினுடைய स्वरूपத்தை நன்கு விவரிக்கிறார் **सत्संप्रदाय सिद्धियாவது** इत्यादिना **उपदेशिக்கப்பெறுகை** इत्यन्तेन । அஸத்துக்களின் उपदेशம் भ्रमादिजनकமாகையால் तद्व्यावृत्त्यर्थம் सदाचार्यனுपदेशिக்கப்பெறுகையென்கிறது. सदाचार्यனை विशेषिப்பிக்கிறார் **ख्यातिलाभपूजानिरपेक्षனாய் कारुण्यपरतन्त्रனான** इति । शिष्यगुणपूर्तिயில்லாதவன் विषयத்தில் सदाचार्योपदेशமும் समीचीनज्ञानजनकமாகாது என்கிற अभिप्रायத்தாலே அவனை विशेषिப்பிக்கிறார் **தான் सत्वोत्तरனாயி**त्यादिना । **अवस्थैயிலே** – दशैயிலே, उपदेश्यமான अर्थத்தைக் காட்டுகிறார் **सर्वருக்குமி**त्यादिना । उपदेशपरंपरैயாலே வந்த तत्त्वहितங்களை इत्यनेन तत्त्वहितादिகளுக்கு सत्संप्रदायगतत्वம் சொல்லப்பட்டது. उपदेशप्रकारத்தை யருளிச்செய்கிறார் **अनपेक्षितविस्तरமும் अपेक्षितसङ्कोचமுமில்லாதபடி** इति । ஓர் இடத்தை उदाहरिக்கிறார் **सर्वेषामिति** । लोकानामिति अवरतत्त्वமும், पितेत्यादिना परतत्त्वமும் சொல்லப்பட்டது. गच्छद्ध्वमेनं शरणमिति हितம் சொல்லப்பட்டது. शरण्यमिति प्राप्यकथनம். **என்கிற கட்டளையிலே** – என்கிற रीतिயிலே. शास्त्रपरिश्रमமில்லாத आस्तिकர்க்கும் இதுவே प्रधानமென்கிறார் **बहुक्लेशமா**

---

[1] பாரதம் ஆரண்யபர்வம் 192-56.

**யுண்டான शास्त्रपरिश्रमத்திலनधिकृतருமாய் परमास्तिकருமாயிருப்பார்க்கிவ்வு पदेशமே प्रधानம். மற்றுள்ளார்க்குத் தாங்கள் தெளிகைக்காகவும் कुतर्कங் களாலே கலங்குவாரைத் தெளிவிக்கைக்காகவும் समीचीनयुक्तिகளோடே கேட்கप्राप्तம். [2]"आर्षं धर्मोपदेशञ्च वेदशास्त्राविरोधिना । यस्तर्केणानुसन्धत्ते स धर्मं वेद नेतरः" என்கிறபடியே இவ்வர்थங்களை समीचीनतर्कங்களாலே தெளியாத வர்கள் [3]"काणादशाक्यपाषण्डैस्त्रयीधर्मो विलोपितः" என்கிறபடியே हैतुकராய் वेदविरोधितर्कங்களையிட்டு प्रामाणिकार्थங்களையपहरिப்பார்கள். இவ்வपहारம்**

யீत्यादिना । இதனால் "शास्त्रज्ञानं बहुक्लेश" மென்கிற श्लोकம் ज्ञापिக்கப்படுகிறது. **परमा-स्तिकருமாயிருப்பார்க்கிति** । शास्त्रपरिश्रमமின்றிக்கே परमास्तिकராயிருப்பவர்विषयம் இந்த श्लोकம் என்று திருவுள்ளம். இவ்வுपदेशமே प्रधानமாகில் शास्त्रपरिश्रमம் व्यर्थமன்றோ வென்ன வருளிச்செய்கிறார் **மற்றுள்ளார்க்கிति** । **மற்றுள்ளார்** – शास्त्रपरिश्रमத்தில் अधिकृतராய் परमास्तिकராயுள்ளார். **தாங்கள் தெளிகைக்காகவும்** – तत्त्वहितपुरुषार्थங் களில் सूक्ष्मसूक्ष्मतरसूक्ष्मतमांशங்களைத் தாங்கள் विशदமாக அறிகைக்காகவும். **कुतर्कங் களாலே கலங்குவாரைத் தெளிவிக்கைக்காகவும்** – शास्त्राधिकृतரானாலும் मृदुप्रज्ञ ராகையாலே कुतर्कங்களாலே समीचीनार्थनिर्णयமில்லாதாரைத் தன் उपदेशத்தாலே समीची-नार्थनिर्णयமுள்ளவர்களாகச் செய்கைக்காகவும், **समीचीनयुक्तिகளோடே** – कुतर्कनिरसनक्षम மான सत्तर्कங்களோடே, **கேட்கप्राप्तिமிति** । सदाचार्यसकाशத்தில் अवश्यம் श्रवणம் பண்ண வேண்டுமென்று தாத்பர்யம். தான் தெளிகைக்காக शास्त्रार्थங்களை सत्तर्कங்களோடு கேட்கவேண்டுமென்பதில் प्रमाणம் காட்டுகிறார் **आर्षमित्यादिना** । **आर्षं** – ऋषिः – वेदः, तदर्थः आर्षः, तं. "तदुक्तं ऋषिणा" என்கிறவிடத்தில் ருஷிशब्दத்தை वेदपरமாக शिष्टர்கள் व्याख्यानம் செய்தார்களிறே. **धर्मोपदेशञ्च** – धर्मशास्त्रार्थத்தையும், **वेदशास्त्राविरोधिना** – प्रत्यक्ष-श्रुतिविरोधமில்லாத, **तर्केण** – समीचीनமான प्रमाणानुग्राहक तर्कத்தைக்கொண்டு, **यः** – யாதொருவன், **अनुसन्धत्ते** – युक्तமான முறையில் निश्चयिக்கிறானோ, **सः** – அவனே, **धर्मं** – श्रुतिस्मृत्युक्तधर्मத்தை, **वेद** – அறிகிறான். **इतरः** – समीचीनतर्कनिष्पाद्यமான शास्त्रार्थनिर्णय மில்லாதவன், **धर्मं न वेद** – पूर्वोक्तधर्मத்தையறியமாட்டான். மேலும் இப்படி समीचीन-तर्कங்களோடு शास्त्रार्थानुसन्धानம் பண்ணாதவர்கள் विपरीतராவார்களென்கிறார் **இவ் வர்थங்களை समीचीनतर्कங்களாலே தெளியாதவர்களीत्यादिना** । **काणादेति** । **काणादैः** – वैशेषिकशास्त्रनिष्ठैः, **शाक्यैः** – बौद्धैः, **पाषण्डैः** – पाशुपतमतस्थैः, **हैतुकராய்** – वेदविरुद्धहेतुवादिகளாய், शुष्कतार्किकர்களாய் என்றபடி. **प्रामाणिकार्थங்களை अपहरिப்பார்கள்** – सत्तर्कसहितप्रमाणங்

---

[2] மநுஸ்ம்ருதி 12-106.

[3] அத்ரிஸ்ம்ருதி.

**விபூதியையும் விபூதிமானையும் பற்றவிரண்டு வகையாயிருக்கும். அதில் விபூதிமானை யபஹரிக்கையாவது; ச்ரிய:பதியான ஸர்வேச்வரனை இல்லையென்னுதல், வேறொருத்தனை ஈச்வரனாகக் கட்டி ஸர்வேச்வரனை விபூதிகோடியிலே வைத்தல் செய்கை. விபூதியை யபஹரிக்கையாவது; விபூதியையொரு முகத்தாலேயில்லையென்னுதல், உண்டாக்கி யீச்வரனோடு ஸம்பந்தமறுத்து ஸ்வதந்த்ரமென்னுதல், பரதந்த்ரமாக்கித் தன்னோடு பிறரோடு புணைப்புதல் செய்கை. இவ்வபஹாரங்களிலேதேனு மொன்று ஸ்வரூபத்தில் ம்ருதுப்ரஜ்ஞனாயாத்ம ஸமர்ப்பணம் பண்ணினவனுக்கு விபரீதஸம்ஸர்க்கத்தாலே வருமாகில் [4]"दत्तस्य हरणेन च" என்கிற வபஹாரத்திலுங்கொடியதாய் களவு கொண்டு கொடுத்த**

களாலே ஸித்தங்களான அர்த்தங்களை இல்லை செய்வார்கள். இவ்வபஹாரத்தை விபஜித்துக் காட்டுகிறார் **இவ்வபஹாரம் விபூதியையும் விபூதிமானையும் பற்ற இரண்டு வகையாயிருக்கு**மிதி । அதில் விபூதிமதபஹாரம் க்ரூரமாகையால் முந்துற அதை நிரூபிக்கிறார் **அதில் விபூதிமானை அபஹரிக்கையாவது** இத்யாதினா । **ச்ரிய:பதியான ஸர்வேச்வரனை இல்லையென்னுதலி**தி । ஸர்வேச்வரனை யில்லையென்று சொல்வது நிரீச்வரமீமாம்ஸகஸாங்க்யர்களின் மதம். வேறொருத்தனையித்யாதி சைவாதிமதம். விபூத்யபஹாரத்தை நிரூபிக்கிறார் **விபூதியை அபஹரிக்கையாவது** இதி । **ஒரு முகத்தாலே** – வ்யாவஹாரிகஸத்ய மென்கிற பர்யாயத்தாலே, இது மாயிமதம். **உண்டாக்கி ஈச்வரனோடு ஸம்பந்தமறுத்து ஸ்வதந்த்ரமென்னுதலி**தி । **உண்டாக்கி** – ப்ராமாணிகமாக ஒப்புக்கொண்டு; இது விபூதியையும் ஈச்வரனையும் அங்கீகரித்து அவர்களுக்கு நியந்த்ருநியாம்யபாவத்தை ஒப்புக் கொள்ளாத ஸேச்வரஸாங்க்யாதிமதம். **பரதந்த்ரமாக்கித் தன்னோடு பிறரோடு புணைப்புதல் செய்கை** இதி । **தன்னோடு** – போக்த்ரு ஜீவனான தன்னோடு, **பிறரோடு** – தேவதாந்தரத்தோடு, **புணைப்புதல் செய்கை** – சேஷசேஷிபாவஸம்பந்தத்தைக் கட்டிவைத்தல். இது பகவத்ஸம்பந்தமற்ற கேவல சைவமதம். ஹைதுகஸம்ஸர்க்கம் இவ்வபஹாரங்களுக்கு ப்ரதானகாரணமாகையாலே ஸுதராம் பரிஹரணீயமென்கிறார் **இவ்வபஹாரங்களிலே ஏதேனுமொன்று** இத்யாதினா । அப்ரபந்ந விஷயத்தில் ஹைதுகஸம்ஸர்க்கம் வ்யாமோஹஜனகமாய் பாதகமானாலும் ப்ரபந்நனுக்கு பாதகமாகுமோ வென்ன ஸம்யங்ந்யஸ்தபரனுக்கு பாதகமாகாவிடிலும் ஸம்யங்ந்யஸ்தபரரல்லாதார்க்கு பாதகமா மென்கிறார் **ஸ்வரூபத்தில் ம்ருதுப்ரஜ்ஞனாயி**த்யாதினா । **ம்ருதுப்ரஜ்ஞனாய்** – தன் ஸ்வரூபத்தில் த்ருடமான சேஷத்வ நிச்சயமில்லாதவனாய், **ஆத்மஸமர்ப்பணம் பண்ணினவனுக்கு** – பகவச்சேஷத்வாநுஸந்தான-ரூபமான ஸ்வரூபஸமர்ப்பணம் பண்ணின ப்ரபந்நனுக்கு, **விபரீதஸம்ஸர்க்கத்தாலே வருமாகிலி**தி ।

[4] சாண்டில்யஸ்ம்ருதி.

**द्रव्यத்தை மீளக் களவு கொண்டாற்போலேயாம். ஆகையால் बहुविधங்களான व्यामोहकारणங்களில் हैतुक संसर्गம் போர परिहरணீயம்.**

**இவ்வர்த்தை [5]"पाषण्डिनो विकर्मस्थान् बैडालव्रतिकान् शठान् । हैतुकान् बकवृत्तींश्च वाङ्मात्रेणापि नार्चयेत्" [6]"डंभिहैतुकपाषण्डिबकवृत्तींश्च वर्जयेत्" [7]"नासद्भिः किञ्चिदाचरेत्" [8]"त्यज दुर्जनसंसर्गं" [9]"वरं हुतवहज्वालापञ्जरान्तर्व्यवस्थितिः । न शौरिचिन्ताविमुखजनसंवास-वैशस" मित्यादिகளிலே प्रपञ्चித்தார்கள். இந்த हैतुகரோட்டை संभाषणம்**

विपरीतसंसर्गத்தாலே पूर्वोक्तपहारान्यतमம் வருமாகிலென்றபடி. **दत्तस्य हरणेन च என்கிற अपहारத்திலுங்கொடியதாயிति** । अपहारம் கொடியது; दत्तापहारம் அதிலும் கொடியது; अपहृतदत्तापहारமதிலுங் கொடியது என்றभिप्रायம். அதை விவரிக்கிறார் **களவு கொண்டு கொடுத்த द्रव्यத்தை மீளக் களவுகொண்டாற்போலேயாமிति** । "योऽन्यथा सन्तमात्मानमन्यथा प्रतिपद्यते । किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा" என்கிறபடி अनादि-காலம் भगवच्छेषभूतமான स्वस्वरूपத்தை स्वतन्त्रமாக நினைத்து अपहरिத்துப்போந்தவிவன் भरसमर्पणकालத்தில் भगवच्छेषत्वानुसन्धानरूपस्वरूपसमर्पणத்தைச் செய்து हैतुकसंसर्गத்தால் மறுபடி தன் स्वरूपத்தை स्वतन्त्रமாக எண்ணினால் அது अपहृतदत्तापहारतुल्यமாமென்று திரு வுள்ளம். இது दत्तापहारத்திலும் கொடியதிறே. **ஆகையால்** – अनर्थावहங்களில் प्रधानமாகையால். **बहुविधங்களான व्यामोहकारणங்களில்** – अन्यदोषहैतुकसंसर्गादिरूपங் களான व्यामोहकारणங்களின் मध्यத்தில், **போரப்परिहरणीयம்** – सुतरां परिहरणीयம்.

இதில் प्रमाणம் காட்டுகிறார் **இவ்வர்த்தை** इत्यादिना । **पाषण्डिகள்** – योऽन्यं देवं परत्वेन, "ये तु सामान्यभावेन मन्यन्ते पुरुषोत्तमम् । ते वै पाषण्डिनो ज्ञेयाः" என்கிறபடி देवतान्तरத்தை भगवानைக்காட்டிலும் उत्कृष्टமாயும் भगवानுக்கு ஸமமாயும் எண்ணுமவர்கள், **विकर्मस्थர்** – शिखायज्ञोपवीतत्यागिகள். **बैडालव्रतिகர்** – बिडालवत् वञ्चकர்கள், **शठர்** – गूढமாக வஞ்சிக்குமவர்களாய் நாஸ்திகர்களான वेदाप्रामाण्यवादिகள். **बकवृत्तिகள்** – बकம் போல் सन्निहितहिंसकரான डम्भர். **वाङ्मात्रेणापि नार्चयेदिति** । सल्लापस्सहभोजनमित्यादिषु सल्लापस्यापि संसर्गत्वा-भिधानात् । **असत्துக்கள்** – ब्रह्मज्ञानமில்லாதவர்கள். **दुर्जनர்** – सज्जनस्थितिயை ஸஹியா தவர்கள். **हुतवहज्वालपञ्जरान्तर्व्यवस्थितिः** – अग्निज्वालैயால் கட்டப்பட்ட पञ्जरத்தில் இருப் பானது, **वरं** – मनाक् प्रियம். இதாகிலும் किञ्चित् प्रियமாயிருக்கும், "वरं त्रिषु क्लीबे मनाक् प्रिये" என்பது निघण्टु । **शौरिचिन्ताविमुखजनसंवासवैशसमिति** । **संवासवैशसं** – ஸஹவாஸமாகிற

[5] விஷ்ணுபுராணம் 3-18-101. மநுஸ்ம்ருதி 4-30.
[6] யாஜ்ஞ்யல்க்யஸ்ம்ருதி 1-130.
[7]

[8] பாரதம் ஆரண்யபர்வம்.
[9]

[10]"माययापहृतज्ञानाः" என்கிறபடியே கண்டு மதிகெட்டானாக்கி, [11]"चतुर्विधा मम जना भक्ता एव हि ते श्रुताः" என்று ஈச்வரன் நம்முடையவர்களென்னும் நாலு வகையிலுங் கூடாதே [12]"அளிய நம்பைய" லென்னாதபடி பண்ணி [13]"न मां दुष्कृतिनोमूढाः प्रपद्यन्ते" என்கிற भगवदभिमानबाह्यवर्गத்திலே கோப்புண்ணப்பண்ணும். अशरण्यशरण्यனான सर्वेश्वरனை शरणமாகப்பற்றுகிற परमास्तिकனுக்குச் சிலரோடு சேர்த்தியால் बाह्यதை வாராதாகிலும் அவனுக்குக் கலக்கங்கள் வரவும் அதுக்கு सदाचार्यர்கள் परिहारம் பண்ணவுங்காணா நின்றோம். महर्षिகளும் [14]"एकं यदि भवेच्छास्त्रं ज्ञानं निस्संशयं भवेत् । बहुत्वादिह शास्त्राणां ज्ञानतत्त्वं सुदुर्लभम् ॥" என்றும், [15]"निस्संशयेषु सर्वेषु नित्यं वसति वै हरिः ।

---

वधம்; दुःखमिति वा । न वरं – ஈஷத்தும் प्रियமன்று. இனி हैतुकसंभाषणத்தின் अनर्थावहत्वத்தைக் காட்டுகிறார் **இந்த हैतुकரோட்டை संभाषण**मित्यादिना । **கண்டு மதிகெட்டானாக்கி** – தெரிந்திருந்தும் புத்திகெட்டவனாகப்பண்ணி. **ஈச்வரன் நம்முடையவர்களென்னும் நாலுவகையிலுங்கூடாதே** – स्वविषयक भक्तिरूपसंबन्धத்தையிட்டு ஈச்வரனாலே நம்முடையவர்களென்று ஆதரிக்கப்பட்ட "आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च" என்கிற நாலு வகையிலுமन्तर्भूतனாகாதே, **அளிய** – स्निग्धனான, **நம்** – நம்முடைய, **பையல்** – குழந்தை, **என்னாதபடி பண்ணி** – என்றபிமானித்துச் சொல்லாதபடி பண்ணி, இப்படி भगवदभिमानविषयत्वத்தை உண்டு பண்ணாதமாத்ரமன்றிக்கே बाह्यवर्गத்திலும் சேர்க்குமென்கிறார் **न मामिति** । भगवद्विमुखர்களுக்கு हैतुकसंसर्गத்தாலே बाह्यतै संभावितமானாலும், वेदान्तश्रवणादिகள் பண்ணி परमास्तिकனாய்ப்போந்தவனுக்கு बाह्यतै வருமோவென்ன வருளிச்செய்கிறார் **अशरण्यशरण्यனான** इति । **அவனுக்குக் கலக்கங்கள் வரவும்** इत्यादि । எம்பாருக்கு यादवप्रकाशादिसंसर्गத்தாலே देवतान्तरसंसर्गपर्यन्तமான கலக்கம் நேர்ந்ததையும், அவர் பெரிய திருமலை நம்பியினுடைய उपन्यासोपदेशादिகளாலே திருந்தி, परमैकान्तिसार्वभौमரானதையும் இங்கே अनुसन्धिப்பது. இப்படி भगवदाश्रितர்களுக்கும் संशयமுண்டாகுமென்றும், संशयமுண்டானால் भगवान् விலகிவிடுவாரென்றும் महर्षिகளே சொன்னார்களென்கிறார் **महर्षिகளு**मित्यादिना । **एकं यदि** என்கிற वचनம் साधारणமாகையாலது भगवदाश्रितருக்கும் संशयமுண்டாகுமென்பதில் प्रमाणமாகு

---

[10] கீதை 7-15.
[11] பாரதம் ஶாந்திபர்வம் 350-33.
[12] திருமாலை 37.
[13] கீதை 7-15.
[14] இதிஹாஸஸமுச்சயம் 33-105.
[15] பாரதம் ஶாந்திபர்வம் 859-71.

**ससंशयान् हेतुबलान्नाद्ध्यावसति माधवः ॥'' என்றுஞ்சொன்னார்களிறே. [16]''न क्रोधो न च मात्सर्यं न लोभो नाशुभामति''रित्यादிகளும் आत्मगुणपरिपूर्णाधिकारिविशेषविषयத்திலேயாகக்கடவன. ஆனபின்பு आरुरुक्षुக்களுக்குக் கலக்க முண்டென்னுமிடம் [17]''श्रूयते किल गोविन्दे भक्तिमुद्वहतां नृणाम् । संसारन्यूनताभीतास्त्रिदशाः परिपन्थिनः'' [18]''सत्यं शतेन विघ्नानां सहस्रेण तथा तपः । विघ्नायुतेन गोविन्दे नृणां भक्तिर्निवार्यत'' इत्यादिகளிலே प्रसिद्धम्.**

**அதில் முற்பட सिद्धोपायத்தைப் பற்ற வருங்கலக்கங்களும் அவற்றின் परिहारங்களுஞ் சொல்லுகிறோம். अनादिकालम् अनादरित्த ஈச்வரன் இன்றொ**

---

மென்று கருத்து. **शास्त्रं एकं भवेद्यदि** – எல்லா शास्त्रங்களும் एककण्ठமாகுமாகில், **बहुत्वात्** – भिन्नाभिप्रायकत्वात्, **नित्यं वसति** – नित्यं सन्निहितो भवति । **नाद्ध्यावसति** – விட்டுப்போகிறானென்கை. இவ்வசனங்களில் शास्त्रतात्पर्यभेदத்தினாலும், हेतुबलத்தினாலும் संशयமுண்டாகுமென்று சொல்லியிருப்பதால் இது भगवदाश्रितருக்கும் संभावितமென்று கருத்து. இப்படியானால் भगवदाश्रितர்களுக்கு संशयादि रूपाशुभबुद्धिயுண்டாகாதென்று சொல்லுகிற ऋषिवचनத்திற்கு கதி என்னவென்னவருளிச்செய்கிறார் **न क्रोधो न च मात्सर्यमित्यादिना । आत्मगुणपरिपूर्णाधि-कारिविशेषविஷயத்திலேயாகக்கடவன** इति । हैतुकர்களுடைய हेतुवादங்களாலும், राजसतामसशास्त्रங்களாலும் கலங்காத सात्त्विक शास्त्रजन्यसमीचीनज्ञानादिरूपात्मगुणपरिपूर्णाधिकारि-विशेषविஷயமென்றபடி. **ஆனபின்பு** – न क्रोध इति वचनम् आरूढனான पूर्णाधिकारि விஷயமான பின்பு, **आरुरुक्षुக்களுக்கு** – भगवद्विषयத்தில் आरोहणम் பண்ண இச்சிப்பவர்களுக்கு, अपूर्णाधिकारिகளுக்கு என்றபடி. **श्रूयत** इत्यादि । **उद्वहतां** – वोढुमिच्छतां, இந்த வசனத்தில் त्रिदशबन्धार्हமான भक्त्युद्वहनम् श्रुतமாகையாலும், सत्यं शतेन என்கிற வசனத்தில் भक्तिशब्दम् निवारणार्हமான भक्तिயைச் சொல்லுகையாலும் இவ்விரண்டு வசனங்களும் आरुरुक्षु விஷயமாக सिद्धिக்கையால் आरुरुक्षुக்களுக்கே भक्तिविघ्नादिகளைச் சொல்லுகிறதென்று திருவுள்ளம். இதனால் मृदुप्रज्ञர்களுக்கு सिद्धोपायादिविஷயத்தில் கலக்கமுண்டாகுமென்று सिद्धिக்கையால் तत्परिहारार्थम् स्थिरीकरणभागारम्भम् आवश्यकமென்று முடிந்தது.

அதில் सिद्धोपायम् प्रधानமாகையால் तद्विषयகலக்கங்களையும், तत्परिहारங்களையும் முதலில் சொல்லுவதாக प्रतिज्ञैசெய்கிறார் **அதில் முற்படவீत्यादिना** । இந்தக் கலக்கம் ईश्वरனுடைய स्वातन्त्र्यसहजकारुण्यमूलकமாயும் पत्नीसंबन्धविषयकமாயும் गुणविशेष-

---

[16] பாரதம் ஆநுசாஸநிகபர்வம் 254-135.
[17] விஷ்ணுதர்மம் 2-25.
[18] விஷ்ணுதர்மம் 74-94.

**ருத்தனை யாத³ரிக்கிறது தன் ஸ்வாதந்த்ர்யமாத்ரத்தாலேயன்றோ; இங்ஙனன்றாகில் [19]''இன்றென்னைப் பொருளாக்கித் தன்னையென்னுள் வைத்தான் அன்றென்னைப் புறம்போகப் புணர்த்ததென் செய்வா'' னென்று ஆழ்வார் விண்ணப்பஞ்செய்ய, ஸர்வேஶ்வரன் [20]''சூழ் விசும்பணிமுகில் தூரியமுழக்கின'' விதொழிய வேறொரு வுத்தரமருளிச் செய்தானோ; ஆகையால் நாமொரு உபாயாநுஷ்டாநம் பண்ணுகையென்னென்பது, [21]''நடுவே வந்துய்யக்கொள்கின்ற நாத'' னென்கிறபடியே அருள் புரிந்த சிந்தை**

संबन्धविशेषमूलकமாயும் மூன்றுவிधமாக வருமென்று उपपादित्து क्रमेण परिहरिக்கக்கருதி அதில் ईश्वरस्वातन्त्र्यसहजकारुण्यमूलकமாக வரும் கலக்கத்தை அனுவदிக்கிறார் **अनादिकाल-मित्यादिना** । ईश्वरன் सिद्धोपायனாய் सर्वदा இருக்கச் செய்தேயும் அனாதிகாலமாக ஆதரிக்காமல் இப்பொழுது ஆதரித்தால் இவ்வாதரத்திற்கு हेत्वन्तरमनुपलब्धिपराहतமாகையாலே स्वातन्त्र्यमात्रமே कारणமாகவேண்டுமென்று கருத்து. हेत्वन्तरம் நமக்குத் தெரியாமல் ईश्वरमात्रज्ञातமாய் संभावितமாகலாமாகையால் அங்கு स्वातन्त्र्यमात्रமே कारणமென்று निर्णयिக்கமுடியுமோ வென்ன வருளிச்செய்கிறார் **இங்ஙனன்றாகிலி**ति । स्वातन्त्र्यमात्रமே कारणமென்று ஒப்புக்கொள்ளாவிடில் நம்மாழ்வார் श्रीसूक्तिविरोधத்தைக் காட்டுகிறார் **இன்றி**ति । **இன்று** – இப்பொழுது, **என்னை** – அடியேனை, **பொருளாக்கி** – वस्तुவாக்கி, ब्रह्मज्ञानமுள்ளவனாகப்பண்ணி, **தன்னை** – सर्वोत्कृष्टனான தன்னை, **என்னுள்** – என்னுடைய மனஸ்ஸிலே. **வைத்தான்** – निरन्तरध्यान விஷயமாகும்படி स्थापित्தான். **அன்று** – पूर्वकालத்தில், **என்னை** – एतादृशனாக வேயிருந்த என்னை, **புறம் போக** – बाह्यविषयप्रवणனாகவேபோகும்படி, **புணர்த்தது** – சேர்த்துவைத்தது. **என்செய்வான்** – எதற்காகச் செய்தான். இன்றும் நாம் ஒரு व्याजமனுஷ்டித்ததாகக் காணோம். நீ கண்டாயாகில் சொல்லவேண்டுமென்பது शङ्काभिप्रायம். **விண்ணப்பம் செய்ய** – विज्ञापिக்க, **சூழ்** – व्याप्तமான. **விசும்பு** – आकाशத்திற்கு, **அணி** – अलङ्कारமான, **முகில்** – மேகமாகிற, **தூரிய** – तूर्यवाद्यத்தை, **முழக்கினது** – வாசித்தது, **இது ஒழிய** – परमपुरुषार्थ प्रापणसन्नाहமொழிய, व्याजविषयமாக ஒரு प्रत्युत्तरமும் அருளிச்செய்யவில்லையே, व्याजமிருந்தால் சொல்லானோ என்று கருத்து. **ஆகையால்** – स्वातन्त्र्यातिरिक्त व्याजமில்லையாகையால், **என்னென்பது** – எதற்காக, व्यर्थமென்று கருத்து. இப்படியாகில் स्वातन्त्र्यமனாதியாச்சுதே;

[19] திருவாய்மொழி 10-8-9.
[20] திருவாய்மொழி 10-9-1.
[21] திருவாய்மொழி 1-7-5.

**அடியார்மேல் வைத்து அவன் தானே ரக்ஷித்தபோதுகாணுமத்தனை யன்றோ வென்று சிலர் கலங்குவர்கள். இவர்களைத் தெளிவிக்கும் படி, ஈச்வரன் ஸ்வதந்த்ரனேயாகிலும் வைஷம்யநைர்க்ருண்யங்களாகிற தோஷங்கள் தனக்குத் தட்டாமைக்காக இவன் பக்கலிலே யொரு வ்யாஜத்தையுண்டாக்கி அத்தை அவலம்பித்துத் தான் ரக்ஷிக்கும். இவ்வர்த்தை [22]"திருமாலிருஞ்சோலை மலையென்றேனென்னத் திருமால் வந்தென்னெஞ்சு நிறையப் புகுந்தா" னென்றாழ்வார் தாமே யருளிச்செய்தார். இந்த வ்யாஜந்தானும் ஈச்வரன்ற ன்னாலேயாகிலித்தை முன்பேயுண்டாக்காதே விட்டதென்னென்னில்;**

இத்தனை காலம் மோக்ஷம் வாராமைக்கும் இப்போது வருகைக்கும் காரணமுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் **நடுவே வந்துய்யக்கொள்கின்றநாதனி**தி । **நடுவே** மத்யத்தில், இப்போது வருமென்று ஸம்பாவனையில்லாதவேளையிலே யென்றபடி, **வந்து** – ஆகஸ்மிகமாக வந்து, **உய்யக்கொள்கின்ற** – உஜ்ஜீவிவிக்கப்பண்ணுகிற, **நாதன்** – ஸ்வாமி, அனனுயோஜ்யனான ஸ்வதந்த்ரனென்றபடி. **அருள் புரிந்த சிந்தை** – தயா-ஸம்ஶ்லிஷ்டமான திருவுள்ளத்தை, **அடியார்மேல்** – தாஸர்கள் மேல், **வைத்து** – ஸ்வாதந்த்ர்ய மடியாக வைத்து, **அவன்தானே** – அந்த ஸ்வதந்த்ரஸ்வாமியே, **ரக்ஷித்தபோது காணு மத்தனையன்றோ** – ரக்ஷித்த காலத்திலே காணும் ஃபலம் வருமத்தனையன்றோ? இதற்கு பரிஹாரம் சொல்ல ஆரம்பிக்கிறார் **இவர்களைத் தெளிவிக்கும்படி** இதி । **தெளிவிக்கும்படி** – தெளிவிக்கும் ப்ரகாரம், சொல்லுகிறோமிதி ஶேஷ: । **வைஷம்யம்** – பக்ஷபாதம், அதாவது — நிமித்தமில்லாமலிருக்க ஒருத்தனை பத்தனாகவும், ஒருத்தனை முக்தனாகவும் பண்ணுகை. நைர்க்ருண்யமாவது — காரணமின்றிக்கே ஒருவனை க்லேஶிப் பிக்கை, **அத்தையவலம்பித்துத்தான் ரக்ஷிக்கு**மிதி । அவதாரணார்த்தமான "தான்" ஶப்தத் தால் வ்யாஜாவலம்பனமின்றிக்கே ரக்ஷியானென்று சொல்லப்பட்டது வ்யாஜஸாபேக்ஷனாகவே ரக்ஷிக்கிறானென்பதை நம்மாழ்வாரே அருளிச்செய்தாரென்கிறார் **இவ்வர்த்தை** இத்யாதினா । **திருமாலிருஞ்சோலைமலையென்றெனென்ன** இதி । திருமாலிருஞ் சோலைமலை என்று உச்சரித்ததை வ்யாஜமாகக்கொண்டென்றபடி. **திரு** – லக்ஷ்மி யினிடத்திலே, **மால்** – வ்யாமோஹத்தையுடைய ஶ்ரிய:பதி, **வந்து** – வ்யாஜோத்தரகாலமே வந்து, **என் நெஞ்சு நிறைய** – என் நெஞ்சு பரிபூர்ணமாகும்படி, **புகுந்தான்** – ப்ரவேஶித்தான். இந்த வ்யாஜத்திற்கு ஈச்வரன் காரணமில்லாவிடில் ஸர்வகாரணத்வபங்கம் வரும், அவன் காரண மாகில் இத்தனைகாலம் இந்த வ்யாஜத்தை யுண்டாக்காதது ஸ்வாதந்த்ர்யத்தினாலேயே யன்றோ என்று ஶங்கிக்கிறார் இந்த **வ்யாஜந்தானு**மித்யாதினா । உத்தரமருளிச்செய்கிறா்

---

[22] திருவாய்மொழி 10-8-1.

**இவ்வாத்மாக்களுக்கநாதியான கர்மப்ரவாஹங்கள் விஷமவிபாகஸமயங்களாய்க் கொண்டு போருகையாலே ஈச்வரன் கர்மானுரூபபலப்ரதனல்லாதபோது வைஷம்ய-தோஷம் வருகையாலே முன்பிதுக்கவஸரமாயிற்றில்லையென்னுமிடம் கார்யவிசேஷதர்சனத்தாலே கல்பிதம். இங்ஙனிசையாத போது ஸர்வஸித்தாந்திகளுக்கு மிதுக்கு முன்பில்லாத மோக்ஷச்ரத்தாதிகளிப்போது பிறக்கைக்கடியென்னென்றாலுத்தரஞ்சொல்லவிரகில்லை. அநாதிகர்மப்ரவாஹவைசித்ர்யத்தாலே யென்னுமுத்தரம் ஈச்வரனை இசைந்தார்க்கு மிசையாதார்க்கும் துல்யம். ஈச்வரஸ்வாதந்த்ர்யமொரு வ்யாஜத்தைக்கொண்டு அவன் நினைத்தபோதே ரக்ஷிக்கைக்கும்**

**இவ்வாத்மாக்களுக்கி**த்யாதினா । **கர்மப்ரவாஹங்கள் விஷமவிபாகஸமயங்களாய்க்கொண்டு போருகையாலே** இதி । இதனால் வ்யாஜம் கர்மவிபாகஜன்யமாகையால் இந்த வ்யாஜஜனகமான கர்மவிபாகம் இத்தனை காலம் உண்டாகவில்லையென்று ஸூசிதம். ஈச்வரன் ஸர்வ-காரணமாகையாலே இந்த வ்யாஜத்தை முன்பே உண்டுபண்ணக்கூடாதோ என்னில்; உத்தரமருளிச்செய்கிறார் **ஈச்வரனி**த்யாதினா । ஈச்வரன் ஸ்வதந்த்ரனாய் ஸர்வகாரணமாக இருந்தாலும் தன்னிடத்தில் வைஷம்யாதிதோஷம் வாராமைக்காக கர்மானுரூபமாகவே பலத்தைத் தருவதாக ஸங்கல்பித்திருப்பதால் இத்தனை காலம் இந்த வ்யாஜானுகுணமான கர்மபரிபாகம் வரவில்லையென்றும் இப்பொழுது தான் அவ்வித கர்மத்திற்கு பரிபாகம் வந்ததென்றும், வ்யாஜ-ரூபகார்யதர்சனத்தாலே கல்பிக்கவேண்டுமென்று திருவுள்ளம். இப்படி இந்த வ்யாஜம் விஷமவிபாகஸுக்ருதஸாபேக்ஷமென்றும், ஈச்வரன் தான் ஸுக்ருதஸாபேக்ஷனாகவே வ்யாஜத்திற்குக் காரணமாகிறானென்றும் ஒப்புக்கொள்ளாதபோது பாதகமருளிச்செய்கிறார் **இங்ஙனிசையாதபோது** இத்யாதினா । ஈச்வரஸ்வாதந்த்ர்யமே மோக்ஷகாரணமென்று சொல்லுமவர்களும் ஸ்வாதந்த்ர்யம் சக்திவிசேஷமென்றால் ஸர்வதா மோக்ஷம்வர ப்ரஸங்கிக்குமாகையாலும் இச்சையென்றால் அது நிர்ஹேதுகமாக வாராதாகையாலும் ஸுக்ருதவிசேஷமூலமாகவே ஒப்புக்கொள்ளவேண்டுமென்று கருத்து. ஈச்வரனையங்கீகரியாதார்க்கு விசித்ரகர்ம ப்ரவாஹமூலத்வேன வ்யவஸ்தை வேண்டுமாகிலும் நாம் ஈச்வரஸ்வாதந்த்ர்யமடியாகவே வ்யவஸ்தை கொள்ளவேண்டாவோ வென்னவருளிச்செய்கிறார் **அநாதீ**த்யாதினா । ஈச்வரஸ்வாதந்த்ர்யமும் ஈச்வரனிடத்தில் வைஷம்யநைர்க்ருண்யம் தட்டாமைக்காக கர்மஸாபேக்ஷமென்றே கொள்ளவேண்டுமாகையல் ஈச்வரனை இசைந்தார்க்கும் இசையாதார்க்கும் இது துல்யமென்று திருவுள்ளம். ஈச்வரன் வ்யாஜஸாபேக்ஷனாகவே ரக்ஷிக்கிறானென்றால் அவன் ஸ்வாதந்த்ர்யத்திற்கு நைஷ்பல்யம் வாராதோவென்ன வருளிச்செய்கிறார் **ஈச்வரஸ்வாதந்த்ர்யமி**த்யாதினா । ஈச்வரஸ்வாதந்த்ர்யம் ரக்ஷணத்தில் வ்யாஜஸாபேக்ஷமானாலும் வ்யாஜமுண்டானவுடனே ரக்ஷிக்கைக்கும் விலக்குவாரில்லாமைக்கும் ஹேதுவாகையால் நிஷ்பலமாகாதென்று கருத்து. இப்படியாகில் "இன்றென்னைப் பொருளாக்கி"

விலக்கவல்லாரில்லாமைக்குமுறுப்பாம். இப்படியானால் "இன்றெ ன்னை" யென்கிற பாட்டுக்கும் இதுக்கு மூலமான வசனங்களுக்கும் நிர்வாஹ மென்னென்னில்; அது சொல்லுகிறோம்; ஈஶ்வரனுக்கு ஸஹஜங்களான ஸ்வாதந்த்ர்யகாருண்யங்களினுடைய ப்ராதாந்யத்தாலே இவற்றுக்கு வ்யாஜபூதங்களான விஶேஷகாரணங்களை அநாதரித்து பண்டென்னை பராங்முகனாக்குகைக்கும், இன்றென்னை அபிமுகனாக்குகைக்கும் உன் ஸ்வாதந்த்ர்யமும் க்ருபையுமொழிய வேறொரு ப்ரதானகாரணங்கண்டிலேன்; எனக்குக் காட்டாதே ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான நீ கண்டதுண்டாகிலருளிச்செய்யவேணுமென்ன ஈஶ்வரன் நிருத்தரனாயிருக் கிறவிருப்பாலே ஸ்வாதந்த்ர்யக்ருபைகளினுடைய ப்ராதாந்யத்தை நாட்டுக்கு வெளியிடு கிறார். இத்தால், இச்சேதனனை லீலோபகரணமாக்குகைக்கு ப்ரதானகாரணம் ஈஶ்வர- ஸ்வாதந்த்ர்யம், இதுக்கு ஸஹகாரிகாரணம் ப்ரவாஹாநாதியான ஸ்வதந்த்ராஜ்ஞாதிலங்கனம், இவனை போகோபகரணமாக்குகைக்கு ப்ரதானகாரணம் ஈஶ்வரனுடைய ஸ்வாபாவிககாருண்யம், இதுக்கு ப்ரதிபந்தகமான ஈஶ்வரநிக்ரஹத்தை ஶமிப்பித்துக்கொண்டு ஸஹகாரிகாரணமென்று

---

என்கிற பாசுரத்தில் நம்மாழ்வார் இப்படி இன்றென்னைப்பொருளாக்குகைக்கு வ்யாஜமென்னவென்று கேட்க அதற்கு ஈஶ்வரன் ப்ரத்யுத்தரம் சொல்லாததற்கும், இப் பாட்டுக்கு மூலமான வசனத்திற்கும் அபிப்ராயமென்ன வென்ன வருளிச்செய்கிறார் **இப்படியானாலி**த்யாதினா । **ஸ்வாதந்த்ர்யகாருண்யங்களினுடைய ப்ராதாந்யத்தாலேயிவற்றுக்கு வ்யாஜபூதங்களான விஶேஷகாரணங்களை அநாதரித்து** இதி । ஆழ்வார் இத்திருவாய் மொழியின் ஆரம்பத்தில் "திருமாலிருஞ்சோலைமலையென்றேன்" என்று விஶேஷகாரணங்களைத் தாமே சொல்லியிருக்கச்செய்தேயும் ஸ்வாதந்த்ர்யகாருண்யங்களினு டைய ப்ராதாந்யத்தாலே அதை அநாதரித்து என்றபடி. **பண்டென்னை** இத்யாதி । ஈஶ்வர- ஸ்வாதந்த்ர்யமே மோக்ஷஹேதுவென்கையும், அது வ்யாஜநிரபேக்ஷமென்கையும், வைஷம்யநைர்க்ருண்யாபாதகமா கையால் யுக்தமன்று. ஸ்வாதந்த்ர்யத்தைப்போல் காருண்யமும் அநாதியாக உள்ளது. சேதனர் களுடைய அநாதரத்திலும் ரக்ஷணத்திலுமிவைகளே ப்ரதானகாரணங்கள். இவையொழிய ப்ரதானகாரணம் வேறுண்டோவென்று ப்ரஶ்நாபிப்ராயம். **ஈஶ்வரனீ**த்யாதி । ப்ரதானகாரணாந்தரமில்லா மையால் ஈஶ்வரன் ப்ரத்யுத்தரம் சொல்லாமலிருந்தானென்றபடி. இப்படி கேவலஸ்வாதந்த்ர்யமும், கேவலகாருண்யமும் ப்ரதானகாரணங்களாகில் நைர்க்ருண்யமும் ஸர்வமுக்திப்ரஸங்கமும் வாராதோவென்னில்; ஸஹகாரிகாரணஸாபேக்ஷங்களாகையால் வாராதென்கிறார் **இத்தாலி**தி । **இதுக்கு ஸஹகாரி- காரணம் ப்ரவாஹாநாதியான ஸ்வதந்த்ராஜ்ஞாதிலங்கனமி**தி । இதனால் இச்சேதனனுடைய பந்தத்திற்கு ஸ்வாதந்த்ர்யம் ப்ரதானகாரணமாகிலும் இதற்கு ப்ரவாஹாநாதியாக வந்த ஆஜ்ஞாதிலங்கநாதிகள் ஸஹகாரி- காரணங்களாகையால் ஈஶ்வரனுக்கு நைர்க்ருண்யப்ரஸங்கமில்லையென்று ஸூசிதம். இப்படியே

**சுக்ருத விசேஷங்களாலே நியதரானவதிகாரிவிசேஷங்களைப் பற்ற வென்னுமிடம் இவர்களுடைய பூர்வாபரவ்ருத்தாந்தங்கள் சொல்லுகிற புராணாதிகளிலே ப்ரஸித்தம். இப்படி பகவத்க்ஷேத்ரத்தில் ஶரீரவிஶ்லேஷாதிகள் மோக்ஷோபகாரகமாமென்றதுவும் பஶ்வாதிகளைப்போலேயாகிலும் ப்ராதிகூல்யமில்லாதார்க்குபகாரகமாமென்றபடி. இங்ஙனல்லாதபோது அங்கே பகவத்ப்ராதிகூல்யம் பண்ணப்புகுந்துபட்டவர்களுக்கும் மோக்ஷமுண்டாகப் ப்ரஸங்கிக்கும். [43]"दुष्टेन्द्रियवशाच्चित्तं नृणां यत्कल्मषैर्वृतं। तदन्तकाले संशुद्धिं याति नारायणालये" என்கிற ஸ்ரீஸாத்வதவசனமும் க்ஷேத்ரவாஸாதிதத்பரரானார்க்கு ஶாஸ்த்ரவிரோதமில்லாத ஶப்தாதிப்ராவண்யத்தாலே முன்பு பகவத்ஸாக்ஷாத்காராதிகளில்லையேயாகிலும் அந்திமகாலத்திலே தெளிவுண்டாமென்னுமிவ்வளவிலே தத்பரமென்னுமிடம் ப்ரகரணாதிஸித்தம். [44]"यं योगिनः प्राणवियोग काले**

---

வசனம். **ஏதேனுமொருவகையாலே துவக்குண்டாரும் பிழைப்பாரென்றதுவுமிதி** । காமினீகாமுகபாவத்தாலேயோ, த்வேஷித்வேஷ்யபாவத்தாலேயோ ஏதேனுமொரு ப்ரகாரத்தாலே பகவத்ஸம்பந்தவான்களும் உத்தீர்ணராவர்களென்று புராணத்தில் சொன்னதுவும், **यया कया च विधया संबन्धस्स तु पावनः என்றதுவுமிதி** । अनुकूलतया प्रतिकूलतया वा भगवत्संबन्धம் பாபவிமோசகமென்று சொன்னதுவுமென்றபடி. இது ஸ்ரீரங்கமாஹாத்ம்யவசனம். **பூர்வஸுக்ருதவிசேஷங்களாலே நியதரான அதிகாரிவிசேஷங்களைப்பற்றவென்னுமிடமித்யாதி** । இந்த ஜந்மத்தில் சைத்யாதிகளுக்கு த்வேஷாதிஸம்பந்தமிருந்தாலும் அவைகள் பூர்வம் த்வாரபாலகர்களாயிருந்துபண்ணின கைங்கர்யரூபஸுக்ருதவிசேஷங்களோடே கூடினதுகளாய் மோக்ஷபர்யந்தபலப்ரதங்களாயிற்றென்பது பாகவதாதிபுராணங்களிலே ப்ரஸித்தமென்றபடி. நாமஸங்கீர்த்தனாதிகள் பகவத்த்வேஷமில்லாதவனுக்கே எப்படி பாவனங்களோ அப்படியே புண்யக்ஷேத்ரத்தில் ஶரீரவிஶ்லேஷாதிகளும் ப்ராதிகூல்யமில்லாதார்க்கே உபகாரகங்களென்கிறார் **இப்படி பகவத்க்ஷேத்ரத்திலிதி** । இப்படி யங்கீகரிக்காவிட்டால் பாதகமருளிச்செய்கிறார் **இங்ஙனல்லாதபோது** இத்யாதினா । இப்படியாகில் "दुष्टेन्द्रियवशात्" என்கிற ஸாத்வதஸம்ஹிதாவசனத்திற்கு பாவமென்னென்ன வருளிச்செய்கிறார் **துஷ்டேந்த்ரியேத்யாதியால்.** க்ஷேத்ரவாஸதத்பரனுக்கு அஶாஸ்த்ரீயமல்லாத இந்த்ரியஜன்யஶப்தாதிவிஷயப்ராவண்யமே கல்மஷமேயொழிய பகவத்த்வேஷாதிகளன்று; அந்திமகாலத்தில் க்ஷேத்ரமாஹாத்ம்யத்தாலே அந்த கல்மஷம்போய் தெளிவு உண்டாமென்பதிலேயே அந்த ஶ்லோகத்திற்குத் தாத்பர்யமென்பது ப்ரகரணஸித்தமென்று கருத்து. ப்ராதிகூல்யவர்ஜிதமான க்ஷேத்ரவாஸத்தின் ப்ரபாவத்தைக் காட்டுகிறார் **यं योगिन** இதி । அந்திமகாலத்தில் யோகிகள் மஹதா

---

[43] ஸாத்வதஸம்ஹிதை 7-120.
[44] பாரதம் சாந்திபர்வம் 46-143.

**यत्नेन चित्ते विनिवेशयन्ति'' என்று சொல்லப்படுகிற स्वयत्नापेक्षையற अन्तिम- காலத்திலே இவர்களுக்குத் தெளிவு வருகிறவிதுவேற்றம். இது [45]''केवलं मदीयैव दययातिप्रबुद्धः'' என்று प्रपन्नविषयத்திலும் प्रदर्शितம். ஆகையால் भगवत्प्रतिकूलர்க்கு प्रातिकूल्यशेषமான रूपनामक्षेत्रवाससंकीर्तनादिகள் தஞ்சமாகாது. पुण्यक्षेत्रங்களில் பண்ணும் प्रतिकूलाचरणங்கள் மிகவும் बाधकங்களாமென்னு மிடம் बहुशास्त्रसिद्धம். இதுவும் भगवत्प्रभावம். भगवत्प्रवणர்க்கு वृत्रன் क्षत्रबन्धु- வுள்ளிட்டார்க்குப்போலே உள்ள வானுகூல்யங்கள் தானேயெல்லா दोषங் களையுமொரு விரகாலே போக்கியுத்तारकங்களாம். ஆனபின்பு स्वसङ्कल्प-**

प्रयत्नेन भगवाனை चित्तத்தில் வைத்து எம்மாதிரி अनुभविப்பார்களோ அவ்வனுभवம் प्रातिकूल्यமில்லாத क्षेत्रवासத்தாலே प्रयत्नமின்றிக்கே सिद्धिக்குமென்பது क्षेत्रवासप्रभावமென்று கருத்து. இப்படி प्रयत्नமின்றிக்கே अन्तिमकालத்தில் தெளிவையுண்டாக்கும் प्रभावம் प्रपत्तिக்குமுண்டென்று முன்பே சொல்லப்பட்டதென்கிறார் **இது** इत्यादिना । उक्तार्थத்தை निगमिக்கிறார் **ஆகையாலி**त्यादिना । प्रातिकूल्याचरणமில்லாத क्षेत्रवासादिகளே पावनங்களா மென்று கருத்து. क्षेत्रங்களில் பண்ணும் प्रतिकूलाचरणம் क्षेत्रमाहात्म्यத்தாலே अधिकமான बाधकமாமென்று शास्त्रம் சொல்லித்தென்கிறார் **पुण्यक्षेत्रங்களிலி**त्यादिना । **बहुशास्त्रसिद्धமி**ति । ''तीर्थे पापं न कुर्वीत विशेषात्तु प्रतिग्रहम् । दुर्जरं पातकं तीर्थे दुर्जरश्च प्रतिग्रह'' इत्यादिशास्त्रसिद्धமென்றபடி. **இதுவும் भगवत्प्रभावமி**ति । क्षेत्रान्तरத்தில் பண்ணும் प्रातिकूल्याचरणத்தைக்காட்டிலும் भगव- त्क्षेत्रத்தில் பண்ணும் प्रातिकूल्यத்திற்கு अधिकबाधकावहत्वம் भगवत्प्रभावकृतமென்று கருத்து. इतरस्थलத்தில் अनुकूलाचरणத்தாலே வரும் पुण्यத்தைக் காட்டிலும், எப்படி भगवत्क्षेत्रத்தில் अनुकूलाचरणத்த்தாலே வரும் पुण्यம் நூறுபங்கு अधिकமாய் उत्कटसुखादिजनकமோ, அப்படியே भगवत्क्षेत्रத்தில் பண்ணும் प्रतिकूलाचरणம் अधिकपापजनकமாய் बाधकावहமா மென்று கருத்து. ननु भगवत्क्षेत्रத்தில் अनुकूलाचरणமும் प्रतिकूलाचरणமும் अधिकமான पुण्यத்திற்கும் पापத்திற்கும் जनकமாகில் भगवत्क्षेत्रத்தில் வஸிக்கும் भगवत्प्रवणனுக்கு अनुकूलाचरणம்போல் निषिद्धाचरणமும் நேர்ந்தால் எப்படி முடிவு என்ன வருளிச் செய்கிறார் **भगवत्प्रवणர்க்கு** इत्यादिना । **वृत्रன்** – वृत्रासुरன், **क्षत्रबन्धु** – पापिष्ठனான ஒரு ராஜா, **उत्तारकங்களாமி**ति । भगवत्प्रवणருக்கு आनुकूल्यங்களும் दोषங்களுமிருந்தாலும் वृत्रक्षत्रबन्धुக்களுக்குப்போல் आनुकूल्यங்களே बलिष्ठங்களாய் दोषங்களையெல்லாம் போக்கடித்து मोक्षान्तமான फलத்தைக் கொடுக்குமென்று கருத்து. இப்படி भागवतர்கள் अनुवृत्तदोषர்களானாலும் उपायத்தின் प्रभावத்தாலே उत्तीर्णர்களாவர்களாகையால் भागवत-

---

45 ஶரணாகதிகத்யம்.

**நியதமாயிருப்பதேதேனுமொரு வ்யாஜத்தாலே ஸர்வேச்வரன் ஸ்வரூபப்ராப்தமான முக்தைச்வர்யங்கொடுக்க நினைப்பிட்டவதிகாரிகள் பக்கலுள்ள தோஷங்களுக்குச் செலவு செய்வான் [46]''एकश्शास्ता न द्वितीयोऽस्ति शास्ता'' என்றும், [47]''प्रशासितारं सर्वेषां'' என்றும், [48]''शास्ता विष्णुरशेषस्य'' என்றுஞ்சொல்லப்படுகிற இவன் தானே யென்று தெளிந்து [49]''रागादि दूषिते चित्ते नास्पदी मधुसूदनः । न बध्नाति रतिं हंसः कदाचित्कर्दमांभसी'' त्यादिகளைப்பார்த்து நெகிழாதே இவ்வதிகாரிகள் பக்கலுள்ள குணாம்சத்தை மருபூமியில் தண்ணீர்பெற்றாற்போலே யுகந்து [50]''कर्मणा मनसा वाचा यदभीक्ष्णं निषेवते । तदेवापहरत्येनं तस्मात्कल्याणमाचरेत्'' என்கிற படியே கரணத்ரயத்தாலும் தான் நல்வழி கைவிடாதே [51]''संसारविषवृक्षस्य द्वे फले ह्यमृतोपमे । कदाचित्केशवे भक्तिस्तद्भक्तैर्वा समागमः'' என்றிங்கிருந்த காலத்துக்கு ப்ரயோஜனமாகவெடுத்த பரமனைப் பயிலுந்திருவுடைய சிறுமாமனிசருடன் சேர்த்தியாகிற சீரியபெறாப்பேற்றைத் திருவருளாலே பெற்றோமென்று**

விஷயத்தில் தோஷங்களுக்கு சிக்ஷகன் ஸர்வசாஸிதாவான பகவானே யென்று நிச்சயித்து அவர்கள் பக்கல் அநாதரம் பண்ணாதே அவர்களுடைய குணங்களையே க்ரஹித்து அவர்களுடைய சேர்த்தியாகிற அலப்யலாபத்தை பகவதநுக்ரஹத்தாலே பெற்றோம் என்று க்ருதார்த்தனாக ஆத்மாவை நினைத்து நிர்ப்பரனாயிருக்கக்கடவனென்கிறார் **ஆன பின்பு** इत्यादिना । **நினைப்பிட்ட** – ஸங்கல்பித்துவைத்த, **செலவு செய்வான்** – சிக்ஷாதிகளாலே வ்யயத்தைச் செய்துவைப்பான், **தெளிந்து** – நிச்சயித்து, **நெகிழாதே** – தன்னுடைய சித்தம் ராகாதிதூஷிதமானால் அதில் பகவான் வஸிக்கமாட்டான் என்றாராய்ந்து அவர்களை யநாதரம் செய்யாதே, இதற்கு உகந்து என்பதோடந்வயம். **कर्मणेति** । பாகவதர்களுடைய அபராதத்தைப் பார்த்து அவர்கள் விஷயத்தில் அநாதராதிகளைச்செய்து அபராதப்படாமல் கல்யாணமான கார்யத்தையே செய்யக்கடவனென்கை. **பரமனைப்பயிலுந்திருவுடைய** इति । பாற்கடல் சேர்ந்த பரமபுருஷனை பரிசயம் பண்ணுகை, அதாவது – ஸமாச்ரயிக்கையாகிற ஸம்பத்தையுடையாரென்கை **சிறுமா மனிசருடன்** – தேஹயாத்ராநுவ்ருத்த்யாதிகளாலே சிறியராய் தோற்றியும், ஜ்ஞானவைராக்யபக்த்யாதிகளாலே மஹாப்ரபாவசாலிகளாயுமுள்ள பாகவதர்களோடு, **சேர்த்தியாகிற** – ஸம்ஸர்கமாகிற,

[46] பாரதம் ஆச்வமேதிகபர்வம் 27-1.
[47] மநுஸ்ம்ருதி 12-122.
[48] விஷ்ணுபுராணம் 1-17-20.
[49] விஷ்ணு தர்மம் 9-11.
[50] பாரதம் உத்யோகபர்வம் 39-56.
[51]

**कृतार्थனாய், [52]''திருமால் தலைக்கொண்ட நங்கட்கெங்கே வருந்தீவினை'' யென்று व्यवसितனாய், [53]''ஆள்கின்றானாழியானாராற்குறையுடைய'' மென்கிறபடியே परमपदத்திற்பெறப்புகுகிற परिपूर्णकैङ्कर्यसाम्राज्यத்துக்கிங்கே முடிசூடியிருக்கப் प्राप्तம். இப்படி व्यवस्थितமான प्रभावம் रहस्यत्रयத்தில் फलनिर्देशप्रदेशங்களிலே अनुषङ्गसिद्धமாக अनुसन्धेयம்.**

> **உண்மையுரைக்கு மறைகளிலோங்கிய வுத்தமனார்**
> **வண்மையளப்பரிதாதலின் வந்து கழல்பணிவார்**
> **தண்மை கிடந்திடத்தரமளவென்ன வியப்பிலதாம்**
> **உண்மையுரைத்தனரோரந்தவிர வுயர் ந்தனரே. (37)**

---

**சீரிய** – श्लाघ्यமான, **பேறாப்பேற்றை** – பெறக்கூடாத पुरुषार्थத்தை. **திருவருளாலே** – ஸ்ரீமானான நாராயணனுடைய ஸ்ரீமத்க்ருபையாலே, **திருமால் தலைக்கொண்ட நங்கட்கு** – ஸ்ரீமானான நாராயணனாலே परिग्रहिக்கப்பட்ட நமக்கு. **தீவினை** – दुष्कर्मங்கள், **எங்கே வரும்** – எங்கே வரப்போகிறது, **என்று व्यवसितனாய்** – திருமாலாலே परिग्रहिக்கப் பட்ட நமக்குத் தீவினையே வாராதென்று निश्चयமுடையவனாய், **ஆழியான்** – चक्रायुधத்தைப் परिकरமாகவுடைய भगवान्, **ஆள்கின்றான்** – நம்மை ரக்ஷியா-நின்றான், **ஆரால்** – மற்ற எவரால், **குறையுடையம்** – பெறக்கூடிய पुरुषार्थத்தின் குறைவையுடையோம், सकलं संपूर्णமென்றபடி. **இங்கே** – संसारमण्डलத்திலேயே, **முடிசூடியிருக்க** – मूर्धाभिषिक्तனாயிருக்க, **प्राप्तம்** – இப்படியிருக்குகையே उचित-மென்றபடி. இவ்வதிகாரார்थமான प्रभावरक्षैயை रहस्यत्रयத்தில் अनुसन्धिக்கும் प्रदेशத்தைக் காட்டுகிறார் **இப்படி** इत्यादिना । **फलनिर्देशप्रदेशங்களிலே** इति । नारायणपदोत्तरचतुर्थ्यादि-களிலே **अनुषङ्गसिद्धமாக** – आर्थिकமாக.

भगवान् दोषरहितனாகையாலே अपरिच्छिन्नप्रभावனானாலும் அவனையாश्रयिத்த प्रपन्नர்கள் दोषयुक्तராயும் जात्यादिகளாலே उत्कर्षापकर्षरूपतारतम्यமுள்ளவர்களாயுமிருப்ப தால் அவர்கள் प्रभावம் परिच्छिन्नமாகாதோ என்கிற ஶங்கையை निरासம் பண்ணிக் கொண்டு அதிகாரார்थத்தைப் பாட்டாலே संग्रहिக்கிறார் **உண்மையுரைக்குமறைகளி லி**त्यादिना । **உண்மையுரைக்கும் மறைகளில்** – यथार्थத்தையே சொல்லும் वेदान्तங் களில், **ஓங்கிய** – ''न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते'' என்கிறபடி महाप्रभावशालिயாய் விளங்கு கிற, **உத்தமனார்** – पुरुषोत्तमனான भगवानுடைய, **வண்மை** – प्रभावமானது, **அளப் பரிது** – ''यतो वाचो निवर्तन्ते'' என்கிறபடி वाङ्मनसापरिच्छेद्यம், **ஆதலில்** – ஆகையால்,

---
[52] திருவிருத்தம் 88.
[53] திருவாய்மொழி 10-4-3.

रागद्वेषमदादिकैरिह महारक्षोभिरक्षोभिते
नित्ये रक्षितरि स्थिते निजभरन्यासाभिधानं तपः ।
यत्कक्षीकृतमत्यशेत विविधान् धर्मानधर्मद्रुह-
स्तद्भूमार्णवलेशवर्णनमपि प्राचां न वाचां पदम् ॥ ५८ ॥

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे
प्रभावरक्षाधिकारः षड्विंशः ॥
श्रीमते गिमान्तमहादेशिकाय नमः ॥

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे
स्थिरीकरणभागो द्वितीयः ॥
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

---

सिद्धोपाय प्रभावமपरिच्छेद्यமாகையாலே என்றபடி. **வந்து** – ஆகிஞ்சந்யாநந்யகதித்வரூபாதிகாரத் தோடே வந்து, **கழல் பணிவார்** – திருவடிகளையாஶ்ரயிக்கும் ப்ரபந்நர்களுடைய, **தண்மை** – தாழ்ச்சி, **கிடந்திட** – ஒரு பக்கமிருந்ததேயாகிலும், ஜாத்யாதிக்ருதமான நைச்யத்தாலே அவர்களுக்கு புருஷார்த்தஹாநியும் பகவதபிமாநந்யூநதையும் இல்லாமையாலே அந்தத் தாழ்ச்சியால் பாதகமில்லையென்று கருத்து. **தரம்** – வரிசை, ப்ரபாவமென்றபடி, **அளவென்ன** – பரிச்சிந்நமென்கிற, **வியப்பிலதாம்** – வியப்பு உக்தி பரிச்சிந்நமென்கிற வாக்கில்லாததாம். ''यो ह्येनं पुरुषं वेद देवा अपि न तं विदुः'' என்கிறதிறே. **உண்மை** – பாகவதப்ரபாவம் அபரிச்சிந்நமென்கிற ஸத்யமான வார்த்தையை, **உயர்ந்தனர்** – ஜ்ஞாநாநுஷ்டாநங்களாலே ஸர்வாதிகர்களான நம்மாசார்யர்கள், **ஓரந்தவிர** – பக்ஷபாதமில்லாமல், இவன் ஸதோஷன், இவன் நிர்தோஷன், இவன் மந்தாதிகாரி, இவன் பூர்ணாதிகாரி என்கிற பக்ஷபாதமின்றிக்கே, **உரைத்தனரே** – யதாஶாஸ்த்ரம் சொன்னார்கள்.

இப்படி ப்ரபந்நர்களுடைய ப்ரபாவமபரிச்சிந்நமென்று சொல்லி, இதற்கு ஹேதுவான ப்ரபத்தியினுடைய ப்ரபாவமுமபரிச்சிந்நமென்பதை அதிகாராவஸாநஶ்லோகத்தாலே அருளிச்செய்

கிறார் **रागद्वेषमदादिकैरिति ।** **रागः** – फलकामना, **द्वेषः** அந்த காமனை विघटितமானால் विघटकன் விஷயத்தில் द्वेषம், அதாவது प्रतिकूलबुद्धि । **मदः** – நான் உத்க்ருஷ்டனென்கிற अभिमानம், இவை முதலானதுகளான, **महारक्षोभिरपि** – மஹாராக்ஷஸர்களாலும், रागद्वेषादिகளை யுடையவர்கள் ராக்ஷஸர்களாகையால் राक्षसत्वापादकங்களான रागद्वेषादिகள் महाराक्षसர் களாகலாமிறே. एतादृशமான आश्रितदोषங்களாலே, – **अक्षोभिते** – கலக்கமுடியாதவ னான, **नित्ये रक्षितरि** – नित्यरक्षकனாக, **स्थिते** – இருக்கிற, भगवतीति शेषः । (भगवद्विषयத்திலே) **यत् निजभरन्यासाभिधानं तपः** – தன்னுடைய भरन्यासமென்கிற யாதொரு தபஸ்ஸானது, **कक्षीकृतं सत्** – अङ्गीकृतं सत्, अनुष्ठिக்கப்பட்டதாய்க்கொண்டு என்றபடி. **अधर्मद्रुहः** – ''धर्मेण पापमपनुदति'' என்கிறபடி अधर्मங்களுக்கு नाशकங்களான, **विविधान् धर्मान्** – सत्यतपःप्रभृति- களான नानाविधधर्मங்களையும், **अत्यशेत** – अतिशयிக்குமோ? भरन्यासமென்கிற யாதொரு தபஸ்ஸானது ''सत्यं तपो दमश्शमो दान'' मित्यादि तपஸ்ஸுக்களை अतिक्रमித்திருக்கிறதோ என்றபடி. **तद्भूमार्णवलेशवर्णनमपि** – அந்த भरन्यासरूपतपஸ்ஸின் माहात्म्यமாகிற महार्णवத்தின் (लेशத்தை) திவலையை வர்ணிப்பதும், **प्राचां** – प्राचीनர்களான மஹான்களுடைய, **वाचां** – வாக்குக்களுக்கும், **न पदं** – விஷயமன்று. सर्वतपஸ்ஸுக்களையும் விட உத்க்ருஷ்டமான भरन्यासத்தின் प्रभावம் மஹான்களாலும் சொல்ல முடியாதது என்று கருத்து.

**रहस्यत्रयसारस्य स्थिरीकरणसंज्ञकः ।**
**भागः श्रीरङ्गशठजिद्योगिना विवृतो मुदा ॥**

**॥ इति श्रीमदहोबिलमठास्थाने द्विचत्वारिंशत्पट्टे मूर्द्धाभिषिक्तस्य**
**निरवधिकगुरुभक्तिभरितस्य श्रीलक्ष्मीनृसिंहदिव्यपादुकासेवक**
**श्रीवण्शठकोप श्री श्रीरङ्गशठकोपयतीन्द्रस्य कृतौ**
**श्री सारबोधिन्याख्यायां व्याख्यायां**
**प्रभावरक्षाधिकारष्षड्विंशः ॥**

॥ श्रीः ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

॥ श्रीमद्रहस्यत्रयसारे मूलमन्त्राधिकारः ॥

तारं पूर्वं तदनु हृदयं तच्च नारायणाये-
त्याम्नायोक्तं पदमवयतां सार्धमाचार्यदत्तम् ।
अङ्गीकुर्वन्नलसमनसामात्मरक्षाभरन्नः
क्षिप्रं देवः क्षिपतु निखिलान् किङ्करैश्वर्यविघ्नान् ॥ ५९ ॥

॥ श्रीः ॥

अथ मूलमन्त्राधिकार व्याख्या ॥

रहस्यत्रयसारस्य व्याख्यां श्रीसारबोधिनीम् ।
मूलमन्त्राधिकारादेः कुरुते नरकेसरी ॥

இப்படி ஸ்திரீகரணபாகத்தாலே அர்थாநுஶாஸநபாகோக்தமானவர்த்தை ஸ்தாபித்து, த்ருதீய-பாகத்தாலே ரஹஸ்யத்ரயத்தில் பதவாக்யங்களுடைய யோஜனையைக் காண்பிக்கப்போகிறவ ராய், அதில் முதலில் திருமந்த்ரத்தில் பதவாக்யயோஜனை இருக்கும்படியைக்காட்டக் கருதி, ''मन्त्रे तद्देवतायाञ्च तथा मन्त्र प्रदे गुरौ । त्रिषु भक्तिस्सदा कार्या सा हि प्रथमसाधनम्'' என்கிறபடியே மந்த்ரப்ரதிபாத்யதேவதையையும், மந்த்ரப்ரதனான ஆசார்யனையும் மந்த்ரத்தையுமனுஸந்திக்கிறார் மூன்று ஶ்லோகங்களாலே, அதில் முதல் ஶ்லோகத்தில் திருமந்த்ரத்தில் உபநிஷத்ப்ரதிபாத்யபதங்களின் க்ரமத்தைக் காட்டாநின்று கொண்டு திருமந்த்ரப்ரதிபாத்யனான நாராயணன் ஸார்த்தமாக ஆசார்யோபதிஷ்டமான திருமந்த்ரத்தை அனுஸந்தித்து ஶரணவரணம் பண்ணின நம்முடைய கைங்கர்ய-ஸாம்ராஜ்யவிரோதிபாபங்களையெல்லாம் போக்கடிக்கக் கடவன் என்று ப்ரார்த்திக்கிறார் **तारं पूर्वमिति** । **पूर्वं** – முதலிலே, **तारं** – ஆம்நாயோக்தப்ரணவத்தையும், **तदनु** – அதின் பிறகு, **हृदयं** – ஆம்நாயோக்தநமஶ்ஶப்தத்தையும், மந்த்ரஶாஸ்த்ரத்தில் தாரமென்று ப்ரணவமும், ஹ்ருதயமென்று நமஸ்ஸும் சொல்லப்படுகிறதிறே. तदनु इत्यनुषङ्गः । அதன் பிறகு, **तत्** – ப்ரஸித்தமான, **नारायणायेति** – நாராயணாய என்று, **आम्नायोक्तं** – ''ओमित्यग्रे व्याहरेत् । नम इति पश्चात् । नारायणायेत्युपरिष्टात्'' என்று ஶ்ருத்யுக்தமான, **सार्धं** – அர்த்தஸஹிதமாக, **आचार्य दत्तं** – ஆசார்யனாலே உபதேஶிக்கப்பட்டதான, **पदञ्च** – பதத்தையும், **अवयतां** – அனுஸந்தததாம், **अलसमनसां** – கர்மயோகாத்யனுஷ்டானங்களில் மந்தமனஸ்கர் களான, அகிஞ்சனர்களான என்றபடி. **नः** – நம்முடைய, **आत्मरक्षाभरं** – நம்மாலே ஸமர்ப்பித-

**कल्याणमावहतु कार्तयुगं स्वधर्मं**
**प्रख्यापयन् प्रणिहितेषु नरादिकेषु ।**
**आद्यं कमप्यधिगतो रथमष्टचक्रं**
**बन्धुस्सतां बदरिकाश्रमतापसो नः ॥ ६० ॥**

மான आत्मरक्षाभरத்தை, **देवः** – मन्त्रप्रतिपाद्यனான நாராயணன், **अङ्गीकुर्वन् सन्** – अङ्गीकरिக்கிறவனாய்க்கொண்டு, **निखिलान्** – ஸமஸ்தங்களான, **किङ्कर्यैश्वर्यविघ्नान्** – கைங்கர்ய ஸாம்ராஜ்யவிघ्नங்களை, प्राप्तिविरोधिகளான ஸர்வபாபங்களையுமென்றபடி. **क्षिप्रं** – एतद्देहावसानத்திலேயே, **क्षिपतु** – போக்கடிக்கக்கடவன். प्रार्थनायां लोट् । திருமन्त्रத்தில் समर्पणपरமான யோஜனை இந்த श्लोकத்தாலே ஸூசிப்பிக்கப்பட்டது. सार्थमाचार्यदत्तम-वयताமென்று சொல்லாமல் तारं पूर्वं तदनु हृदयं तच्च नारायणायेत्याम्नायोक्तं पदமென்று विभजिத்துச் சொல்லுகையால் திருமन्त्रத்தில் அடைவே स्वरूपोपायपुरुषार्थपरयोजனையும் ஸூசித-மாகிறது.

இப்படி मन्त्रप्रतिपाद्यனான நாராயணனை अनुसन्धिத்து अनिष्टनिवृत्तिயைப் प्रार्थिத்து மேலே அவன் தன்னையே मन्त्रप्रदனான बदरिकाश्रमवासिயான नारायणனாக अनुसन्धिத்து इष्टத்தைப் प्रार्थिக்கிறார் **कल्याणमावहतु** इत्यादिना । **अष्टचक्रं** – எட்டு चक्रங்களையுடைய, **आद्यं** – முதலான, **कमपि** – अनिर्वाच्यमहिமையையுடைய, **रथं** – மஹாபாரதத்தில் நாராயணீயத்தில் "अष्टचक्रं हि तद्यानं भूतयुक्तं मनोजव" மென்று சொல்லப்பட்ட ரதத்தை, **अधिगतः** – அடைந்தவனாய், இவ்வளவால் திருமந்த்ரம் ரதமென்றும், அதிலுள்ள எட்டு எழுத்துக்கள் சக்ரங்களென்றும், நாராயணன் प्रतिपाद्यार्थतया अधिगतனென்றும் द्योतित-மாகிறது. **प्रणिहितेषु** – மிகவும் सावधानர்களான, सम्यक्प्रशान्तचित्तायेत्यादिகளில் சொல்லப்பட்ட शिष्यलक्षणपूर्णர்களான என்றபடி. **नरादिकेषु** – தன்னுடைய द्वितीयावतारனான நரன் முதலானவர்கள் விஷயத்திலே, आदिशब्दத்தாலே नारदादिகளுக்குக் க்ரஹணம். **कार्तयुगं** – कृतयुगसंबन्धिயான, **स्वधर्मं** – "निवृत्तिलक्षणं धर्मं ऋषिर्नारायणोऽब्रवीत्" என்று சொல்லப்பட்ட स्वोपदिष्टமான निवृत्तिधर्मத்தை, **प्रख्यापयन्** – विशेषतः उपदेशिக்கிறவனாயும், **सतां** – ब्रह्मज्ञानத்தாலே लब्धसत्ताकர்களான भक्तिप्रपत्तिनिष्ठர்களுக்கு, **बन्धुः** – "माता पिता भ्राता" என்கிறபடி सर्वविधबन्धुவுமான, **बदरिकाश्रमतापसः** – बदरिकाश्रमத்தில் தபஸ் செய்துக்கொண்டிருக்கிற நாராயணனானவன், **नः** – நமக்கு, **कल्याणं** – மங்களத்தை, निवृत्तिधर्मनिष्ठதையை என்றபடி. **आवहतु** – உண்டு பண்ணக்கடவன்.

**यदन्तस्थमशेषेण वाङ्मयं वेदवैदिकं ।**
**तस्मै व्यापकमुख्याय मन्त्राय महते नमः ॥ ६१ ॥**

**इह मूलमन्त्रसंवृतमर्थमशेषेण कश्चिदनुभवति ।**
**स्फटिकतल निहित निधिमिव देशिकदत्तेन चक्षुषा जन्तुः ॥ ६२ ॥**

இதற்குமேல் अष्टाक्षरात्मावान मन्त्रराजனை ஸேவிக்கிறார் **यदन्तस्थमिति । वेदवैदिकम्** – वेदरूपமாயும், वेदमूलकोपबृंहणरूपமாயுமுள்ள, **वाङ्मयं** – वाग्विकारமான शब्दங்களெல்லாம், **अशेषेण** – शेषமின்றிக்கே, **यदन्तस्थम्** – யாதொரு अष्टाक्षरத்திலிருக்கிறதோ, वेदवैदिकशब्दங்களுடைய अर्थங்களான तत्त्वहितपुरुषार्थங்களெல்லாம் இதிலே சுருங்கக் காண்கையால் यदन्तस्थமென்கிறது. **तस्मै** – तादृशसर्वार्थप्रकाशकமான, **व्यापकमुख्याय** – अष्टाक्षरवासुदेव-द्वादशाक्षरविष्णुषडक्षररूपங்களான व्यापकमन्त्रங்களுக்குள்ளே मुख्यமாய், अतएव **महते** – महा-प्रभाववத்தாயிருக்கிற, **मन्त्राय** – ''मन्तारन्त्रायते यस्मात् मन्त्र इत्यभिधीयते'' என்கிறபடி தன்னை जपிக்கிறவர்களை ரக்ஷிக்கும் स्वभावமுள்ள திருமन्त्रத்தின் பொருட்டு, **नमः** – நமஸ்காரம் செய்கிறேன்.

இதற்குமேல் இந்த मूलमन्त्रத்தினுடைய रहस्यार्थத்தின் ग्रहणமானது सत्संप्रदायसिद्धसदा-चार्यकटाक्षविशेषத்தாலே ஆயிரத்திலொருவனுக்குக் கூடுமென்றதின் दौर्लभ्यத்தை उपपादिக்கிற व्याजத்தாலே தமக்கே तादृशदुर्लभार्थग्रहणம் सिद्धமென்பதை வெளியிடுகிறார் **इहेति । कश्चित्** – ஆயிரத்தில் ஒரு, **जन्तुः** – सफलजन्माவான पुरुषன், இதனால் मूलमन्त्रार्था-नुभवத்திற்கு प्राचीन सुकृतத்தாலே யுண்டான जन्मம் कारणமேயொழிய स्वप्रतिभादिகள் कारणங்களன்றென்று सूचितம். **देशिकदत्तेन चक्षुषा** – स्वाचार्योपदेशத்தாலே வந்த ज्ञानविशेषத்தாலே, **इह** – இந்த जगத்திலே, **मूलमन्त्रसंवृतं** – अष्टाक्षरமான मूलमन्त्रத்தாலே மறைக்கப்பட்ட, **अर्थं** – तत्त्वहितपुरुषार्थरूपமான अर्थத்தை, இதனால் अर्थத்திற்கு अतिरहस्यत्वம் सूचितம். **अशेषेण** – शेषமின்றிக்கே, कृत्स्नத்தையுமென்றபடி. **स्फटिकतलनिहितनिधिमिव** – स्वच्छமான स्फटिकக்கல்களாலே கட்டப்பட்ட स्थलத்தில் வைக்கப்பட்ட निधिயைப்போலே **अनु-भवति** – साक्षात्करिக்கிறான். स्फटिकतल என்கையாலே उपमेयத்தில் तत्स्थानीयமான मूलमन्त्रத்தின் மேன்மை व्यञ्जितமாகிறது. तन्निहितமான निधिயை दृष्टान्तமாக்குகையால் मन्त्रार्थத்திற்கு मन्त्रத்தைக்காட்டிலும் उत्कर्षம் सूचितமாகிறது. இந்த लोकத்தில் मूलमन्त्रार्थத்தைத் தாம் ஒருவரே सर्वतोमुखமாக अनुभविக்கையால் இந்த श्लोकத்தில் சொன்ன सफलजन्मा-வான पुरुषன் தாமே யென்று திருவுள்ளம். मनसि मम यत्प्रसादाद्वसति रहस्यत्रयस्य सारोऽयं என்றாரிறே.

**ஸத்வஸ்தர்க்கநுஸந்தேயங்களான ஸாரதமார்த்தங்களையும் அவற்றினுடைய ஸ்திரீகரணப்ரகாரங்களையும் ப்ரதிபாதித்தோம். இவற்றையெல்லாம் ப்ரகாசிப்பிக்கிற ரஹஸ்யத்ரயத்தில் பதவாக்யயோஜனைகளிருக்கும்படி சொல்லுகிறோம். அவற்றில் முற்பட திருமந்த்ரம் பரசேஷதைகரஸஸ்வரூபாதிகளைத் தெளிவித்து அம்முகத்தாலே ஸமஸ்தப்ரதிபந்தகநிவ்ருத்திபூர்வகபரமபுருஷார்த்தப்ராப்தியிலே ருசியையும் த்வரையையும் விளைப்பித்து உபாயாதிகாரபூர்த்தியை யுண்டாக்கும். இப்படி அதிகாரியானவனுடைய பலாபேக்ஷாபூர்வகோபாயவிசேஷாநுஷ்டானப்ரகாரத்தை த்வயம் விசதமாக ப்ரகாசிப்பிக்கும். இவ்வுபாய விசேஷத்தை விதிக்கிறது சரமச்லோகம். இவை மூன்றிலும் தனித்தனியேயெல்லாவர்த்தங்களையும் சாப்தமாகவுமார்த்தமாகவும்**

---

இனி ஸங்கத்யர்த்தம் வ்ருத்தவர்திஷ்யமாணங்களைக் காட்டுகிறார் **ஸத்வஸ்தர்க்கு** இத்யாதினா । **ஸத்வஸ்தர்க்கு** – ஸாத்விகர்களுக்கு, அநுஸந்தேயங்களான ஸாரதமார்த்தங்களையுமென்பதால் அர்த்தாநுசாஸநபாகார்த்தம் சொல்லப்பட்டது. அவற்றினுடைய ஸ்திரீகரணப்ரகாரங்களையுமென்பதால் ஸ்திரீகரணபாகார்த்தம் சொல்லப்பட்டது. வர்திஷ்யமாணார்த்தத்தைக் காட்டுகிறார் **இவற்றையெல்லாமி**த்யாதினா । **பதவாக்யயோஜனைகளி**தி । பதயோஜனையாவது பதங்களுக்கு பரஸ்பரமந்வயம். வாக்யோஜனையாவது வாக்யங்களுக்கு பரஸ்பரமந்வயம். அதில் ரஹஸ்யத்ரயங்களுடைய அநுஸந்தானக்ரமத்திற்கு நியாமகங்காட்டுகிறார் **அவற்றில் முற்பட** இத்யாதியால். பரசேஷதைகரஸத்வமாவது — பரனுடைய சேஷத்வத்தையே ஸ்வரூபநிரூபகதர்மமாக வுடைத்தாயிருக்கை. ஸ்வரூபமாவது ஜீவாத்மஸ்வரூபம். ஆதிசப்தத்தாலே பலஸ்வரூபமும் உபாயஸ்வரூபமும் விவக்ஷிதம். **தெளிவித்து** – ப்ரகாசிப்பித்து, **அம் முகத்தாலே** – ஸ்வரூபாதிப்ரகாசனத்வாரா । **ஸமஸ்தேத்யாதி** । ஒருவனுக்கு தன்னுடைய சேஷத்வத்திற்கும் பரனிடத்திலுள்ள சேஷித்வாதிகளுக்கும் ஸர்வதா ப்ரகாசமுண்டானால் அதனால் ப்ரதிபந்தகநிவ்ருத்திபூர்வகசேஷிகைங்கர்யரூபபுருஷார்த்தத்தில் விஷயஸௌந்தர்யாதீனமாக ருசியும் ருசியின் ஔத்கட்யத்தால் தத்ப்ராப்தியில் த்வரையுமுண்டாகுமிறே. **உபாயாதிகாரபூர்த்தியை யுண்டாக்குமி**தி । உபாயாதிகாரமாவது உபாயஸாத்யபலேச்சையும் உபாயஜ்ஞானாதிகளுமிறே. இப்படி மூலமந்த்ரஸித்தோபாயாதிகாரவானுக்கு உபாயாநுஷ்டானப்ரகாரப்ரகாசகம் த்வயமென்கிறார் **இப்படி அதிகாரியானவனுடைய** இத்யாதினா । இதனால் முதலில் மூலமந்த்ராநுஸந்தானத்திற்கும் அனந்தரம் த்வயாநுஸந்தானத்திற்கும் நியாமகம் சொல்லப்பட்டது. த்வயத்தில் ''ஸ்ரீமதே நாராயணாய'' என்கிறவிடத்தில் பலாபேக்ஷையும், ''சரணௌ சரணம் ப்ரபத்யே'' என்கிறவிடத்தில் அநுஷ்டானப்ரகாரமும் அதிஸ்பஷ்டமிறே. சரமச்லோககருத்யத்தை யருளிச்செய்கிறார் **இவ்வுபாயவிசேஷத்தை** இதி । ஒவ்வொரு ரஹஸ்யத்திலும் எல்லா அர்த்தங்களையும் அடைத்துச் சொல்ல ஸாத்யமாயிருக்க மூலமந்த்ரம் அதிகாராபாதகமென்றும், த்வயம் அநுஷ்டானப்ரகாரப்ரகாசகமென்றும், சரமச்லோகம் விதாயகமென்றும்பிரித்துச்சொல்ல நியாமகமுண்டோவென்ன வருளிச்

**காணலாமாகிலும் ஓரொன்றிலேயோரொன்றுக்கு நோக்காயிருக்கும். திருமன்த்ரத்தில் ப்ரதமபதத்தில் ப்ரதமாக்ஷரத்திலே ஸம்க்ஷிப்தமான ஶரண்யபரதத்த்வத்தையும் இதில் மத்யமத்ருதீயபதங்களிலே ப்ரதிபந்நமான உபாயோபேயங்களையுமடைவே விஶதமாக்குகிறது த்வயம். இதில் "ப்ரபத்யே" என்கிற பதத்திலுத்தமனாலே விவக்ஷிதமான அதிகாரிவிஶேஷத்தையும் அர்த்தஸித்தமான உபாயாந்தரநைரபேக்ஷ்யத்தையும் உபேயத்தில் நமஶ்ஶப்தஸம்க்ஷிப்தமான விரோதிநிவ்ருத்த்யம்ஶத்தையும் வெளியிடுகிறது சரம-ஶ்லோகம். இவைமூன்றும் நமக்கு ஜ்ஞாநாநுஷ்டாநஃபலநிதாநங்களாய்க்கொண்டு**

---

செய்கிறார் **இவை மூன்றிலுமி**த்யாதிநா। **ஓரொன்றிலே யோரொன்றுக்கு நோக்காயிருக்குமி**தி। நோக்காவது ப்ரதாந்யேந ப்ரதிபாதநம். மூலமன்த்ரத்தில் ஸ்வரூபாதிஜ்ஞாநஜநநத்தாலே அதிகாரஸம்பாதகத்வமும், த்வயத்தில் ஶரணம் ப்ரபத்யே என்று உபாயாநுஷ்டாநப்ரகாஶகத்வமும் சரமஶ்லோகத்தில் ஶரணம் வ்ரஜ என்று மத்யமனாலே விதாயகத்வமும் ஸ்பஷ்டமாகத்தோன்றுகையால் விபஜித்துச் சொன்னது கூடுமென்று கருத்து. இந்த ரஹஸ்யத்ரயாநுஸந்தாநக்ரமத்தில் வ்யாக்யேயவ்யாக்யாநபாவமும் நியாமகமென்றருளிச்செய்கிறார் **திருமன்த்ரத்திலி**த்யாதிநா। **ப்ரதமபதத்தில் ப்ரதமாக்ஷரத்திலே** – ப்ரணவகடகமான அகாரத்திலே, **ஸம்க்ஷிப்தமான** – சுருங்கச் சொல்லப்பட்ட, **ஶரண்யபரதத்த்வத்தை** – ரக்ஷகனான பரமாத்மாவை, பரத்வத்தை யென்று பாடமாம்போது ஶரண்யனுடைய ஜகத்காரணத்வ ரக்ஷகத்வாத்யுத்கர்ஷத்தை யென்று அர்த்தமாகக் கடவது. **இதில் மத்யமத்ருதீயபதங்களிலே** – மூலமன்த்ரகடகங்களான நம:பதநாராயணபதங்களிலே, **ப்ரதிபந்நமான** – ஸம்க்ஷேபேண ப்ரதிபந்நமான, **உபாயோ-பேயங்களையும்** – ஶரணாகதிரூபோபாயத்தையும் ப்ராப்யனான நாராயணனையும், **அடைவே** – க்ரமமாக, **விஶதமாக்குகிறது த்வயமி**தி। ப்ரணவகடகமான அகாரத்தில் ப்ரதிபாத்யன் ஶ்ரீமானான நாராயணனென்றும், நமஶ்ஶப்தத்தில் சொல்லப்பட்ட உபாயம் ஶரணவரணமென்றும், நாராயணாய என்கிற த்ருதீயபதத்தில் ஸம்க்ஷிப்தமான உபேயம் ஶ்ரீமானான நாராயணனென்றும் ஸ்பஷ்டமாக்குகிறது த்வயமென்று கருத்து. **இதில்** – இந்த த்வயத்தில் கடகமான, **உத்தமனாலே** – உத்தமபுருஷனாலே, **அதிகாரிவிஶேஷத்தையும்** – அநந்யஶரணனான அகிஞ்சனனையும், **அர்த்தஸித்தமான உபாயாந்தரநைர-பேக்ஷ்யத்தையுமி**தி । நாராயணனுடைய சரணங்களை உபாயமாகப் பற்றுகிறேனென்றால் சரணவ்யதிரிக்தங்களான உபாயங்களில் அபேக்ஷையில்லாமை "सर्वं वाक्यं सावधारणं" என்கிற ந்யாயத்தாலே அர்த்தாத்ஸித்திக்குமிறே. **உபேயத்தில்** – விரோதிநிவ்ருத்திபூர்வகேஷ்டப்ராப்திரூபமான உபேயத்தில், **நமஶ்ஶப்தஸம்க்ஷிப்தமான** – த்வயத்தின் உத்தரகண்டத்தில் நமஶ்ஶப்தஸம்க்ஷிப்தமான, **வெளியிடுகிறது சரமஶ்லோகம்** – ஸர்வதர்மாந் பரித்யஜ்ய என்கிற பதங்கள் த்வயத்தில் உத்தமனில் சொல்லப்பட்ட அதிகாரி ஸர்வதர்மஶூந்யனென்று வெளியிடுகின்றன. அர்த்தஸித்தமான உபாயாந்தரநைரபேக்ஷ்யத்தை மாமேகம் ஶரணம் வ்ரஜ என்கிற பதங்கள் வெளியிடுகின்றன. உபேயத்தில் நமஶ்ஶப்தஸம்க்ஷிப்தமான விரோதி-நிவ்ருத்த்யம்ஶத்தை ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி என்கிற பதங்கள் வெளியிடுகின்றன. இந்த ரஹஸ்யத்ரய-மும் முமுக்ஷுக்களுக்கு உபகாரபேதத்தாலே உபஜீவ்யமென்கிறார் **இவை மூன்றுமி**தி। **நமக்கு** –

धारकपोषकभोग्यங்கள். [1]"व्यक्तं हि भगवान् देवस्साक्षान्नारायणस्स्वयम् । अष्टाक्षरस्वरूपेण मुखेषु परिवर्तते" என்கிறபடியே देशिकजिह्वैயிலேயிருந்து शिष्यहृदयगुहान्धकारத்தைக் கழித்து परशेषतैकरसமான परिशुद्धस्वरूपத்தை வெளியிட்டு सत्तालाभத்தைப் பண்ணுகையாலே திருमन्त्रம் धारकம். चरमोपायத்திலே प्रवर्तिக்கும்படியான ज्ञानविशेषोपचयहेतुவாகையாலே श्रोतव्यशेषமில்லாதபடி उपायोपदेशपर्यवसानமான चरमश्लोकம் पोषकம். सकृदुच्चारणத்தாலே परमपुरुषार्थहेतुவாய்க்கொண்டு सदानु-

முமுக்ஷுக்களான நமக்கு, ज्ञानानुष्ठानफलनिदानங்களாய்க்கொண்டு धारकपोषकभोग्यங்களிதி । திருमन्त्रம் स्वस्वरूपज्ञानोत्पादनத்தாலே धारकமாயும், चरमश्लोकம் उपायविधानத்தாலே अनुष्ठानத்திற்கு निदानமாய் पोषकமாயும், द्वयம் प्रथमोच्चारणத்தாலே फलोपायமாய்க்கொண்டு द्वितीयाद्युच्चारणத்தாலே सर्वदा भोग्यமாயுமிருக்குமென்றபடி. திருमन्त्रத்தினுடைய धारकत्व-प्रकारத்தை उपपादिக்கிறார் व्यक्तं हीति । व्यक्तமென்கிற पदம் नूनமென்பதற்கு पर्यायமாய் मूलमन्त्रத்தில் नारायणत्वोत्प्रेक्षैக்கு व्यञ्जकமாயிருக்கும். श्लोकத்திலிருக்கும் मुखशब्दத்திற்கு तात्पर्यமருளிச்செய்கிறார் देशिकजिह्वैயிலே इति । परिवर्तनத்திற்கு प्रयोजनமருளிச் செய்கிறார் शिष्यहृदयगुहान्धकारத்தைக் கழித்து इति । देशिकजिह्वैயில் இருக்கும் मूलमन्त्रம் அந்த जिह्वोपदिष्टமான स्वार्थज्ञानமாகிற दीपத்தாலே शिष्यहृदयगुहैயில் இருக்கும் स्वरूपाज्ञा-नान्धकारத்தைக் கழிக்குமிறே. परशेषतैकरसமான परिशुद्धस्वरूपத்தை इति । परिशुद्धस्वरूपம் – प्रकृतिवियुक्तமான आत्मस्वरूपம், सत्तालाभமாவது शेषत्वज्ञानம். असत्कल्पனாயிருந்த இவனுக்கு शेषत्वज्ञानத்தாலேயிறே सत्तालाभமுண்டாவது. இப்படி सत्तालाभजनकமாகையால் अन्नादि-களைப்போல் मूलमन्त्रம் धारकமாகிறதென்று கருத்து. चरमश्लोकத்தினுடைய पोषकत्व-प्रकारத்தை उपपादिக்கிறார் चरमोपायத்திலே इत्यादियால். चरमोपायமாவது प्रपत्ति । कर्मयोग-ज्ञानयोगभक्तियोगप्रपत्तियोगरूपங்களான उपायங்களில் प्रपत्तिயானது चरमोपायமிறே. ज्ञानविशेष-மாவது:– भगवान् ஒருவனே उपायமென்கிற ज्ञानம். उपचयहेतुவாகையாவது:– अन्ना-दिना धृतशरीरனுக்கு घृतक्षीरादिகள்போலே स्वरूपज्ञानத்தாலே लब्धसत्ताकனுக்கு उपायज्ञानजनक-மாகுகை. उपायोपदेशपर्यवसानமான इति । गीतैயில் कर्मयोगज्ञानयोग भक्तियोगरूपोपायங்களை उपदेशिத்து अन्ततः चरमश्लोकத்தில் प्रपत्तियोगத்தையுபदेशिக்கையால் चरमश्लोकத்தை उपायोपदे-शपर्यवसानமென்கிறது. पोषकமிதி । स्वरूपपोषणहेतु வென்றபடி. மேல் द्वयத்தின் भोग्यतैயைக் காட்டுகிறார் सकृदुच्चारणத்தாலே परमपुरुषार्थहेतुவாய்க்கொண்டு इति । मोक्षार्थसङ्कल्पपूर्वक-மான द्वयத்தினுடைய सकृदुच्चारणமே मोक्षरूपपरमपुरुषार्थத்திற்கு हेतुவாகிறதென்று கருத்து. सदानुसन्धानத்தாலே इति । उपायरूपமான प्रथमोच्चारणத்திற்குப் பிறகு உண்டாகும் भोगरूप-மான सदानुसन्धानத்தாலே என்கை. कृतार्थன் – कृतप्रयोजनன், द्वयं भोग्यமிதி । भोग्यமாவது

---

[1] நாரதீயம் 1-32.

**सन्धानத்தாலே कृतार्थனாக்குகையாலே द्वयம் भोग्यம். இவற்றில் திருமந்த்ரத்தினுடைய ऋषिच्छन्दोदेवताबीजशक्तिवर्णविनियोगस्थानन्यासादिகளவ்வோ कल्प-संप्रदायங்களுக்கீடாகக் கண்டுகொள்வது.**

**இத் திருமந்த்ரம் आथर्वणकठाद्युपनिषத்துக்களிலும் மற்றும் मन्वादिशास्त्रங்களிலும் नारायणात्मकहैरण्यगर्भनारदीयबोधायनादिबहुविधकल्पங்களிலும் सुप्रसिद्धवैभव-மாயிருக்கும். मन्त्रान्तरங்களிற் காட்டில் भगवन्मन्त्रங்களधिकமானாற் போலவும் अनन्तங்களான भगवन्मन्त्रங்கள் தன்னில் व्यापकत्रयமधिकமானாற்**

भोगத்திற்கு हेतु, अन्नத்தாலே धरिக்கப்பட்டு दधिक्षीरादिகளாலே पोषितமான शरीरத்திற்கு स्रक्चन्दनादिகள் भोग्यமாமாப்போல் என்று கருத்து. ''अविदित्वा ऋषिच्छन्दो दैवतं योगमेव च । यो याजयेज्जपेद्वापि पापीयान् जायते तु सः'' என்றிருப்பதால் இவற்றிற்கு ऋषिच्छन्दोदेवतादिகளை அறியவேண்டாவோ வென்ன வருளிச்செய்கிறார் **இவற்றிலி**त्यादिना । **இவற்றில்** – रहस्यत्रयத்தில் घटकமான, **ऋषिरि**त्यादि । मन्त्रद्रष्टவானா श्रीबदरिकाश्रमवासि श्रीमन्नारायणனான ऋषिயும், गायत्रीछन्दஸ்ஸும், परमात्माவான அந்த नारायणाख्यदेवतैயும், अं என்கிற बीजமும், आय என்கிற शक्तिயும், शुक्लवर्णமும், भोगमोक्षयोर्विनियोगமும், वैकुण्ठक्षेत्राख्यस्थानமும், अङ्गन्या-सங்களும், आदिशब्दग्राह्यங்களான कीलककवचास्त्रमुद्रादिகளுமென்றபடி. **அவ்வோ कल्पங்கள்** – नारायणात्मकहैरण्यगर्भकल्पादिகள், **संप्रदायம்** – गुरुपरंपरयाप्राप्तமான अनुष्ठानம், **கண்டு கொள்வது** इति । இப்படி कल्पादिகளுக்கீடாக ऋषिच्छन्दोदेवतादिகளை அறியலாமாகையால் திருமந்த்ரத்தில் அவைகளை யறிந்து अनुष्ठिப்பவனுக்கு ''अविदित्वा ऋषिं छन्दः'' என்கிற श्लोकத்தில் சொன்னபடி पापादिகளொன்றும் வாராதென்று திருவுள்ளம்.

இனி இத் திருமந்த்ரத்திற்கு इतरमन्त्रங்களைக் காட்டிலும் ''मन्त्राय महते नमः'' என்று சொல்லும்படியான ஏற்றத்திற்குக் காரணமென்னென்ன வருளிச்செய்கிறார் **இத் திருமந்த்ரமி**त्यादिயால். कठादीत्यत्रादिपदத்தாலே सुबालोपनिषத்திற்கு ग्रहणம். **मन्वादिशास्त्रங்களிலும்** – मनुस्मृति முதலான शास्त्रங்களிலும், **प्रसिद्धवैभवமாயிருக்குமி**ति । இப்படி இதன் वैभवம் बहुविधप्रमाणप्रसिद्धமாயிருப்பதால் ''मन्त्राय महते'' என்று சொல்லும்படியான ஏற்றம் இதற்கு உசிதமென்று கருத்து. இப்படி प्रमाणप्रसिद्धिमात्रமின்றிக்கே மற்றும் बहुविधங்களான உத்கர்ஷங்கள் இருப்பதாலும் सर्वाचार्यர்களும் இம்மந்த்ரத்தையே ஆதரித்துப்போருவர்கள் என்கிறார் **मन्त्रान्तरங்களிற்காட்டிலி**त्यादिना । ''मन्त्राणां परमो मन्त्रः'' என்கிற श्लोकத்தில் पवित्राणां गुह्यानां मन्त्राणां என்பதால் व्यापकमन्त्रங்களை விவக்ஷித்து அதுகளுக்குள்ளே सनातनமான मूलमन्त्रம் परममन्त्रமென்றும் उत्तमம் गुह्यமென்றும், उत्तम-மான पवित्रமென்றும் अर्थம் கொள்ளக்கடவது. இதனால் सामान्यमन्त्रங்களைக்காட்டிலும் परममन्त्रत्वादिகள் कैमुतिकसिद्धங்களாகுமிறே. அன்றிக்கே मन्त्राणां गुह्यानां पवित्राणां

போலவும் [2]''मन्त्राणां परमो मन्त्रो गुह्यानां गुह्यमुत्तमम् । पवित्रञ्च पवित्राणां मूलमन्त्रस्सनातनः'' என்கையாலே வ்யாபகமந்த்ரங்களிலெல்லாத்திலுமதிகமாய், ஸர்வவேதஸாரமாய், ஸர்வாநிஷ்டநிவர்த்தநக்ஷமமாய், ஸர்வபுருஷார்த்தங்களுக்கும் ஸாதகமாய், ஸர்வோபாயங்களுக்குமுபகாரகமாய், ஸர்வவர்ணங்களுக்கும் தந்தாமதிகாராநுகுணமாக வைதிகரூபத்தாலும் தாந்த்ரிகரூபத்தாலுமுபஜீவ்யமாய், வ்யாப்யவ்யாபகஸர்வதத்த்வகண்டோக்திமத்தாய், ஸர்வமந்த்ரநைரபேக்ஷ்யகரமாய், ஸர்வபகவந்மூர்த்திகளுக்கும் ஸாதாரணமாயிருக்கையாலே ஸர்வாசார்யர்களுமித்தையே விரும்பிப்போருவர்கள். ஆழ்வார்களும் [3]''நின் திருவெட்டெழுத்துங்கற்'' றென்றும், [4]'' எட்டெழுத்துமோதுவார்கள் வல்லர் வானமாளவே'' யென்றும், [5]''எட்டெழுத்தும் வாரமாக வோதுவார்கள் வல்லர் வானமாளவே'' யென்றும், [6]''நாடு நகரமுநன்கறிய நமோ நாராயணாய'' வென்றும் [7]''நல்வகையால் நமோ நாராயணா''

---

என்பதை ''पवित्राणां पवित्रं यो मङ्गளானாञ्च मङ्गலम्'' என்கிறவிடத்திற்போல் அஸமாநாதிகரணமாகச் செய்து மந்த்ரங்களுக்குள்ளே பரமமந்த்ரமென்றும் குஹ்யங்களுக்குள்ளே உத்தமகுஹ்யமென்றும் பவித்ரங்களுக்குள்ளே உத்தமபவித்ரமென்றும் யோஜிக்கவுமாம். **ஸர்வவேதேதி** । ஸர்வவேதங்களுடையவும் ஸாரார்த்தத்தை ப்ரதிபாதிக்கையால் ஸர்வவேதஸாரமாயென்கிறது. **ஸர்வாநிஷ்டநிவர்த்தநக்ஷமமாய், ஸர்வபுருஷார்த்தங்களுக்கும் ஸாதகமாயிதி** । ஜபாதிகளாலே என்று கருத்து. **ஸர்வோபாயங்களுக்குமுபகாரகமாய்** இதி । ஸ்வரூபஜ்ஞாநஜநநத்வாரா மூலமந்த்ரம் கர்மயோகஜ்ஞாநயோகாத்யுபாயங்களுக்கும் உபகாரகமாமிறே, வைதிகரூபமாவது ப்ரணவஸஹிதத்வம். தாந்த்ரிகரூபமாவது ப்ரணவரஹிதத்வம். **வ்யாப்யவ்யாபகஸர்வதத்த்வகண்டோக்திமத்தாய்** இதி । இதில் சேதநாசேதநரூபஸகலவ்யாப்யதத்த்வத்திற்கும் நாரசப்தத்தாலே கண்டோக்தியும், அயநசப்தத்தாலே வ்யாபகதத்த்வமான பரமாத்மாவிற்குக் கண்டோக்தியுமுண்டிறே. இதரவ்யாபகமந்த்ரங்களில் இப்படி ஸ்பஷ்டமாக வ்யாப்யதத்த்வகண்டோக்தியில்லையென்று கருத்து. **ஸர்வமந்த்ரநைரபேக்ஷ்யகரமாய்** இதி । இதரமந்த்ரங்களால் வரக்கூடிய ஸகலபலஸித்தியையும் தானே கொடுப்பதால் தன்னை அதிகரித்தவனுக்கு மந்த்ராந்தரநைரபேக்ஷ்யத்தை யுண்டுபண்ணுமென்கை. **ஸர்வபகவந்மூர்த்திகளுக்கும் ஸாதாரணமாய்** இதி । ராமக்ருஷ்ணாதிதத்தந்மூர்த்திகளுக்கு தத்தந்மூர்த்திமந்த்ரம் அஸாதாரணமாய் தத்தந்மூர்த்திமாத்ராராதநோபயுக்தமாயிருப்பது போலன்றிக்கே தத்தந்மூர்த்திமந்த்ரத்தையறியாதவனுக்கும் மூலமந்த்ரம் தத்தந்மூர்த்த்யாராதநத்திற்கு உபயுக்தமாயிருக்குமென்று கருத்து.

---

[2] நாரதீயம் 1-11.
[3] பெரிய திருமொழி 8-10-3.
[4] திருச்சந்தவிருத்தம் 77.
[5] திருச்சந்தவிருத்தம் 78.
[6] திருப்பல்லாண்டு 4.
[7] திருப்பல்லாண்டு 11.

**வென்றும் இத் திருமன்த்ரத்தையே விரும்பிப் போந்தார்கள். ऋषिகளும் [8]''बहवो हि महात्मानो मुनयस्सनकादयः । अष्टाक्षरं समाश्रित्य ते जग्मुर्वैष्णवं पदम्'', [9]''यथा सर्वेषु देवेषु नास्ति नारायणात्परः । तता सर्वेषु मन्त्रेषु नास्ति चाष्टाक्षरात्परः'', [10]''भूत्वोर्ध्वबाहुरत्राद्य सत्यपूर्वं ब्रवीमि वः । हे पुत्रशिष्याश्शृणुत न मन्त्रोऽष्टाक्षरात्परः ॥ तदर्चनपरो नित्यं तद्भक्तस्तन्नमस्कुरु । तद्भक्ता न विनश्यन्ति ह्यष्टाक्षरपरायणाः'', [11]''आसीना वा शयाना वा तिष्ठन्तो यत्र कुत्र वा । नमो नारायणायेति मन्त्रैकशरणा वयम्'' என்றார்கள். இத் திருமன்த்ரத்தை सर्वेश्वरன் श्रीनारदभगवाனையிட்டு श्रीपुण्डरीकனுக்குபदेशिப்பிக்க அவனுமித் தையே परमहितமாகக் கேட்டபடியாலே [12]''पुण्डरीकोऽपि धर्मात्मा नारायणपरायणः । नमो नारायणायेति मन्त्रमष्टाक्षरं जप'' ன்னித्यादिகளிற் சொல்லுகிறபடியே இம்மன்த்ர-निष्ठனாய் मुक्तனானான். இம்மன்த்ரத்தைத் திருமங்கையாழ்வாருக்கு सर्वेश्वरன் தானேயுपदेशिத்தான்.**

இனி भगवत्सकाशात् மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களும் இத் திருமன்த்ரத்தையே விரும்பினார்கள் என்கிறார் **ஆழ்வார்களும்** इत्यादियाल். **எட்டெழுத்தும்** – திருவष्टाक्षरத்தை, **ஓதுவார்கள்** – यथाशास्त्रம் आचार्यसकाशத்தில் ग्रहिத்து ஜபிக்குமவர்கள், **வானம்** – परमपदத்தை, **ஆளவே** – ஆளுகைக்கு, **வல்லர்** – समर्थர். **வாரமாக வோதுவார்கள்** – अष्टसहस्रादिगणनायुक्तமாக ஜபிப்பவர்கள், **நாடு நகரமுமிति** । **நாடு** – பாமரர், **நகரம்** – பரீக்ஷகர், **நன்கறிய** – सार्थமாகவறிய, **நல்வகையால்** – प्रयोजनान्तरप्रसक्तियின்றிக்கே. இப்படி இத் திருமன்த்ரத்தையே ऋषिகளுமாதரித்தார்களென் கிறார் **ऋषिகளுமித्यादि** । ''बहवो हि महात्मानो मुनयस्सनकादयः । अष्टाक्षरं समाश्रित्य ते जग्मुर्वैष्णवं पदम्'' என்கிற श्लोकத்தில் அநேகம் பேர்கள் अष्टाक्षरத்தை आश्रयिத்து மோக்ஷத்திற்குப் போனார்கள் என்று சொல்லியிருப்பதை पुण्डरीकवृत्तान्तத்தாலே மூதலிப்பிக்கிறார் **இத் திருமன்த்ரத்தை** इत्यादिना । **मुक्तனானான்** इत्यन्तेन । सर्वेश्वरன் नारदादिमुखத்தாலே இம் மन्त्रத்தையுपदेशिத்தது மாத்திரமின்றிக்கே திருமங்கையாழ்வாருக்குத் தாமே ஸாக்ஷாத்தாகவுமுपदेशिத்தான் என்கிறார் **இம் மன்த்ரத்தை** इत्यादिना ।

---

[8] நாரதீயம் 1-16.
[9] நாரதீயம் 1-42.
[10] நரஸிம்ஹபுராணம் 18-32.
[11] நாரதீயம்.
[12] இதிஹாஸ ஸமுச்சயம் 33-130.

**இது ப்ரணவசதுர்த்திகளை யொழிந்தபோது ஸர்வாதிகாரமென்னுமிடம் ஸ்ரீவராஹ-புராணத்தில் கைசிகத்வாதசீமாஹாத்ம்யத்திலே [13]"நமோ நாராயணேத்யுக்த்வா ஶ்வபாகః புநராகமத்" என்கிற வசனத்தாலே காட்டப்பட்டது. இவ்வர்த்தம் [14]"நாமஞ்சொல்லில் நமோ நாராயணமே" யென்றும், [15]"நன்மாலைகொண்டு நமோ நாரணா" வென்றும், [16]"நாவாயிலுண்டே நமோ நாரணா வென்றோ-வாதுரைக்குமுரையுண்டே" யென்றுஞ்சொல்லுகிற பாசுரங்களாலும் ஸித்தம். இது ப்ராஹ்மணாதிகளுக்கு அதீதமான க்ரமத்திலே ப்ரணவத்தோடே கூட அஷ்டாக்ஷரமாயிருக்கும். [17]"வைதிகம் தாந்த்ரிகஞ்சைவ ததா வைதிகதாந்த்ரிகம் । த்ரிவிதம் கர்மஸம்ப்ரோக்தம்**

இம் மந்த்ரம் ப்ரணவசதுர்த்திகளை யொழிந்த அவஸ்தையில் ஆப்ராஹ்மணஶ்வபாகம் உபாதேயமாமென் பதை ஸப்ரமாணமாகக் காட்டுகிறார் **இது ப்ரணவசதுர்த்திகளை யொழிந்தபோது** இத்யாதியால் ப்ரணவசதுர்த்திகளையொழிந்தபோது இது ஸர்வாதிகாரமாமென்பதில் ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்தி-களும் ஸூசகங்களென்கிறார் **இவ்வர்த்த**மிதி । **நன்மாலைகொண்டு** – ஶ்ரேஷ்டமான சொல் மாலைகளைக்கொண்டு, **நமோ நாரணாவென்னும்** – திருமந்த்ரமென்கிற, **சொன் மாலை** – ஶப்தஸந்தர்பத்தை, **கற்றேன்** – அறிந்தேன். **நாவாயிலுண்டே** – ஆயாஸப் பட்டு ஸம்பாதிக்கவேண்டாதபடி வாயில் ஜிஹ்வையுண்டே, **நமோ நாரணாவென்று** – அஷ்டாக்ஷரரூபமான, **ஓவாதுரைக்கும்** – அநவரதம் உச்சார்யமாணமான, **உரையுண்டே** – ஸூக்தி-யுண்டே, **பாசுரங்களாலும் ஸித்த**மிதி । இப் பாசுரங்களில் ப்ரணவசதுர்த்தியின்றிக்கே மூல-மந்த்ரம் சொல்லப்படுகிறபடியால் ப்ரணவசதுர்த்திகளை யொழிந்தபோது திருமந்த்ரத்திற்கு ஸர்வாதிகாரத்வம் ஸித்தமாமென்று கருத்து. இப்படி இது ப்ரணவசதுர்த்திகளை யொழிந்த போது ஸர்வாதிகாரமாமென்றால் இதற்கு அஷ்டாக்ஷரத்வம் கூடுவது எங்ஙனேயென்ன வருளிச் செய்கிறார் **இது ப்ராஹ்மணாதிகளுக்கு** இத்யாதியால். இங்கு ஆதிபதத்தால் க்ஷத்ரியவைஶ்யயோர்க்ரஹணம். **அதீதமான க்ரமத்திலே** – "ஓம் நமோ நாராயணாயேதி மந்த்ரோபாஸகః" என்று அத்யயநம் பண்ணப் பட்ட க்ரமத்திலே, **ப்ரணவத்தோடே கூட அஷ்டாக்ஷரமாயிருக்கு**மிதி । த்விஜாதிகளுக்கு ப்ரணவ-நிஷேதமில்லாமையால் அவர்கள் சொல்லும் திருமந்த்ரத்திற்கே அஷ்டாக்ஷரத்வவ்யபதேஶம் முக்யம். இதரர்கள் விஷயத்தில் அது கௌணமென்று கருத்து. இப்படி திருமந்த்ரம் ப்ராஹ்மணாதி-களுக்கு ப்ரணவத்தோடே அஷ்டாக்ஷரமானாலும் ததிதரர்களுக்கு ப்ரணவமில்லாமற்போனால் ஸப்தாக்ஷரமாகவே ஆகாதோ? அப்படி ஸப்தாக்ஷரமாய் ஜபிக்கைக்குப் ப்ரமாணமுண்டோ? வசநாந்தரத்தால் அதற்கும் அஷ்டாக்ஷரத்வத்தை ஸம்பாதிக்கலாமென்னில், அந்த வசநம் தான்

[13] வராஹபுராணம் 139-63.
[14] பெரிய திருமொழி 6-10-1.
[15] முதல் திருவந்தாதி 57, 95.
[16] முதல் திருவந்தாதி 95.
[17] நாரதீயம்.

पञ्चरात्रामृतार्णवे ॥ वैदिकं ब्राह्मणानान्तु राज्ञां वैदिकतान्त्रिकं । तान्त्रिकं वैश्यशूद्राणां सर्वेषां तान्त्रिकन्तु वा ॥ अष्टाक्षरश्च यो मन्त्रो द्वादशाक्षर एव च । षडक्षरश्च यो मन्त्रो विष्णोरमिततेजसः ॥ एते मन्त्राः प्रधानास्तु वैदिकाः प्रणवैर्युताः । प्रणवेन विहीनास्तु तान्त्रिका एव कीर्तिताः'' [18]''न स्वरः प्रणवोऽङ्गानि नाप्यन्यविधयस्तथा । स्त्रीणान्तु शूद्राजातीनां मन्त्रमात्रोक्तिरिष्यते'' என்கிற படியே प्रणवமொழிந்தபோது [19]''तत्रोत्तरायणस्यादिर्बिन्दुमान्विष्णुरन्ततः । बीजमष्टाक्षरस्य स्यात्तेनाष्टाक्षरता भवेत्'' என்கிற प्रक्रियैயாலே எட்டெழுத்துமனுसन्धेयமாக विधिக்கப்பட்டது. प्रणवமொழிந்தாலும் அது கூடினாலுள்ள फलமிவ் வधिकारिகளுக்குண்டென்னுமிடம் [20]''किन्तत्र बहुभिर्मन्त्रैः किन्तत्र बहुभिर्व्रतैः । नमो नारायणायेति मन्त्रस्सर्वार्थसाधक'' इत्यादिகளாலே सिद्धम्. இப்படி प्रणवமொழிய

எதென்ன வருளிச்செய்கிறார் **वैदिकमित्यादिना** । पाञ्चरात्रமாகிற क्षीरसमुद्रத்தில் वैदिकமென்றும், तान्त्रिकமென்றும், அப்படியே वैदिकतान्त्रिकமென்றும் மூன்று विधமாக कर्मம் சொல்லப் பட்டிருக்கிறதென்று இந்த श्लोकத்தின் अर्थம். இந்த कर्मம் ब्राह्मणादिवर्णभेदத்தாலே अनुष्ठेयமென்கிறார் **वैदिकं ब्रह्मणानां त्विति** । ''अष्टाक्षरश्च यो मन्त्रः என்கிற श्लोकத்தில் व्यापक-भगवन्मन्त्रங்களுக்கு प्रणवसाहित्ये वैदिकत्वமும் तद्राहित्ये तान्त्रिकत्वமும் சொல்லப்பட்டது. சிலர்க்கு प्रणवादिகளை निषेधित्तु सप्ताक्षरமான मूलमन्त्रத்திற்கே उपदेशமும் जपமும் வேண்டு மென்கிறது ''न स्वरः'' என்கிற श्लोकம். இப்படி प्रणवविहीनமான मूलमन्त्रத்திற்கு अष्टाक्षर-त्वसंभवप्रकारத்தைச் சொல்லுகிறது ''तत्रोत्तरायणस्यादिः'' என்கிற श्लोकம். இதற்கு अर्थம்:- **तत्र** – मूलमन्त्रத்திலுள்ள, **उत्तरायणस्यादिः** – ''नारायणायेत्युपरिष्टात्'' என்று उत्तरத்தில் சொன்ன नारायणशब्दसंबन्धिயான अयनशब्दத்தினுடைய ஆதியாய், **अन्ततः** – முடிவிலே, **बिन्दुमान्** – अनुस्वारத்தையுடையதாய், **विष्णुः** – विष्णुवाचकமான अकारமானது, **अष्टाक्षरस्य बीजं स्यात्** – अष्टाक्षरத்திற்கு बीजமாகக் கடவது. அந்த बीजத்தை प्रणवस्थानத்தில் சேர்த்தால் प्रणव-மொழிந்த मूलमन्त्रத்திற்கும் अष्टाक्षरत्वமுபபன்னமாகுமென்று கருத்து. **என்கிற प्रक्रियै யாலே** – இந்த श्लोकத்தில் சொல்லப்பட்ட रीதியாலே. **எட்டெழுத்தும் अनुसन्धेय-மாக विधिக்கப்பட்டது** इति । सप्ताक्षरமான मूलमन्त्रத்திற்கு अष्टाक्षरत्वसंपादनம் तेन रूपेणानु-सन्धानार्थமே என்று கருத்து. இனி प्रणवरहितமாக अनुसन्धेयமாகச் சொன்ன तान्त्रिकपक्षத் தில் ''नमो नारायणाय'' என்கிற प्रणवरहितமான मूलमन्त्रத்திற்கு प्रणवसहितமான मूलमन्त्रத் திற்குப் போலே फलसाधकत्वமுண்டோவென்ன வருளிச்செய்கிறார் **प्रणवமொழிந் தாலும் அது கூடினாலுள்ள फलமிவ்வधिकारिகளுக்குண்டென்னுமிடமிதி** ।

18 நாரதீயகல்பம்.
19 நாரதீயம் 1-57.
20 நாரதீயம் 1-41.

---

**अष्टाक्षरமானபோது प्रणवத்திலर्थமெல்லாம் இப் प्रणवप्रतिच्छन्दமாக शास्त्रம் வகுத்த वक्षरத்திலே प्रथमाक्षरம் सर्वसंग्राहकமான கணக்கிலே சுருங்கவनुसन्धेयம். मध्यमाक्षरத்திற்பொருளுமर्थसिद्धமாம். இதில் तृतीयाक्षरத்திற்சொல்லுகிற ज्ञातृत्वादिகளும் நமஸ்ஸில் द्वितीयाक्षरத்தில் प्रकृतिயாலேयनुसन्धेयம்.**

---

**किन्त्वत्रेति** । இந்த ஶ்லோகத்தில் ''नमो नारायणायेति मन्त्रः'' என்று प्रणवविहीनமாயுள்ள मूलमन्त्रத்திற்கேसर्वफलसाधकत्वத்தைச் சொல்லுகையால் அந்த मूलमन्त्रத்திற்கே अधिकारानुगुणமாக प्रणवसहितमूलमन्त्रத்திற்குப்போலே सर्वसाधकत्वத்திற்குத் தட்டில்லையென்று கருத்து. இப்படி स्त्रीशूद्रादिகளால் प्रणवமின்றிக்கே बीजाक्षरத்தாலே எட்டெழுத்தாக்கி अनुसन्धेयமாகில் அங்கு उकारमकारங்கள் இல்லாமையாலும், शेषत्वबोधकமான लुप्तचतुर्थीயினுடைய अनुसन्धानத்திற்கு வழியில்லாமையாலும் प्रणवार्थத்தையெல்லாம் அதில் अनुसन्धिக்க முடியாதேயென்ன வருளிச்செய்கிறார் **இப்படி प्रणवமொழிய अष्टाक्षरமானபோது** इत्यादियाल். **अर्थமெல்லாம்** – सर्वरक्षकत्व सर्वकारणत्वाद्यर्थமெல்லாம். **प्रणवप्रतिच्छन्दமாக** – प्रणवस्थानीयமாக, **शास्त्रம் வகுத்த வக்ஷரத்திலே** – ''बीजमष्टाक्षरस्य स्यात्तेनाष्टाक्षरता भवेत्'' என்கிற शास्त्रம் வகுத்த अक्षरத்திலே, **प्रथमाक्षरம் सर्वसंग्राहकமான கணக்கிலே** – प्रथमाक्षरமான प्रणवம் மேலுள்ள ''नमो नारायणाय'' என்கிற பதங்களின் अर्थங்களுக்கெல்லாம் संग्राहकமான प्रकारத்திலே. **சுருங்க अनुसन्धेयமிதி** । ''न स्वरः प्रणवोऽङ्गानि'' என்கிற वचनத்தில் समस्तமான अकारोकारमकारात्मक प्रणवமே स्त्रीशूद्रादिகளுக்கு निषिद्धம்; व्यस्तமான अक्षरपठनம் निषिद्धமன்று; ஆகையால் उकारத்தைவிட்டு अकारमकारங்களின் अनुसन्धानத்தில் बाधकமில்லை. ஆகையாலே अकारத்தோடு मकारத்தைச் சேர்த்து ''वा पदान्तस्य'' என்று मकारத்தை अनुस्वारமாக்கினால் ''अं'' என்று सिद्धिக்கிறது. அப்பொழுது लुप्तचतुर्थ्यन्तமான अकारத்திலேயே सर्वरक्षकत्व सर्वकारणत्व शेषित्वादिகளை अनुसन्धिக்கலாம். मकारस्थानीयமான अनुस्वारத்தில் ज्ञातृत्वज्ञानत्वादिகளை अनुसन्धिக்கலாமென்று திருவுள்ளம். उकारार्थத்தின் संग्रहप्रकारத்தைக் காட்டுகிறார் **मध्यमाक्षरத்திற்பொருளுமிதி** । सर्वं वाक्यं सावधारणமென்கிற न्यायத்தாலே अर्थात् सिद्धமாமென்றபடி. मकारस्थानத்தில் अनुस्वारத்தை अङ्गीकरिக்காத पक्षத்திலும் ज्ञातृत्वाद्यनुसन्धानस्थलத்தைக்காட்டுகிறார் **இதில் तृतीयाक्षरத்தில்** इत्यादिना । **நமஸ்ஸில் द्वितीयाक्षरத்தில் प्रकृतिயாலே अनुसन्धेयமிதி** । नमश्शब्दघटकமான मः என்கிற षष्ठ्यन्तपदத்தின் प्रकृतिயான मकारத்தில் अनुसन्धेयமென்றபடி.

**प्रणवம் स्वतन्त्रமானபோது एकमात्रம் द्विमात्रம் त्रिमात्रம் सार्धत्रिमात्रமென்றாற்போலே பல प्रकारமாய் अर्थங்களுமப்படியே कार्यकारणावस्थपरमात्मवाचकत्वादिप्रक्रियையாலே பல வகைப்பட்டிருக்கும். व्यापकमन्त्रங்களிலும் प्रणवத்தை परमात्मप्रधानமாகவும் சில शास्त्रங்கள் சொல்லும். இதின் प्रभावம்** [21]''आद्यन्तु त्र्यक्षरं ब्रह्म त्रयी यत्र प्रतिष्ठिता । स गुह्योऽन्यस्त्रिवृद्वेदो यस्तं वेद स वेदवि'' दित्यादि**களிலே प्रसिद्धம். இது** [22]''हविर्गृहीत्वात्मरूपं वसुरण्येति मन्त्रतः । जुहुयात् प्रणवेनाग्ना-

இனி मन्त्राङ्गமான प्रणवமும் अखण्डமாய் परमात्मवाचकமாய் இருக்குமென்று மேல் சொல்லப்போகிறவர்த்தத்திற்கு उपयुक्तமாக मन्त्राघटकமான प्रणवம் परमात्मवाचकமாய் இருக்கும்படியை யருளிச்செய்கிறார் **प्रणवம் स्वतन्त्रமானபோது** इत्यादिना । **பலவகைப் பட்டிருக்குமி**त्यन्तेन । यद्यपि प्रश्नोपनिषத்தில் सत्यकामप्रश्नத்தில் एकमात्रप्रणवोपासकர்களுக்கு मनुष्यलोकप्राप्तियும், द्विमात्रप्रणवोपासकர்களுக்கு अन्तरिक्षलोकप्राप्तियும், त्रिमात्रप्रणवोपासकர்களுக்கு परमात्मप्राप्तियும், சொல்லப்பட்டிருக்கிறது; ஆனாலும் अथर्वशिखोपनिषத்தில் ''ओमित्येतदक्षरम् । अस्य पादाश्चत्वार'' इत्यारभ्य सार्धत्रिमात्र प्रणवोपासनமும் சொல்லப்பட்டிருப்பதை அநுஸரித்தும் ''एकमात्रो भवेत् ह्रस्वो द्विमात्रो दीर्घ उच्यते । त्रिमात्रस्तु प्लुतो ज्ञेयो व्यञ्जनं त्वर्धमात्रकम्'' என்கிற स्मृतिवचनத்தையநுஸரித்தும் एकमात्रं द्विमात्रं त्रिमात्रं सार्धत्रिमात्र மென்றாற்போலே பல प्रकारமாய் என்றருளிச் செய்தது. **अर्थங்களுமப்படியே कार्यकारणावस्थपरमात्मवाचकत्वादिप्रक्रियையாலே பலவகைப்பட்டிருக்குமி**ति । उपनिषத்துக்களில் स्वतन्त्रமான प्रणवம் एकमात्रமானபோது कार्यरूपभूलोकशरीरकपरमात्माவைச் சொல்லுகிறதென்றும், द्विमात्रமானபோது कार्यरूपान्तरिक्षलोकशरीरकपरमात्माவைச் சொல்லுகிறதென்றும், त्रिमात्रமானபோது कार्यरूपस्वर्गलोकशरीरकपरमात्माவைச் சொல்லுகிறதென்றும், सार्धत्रिमात्रமான போது कारणावस्थपरमात्माவைச் சொல்லுகிறதென்றும், சொல்லப்பட்டிருக்கிறதென்று தாத்பர்யம். मन्त्रघटकமான प्रणवமும் अखण्डமாய்க்கொண்டு परमात्मवाचकமாமென்று शास्त्रங்கள் சொல்லுகின்றனவென்கிறார் **व्यापकमन्त्रங்களிலுமி**ति । இனி மூன்றெழுத்துள்ள இந்த प्रणवம் மூன்று वेदத்திற்கும் तुल्यமாகக் கொண்டாடப்பட்டிருக்கிறதென்கிறார் **இதின் प्रभावமி**त्यादियால் **आद्यं तु त्र्यक्षरमि**ति । **त्र्यक्षरं** – மூன்று वर्णமான, **ब्रह्म तु** – ब्रह्मशब्दवाच्यமான प्रणवமோவென்றால், **आद्यं** – सर्ववेदங்களுக்கும் आदियில் சொல்லப்படுகையால் आद्यம். ''यद्वेदादौ स्वरः प्रोक्त'' इति श्रुतेः । **यत्र** – யாதொரு प्रणवத்தில், **त्रयी** – वेदமானது, **प्रतिष्ठिता** – ''ओङ्कारप्रभवा वेदाः । अकारात्मा ऋग्वेदो उकारात्मा यजुःश्रुतिः । सामवेदो मकारात्मा अनुस्वारो ह्यथर्वण'' इत्युक्तेः । **त्रिवृत्** – वर्णत्रयात्मकतया वर्तत इति त्रिवृत् । **अन्यः** – ऋग्यजुस्सामங்களைக் காட்டிலும் विलक्षणமான. **सः** – அந்த प्रणवरूपமான, **वेदः** – वेदமானது,

21
22 மநுஸ்ம்ருதி 11-265.

**வச்யுதாக்யே ஸநாதநே'' என்கிறபடியே ந்யாஸவித்யையில் ஸ்வதந்த்ரமாய் ஆத்மஸமர்ப்பணபரமாயிருக்கும். அக் கட்டளையிலே யிங்கும் ஸமர்ப்பணபரமாகவும் யோஜிப்பார்கள். இவ்விடத்தில் ஸ்வரூபஜ்ஞானப்ராதாந்யத்தாலே ஶேஷத்வாநுஸந்தாநஜ்ஞாநமாத்ரமுபஜீவ்யமென்றும் யோஜிப்பார்கள். அப்போது இச் ஶேஷத்வாநுஸந்தாநமதிகாரத்திலே சேரும். [23]''க்ஷேத்ரஜ்ஞஸ்யேஶ்வரஜ்ஞாநாத்விஶுத்திः பரமா மதா'' என்றது ஶேஷிதத்த்வஜ்ஞாநமாத்ரபரமான போது உபாயாநர்ஹதாநிவ்ருத்திபரம். உபாயரூபஜ்ஞாநாந்தரத்தை விவக்ஷிக்கும்போது மோக்ஷபரம்.**

---

**गुह्यः** – ஸ்த்ரீஶூத்ராதிகளுக்கு அநுபதேஶ்யதயா ஶப்ததோऽர்த்ததஶ்ச கோபநீயம். **तं** – ப்ரணவரூபமான வேதத்தை, **यः** – யாதொருவன், **वेद** – அர்த்தத்தோடும் ப்ரபாவத்தோடுமறிகிறானோ, **सः** – அவனே, **वेदवित्** – வேதத்தை நன்கறிந்தவன் என்கை. இனி மந்த்ராங்கப்ரணவத்திற்கு ஸ்வதந்த்ர ப்ரணவத்திற்குப் போலே ஸமர்ப்பணபரத்வமுண்டென்கிறார் **இது** இதி । **இது** – இந்த அகண்டப்ரணவம், **हविरिति** । **वसुरण्येति मन्त्रतः** – ''वसुरण्यो विभूरसि'' என்கிற மந்த்ரத்தாலே, **आत्मरूपम्** – நிஷ்க்ருஷ்டாத்மஸ்வரூபமான, **हविः** – ஹோம்யமான த்ரவ்யத்தை, **गृहीत्वा** – மனஸ்ஸினால் க்ரஹித்து, ஸநாதநே அச்யுதாக்யே அக்நௌ ப்ரணவேந ஜுஹுயாத் என்றந்வயிப்பது. **ந்யாஸவித்யையில்** – தைத்திரீயத்தில் சொல்லப்பட்ட ந்யாஸவித்யையில், **ஆத்மஸமர்ப்பணபரமாயிருக்கும்**இதி । ''ओमित्यात्मानं युञ्जीत'' என்று ஆத்மஸமர்ப்பணத்திலே விநியுக்தமாயிருக்குமென்கை. **அக்கட்டளையிலே** – ந்யாஸவித்யையில் ஆத்மஸமர்ப்பணகரணமந்த்ரமாய்க்கொண்டு ப்ரணவம் லுப்தசதுர்த்யந்தமாக இருக்கும் கட்டளையிலே, **இங்கும்** – மந்த்ரத்திலும், ப்ரணவத்தை இதி ஶேஷः । இப்படி மந்த்ரத்தில் ப்ரணவம் ஸமர்ப்பணபரமாகில் மந்த்ரத்திற்கு ஸ்வரூபஜ்ஞாநஜநகத்வம் கூடுவது எங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார் **இவ்விடத்திலி** த்யாதிநா । **இவ்விடத்தில்** – மந்த்ரத்தில், **ஸ்வரூபஜ்ஞானப்ராதாந்யத்தாலே** இதி । ஸமர்ப்பணபூர்வபாவியான ஸ்வரூபஜ்ஞாநமே ப்ரதானமாகையாலே என்றபடி. **ஶேஷத்வாநுஸந்தாநமாத்ரமுபஜீவ்யம்**இதி । மாத்ரபதத்தால் ஸமர்ப்பணபரத்வம் வ்யவச்சேதிக்கப்படுகிறது. இது ஸகண்டப்ரணவாபிப்ராயேண । **அப்போது** – ஶேஷத்வாநுஸந்தாநமாத்ரபரமாக யோஜிக்கும் பக்ஷத்தில் **அதிகாரத்திலே சேரும்**இதி । ஸ்வரூபஜ்ஞானம் உபாயாநுஷ்டாநஸம்பாதகமாகையாலே அதிகாரகோடியிலே ப்ரவிஷ்டமென்று கருத்து. ப்ரணவம் அதிகாரபரமென்பதிலும் உபாயபரமென்பதிலும் ப்ரமாணங்காட்டுகிறார் **க்ஷேத்ரஜ்ஞஸ்யே**தி । இந்த வசனத்திற்கு இரண்டுவிதமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் **ஶேஷித்வஜ்ஞாநமாத்ரபரமானபோது** இத்யாதிநா । ஶேஷிதத்வேதி பாடாந்தரம். **ஶேஷித்வஜ்ஞாநமாத்ரபரமான போது** – ஈஶ்வரவிஶேஷ்யகஶேஷித்வப்ரகாரகஜ்ஞாநமாத்ரபரமானபோது, ஶேஷிதத்த்வஜ்ஞாநமாத்ரபரமானபோது என்கிற பாடத்தில் ஶேஷியான ஈஶ்வரரூபதத்த்வத்தினுடைய ஜ்ஞாநமாத்ரபரமானபோது என்று அர்த்தம். **உபாயாநர்ஹதா நிவ்ருத்திபரம்**இதி । விஶுத்திः என்கிற ஶப்தத்திற்கு உபாயாநர்ஹதாபாதகாஶுத்திநிவ்ருத்தியிலே தாத்பர்யம். **உபாயரூபஜ்ஞாநாந்தரத்தை விவக்ஷிக்கும்போது** – ஈஶ்வரஜ்ஞாநாத் என்கிற பதத்தாலே ஈஶ்வரவிஷயகபக்திப்ரபத்திரூபோபாயஜ்ஞாநத்தை விவக்ஷிக்

---

[23] யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி 3-34.

**இப் प्रणवार्थानुसन्धानक्रमத்தை [24]"ईदृशः परमात्मायं प्रत्यगात्मा तथेदृशः । तत्संबन्धानुसन्धानमिति योगः प्रकीर्तितः" என்று श्रीशाण्डिल्यभगवानருளிச்செய்தான். இத்தை [25]"अकारार्थो विष्णुर्जगदुदयरक्षा प्रलयकृन्मकारार्थो जीवस्तदुपकरणं वैष्णवमिदम् । उकारोऽनन्यार्हं नियमयति संबन्धमनयोस्त्रयीसारस्त्र्यात्मा प्रणव इममर्थं समदिशत्" என்று விவரித்தார்கள். [26]"கண்ணபுரமொன்றுடையானுக்கடியேயொருவர்க்குரியேனோ" வென்கிறதும் இப்प्रणवार्थविवरणம். प्रणवத்திலक्षरत्रयத்தையும் वेदत्रयसारமாக श्रुतिस्मृतिகள் प्रपञ्चित्तन.**

---

கும்போது, **मोक्षपर**மிதி । அந்த विशुद्धिपदம் अशुद्धமான प्रकृतिसंबन्धத்தினுடைய आत्यन्तिकनिवृत्तिपरமென்று கருத்து. இனி प्रणवार्थानुसन्धानप्रकारத்தை वचनத்தாலே காட்டுகிறார் **இப் प्रणवार्थानुसन्धानक्रमத்தை** इति । **अयम्** – अकारशब्दवाच्यனான பரமாத்மா, **ईदृशः** – शेषित्वादिधर्मविशिष्टः, **प्रत्यगात्मा**-मकारशब्दवाच्यजीवன் ईदृशः - शेषत्वादिधर्मविशिष्टः इति – என்கிற, **तत्संबन्धानुसन्धानं** – परमात्मप्रत्यगात्माக்களுடைய शेषिशेषभावरूपसंबन्धத்தின் अनुसन्धानமே, **योग इति प्रकीर्तितः** – யோகமென்று சொல்லப்பட்டது. இப் प्रणवार्थத்தை भट्टரும் अक्षरशः स्पष्टமாக வருளிச்செய்தாரென்கிறார் **இத்தை** इत्यादिना । இதற்கு अर्थம்:– जगदुदयरक्षाप्रलयकृत् विष्णुः, **अकारार्थः** – अकारशब्दवाच्यः; **जीवः** – चेतनः, **मकारार्थः** – मकारशब्दवाच्यः, **तदिदं** – அந்த चेतनமானது, **वैष्णवमुपकरणं** – भगवानுக்கு उपकरणம், विधेयप्राधान्यात् तदिदमिति नपुंसकता । இது अचित्तुக்குமுपलक्षणம். **उकारः** – उकारமானது, **अनयोः** – विष्णुजीवयोः, **संबन्धं** – लुप्तचतुर्थीயாலே காட்டப்பட்ட शेषशेषिभावरूपसंबन्धத்தை, **अनन्यार्हम्** – ईश्वरेतरருக்கு अर्हமில்லாதபடி, **नियमयति** – व्यवस्थापयति, **इममर्थं** – இந்த अर्थத்தை, **त्रयीसारः** – वेदसारமான, **त्र्यात्मा** – மூன்று अक्षररूपமான, **प्रणवः** – प्रणवமானது, **समदिशत्** – प्रकाशिப்பித்தது. இனி திருமங்கையாழ்வாருடைய கண்ணபுரமென்றபாசுரம் இப்प्रणवार्थविवरणरूपமென்கிறார் **கண்ணபுரமி**त्यादिना । "கண்ணபுரமொன்றுடையானுக்கு" என்பது अकारार्थविवरणம். "அடியேன்" என்பது लुप्तचतुर्थीसहितमकारार्थविवरणம். "ஒருவர்க்குரியேனோ" என்பது उकारार्थविवरणம். अकारोकारमकारங்கள் त्रयीसारங்களென்பதை श्रुतिस्मृतिகள் வெளியிட்டன வென்கிறார் **प्रणवத்திலி**त्यादिना । श्रुतिயாவது छान्दोग्यம். அதாவது:– "भूरिति ऋग्वेदादजायत भुव इति यजुर्वेदात्सुवरिति सामवेदात्, तानि शुक्राण्यभ्यतपन्, तेभ्योऽभितप्तेभ्यस्त्रयो वर्णा अजायन्त, अकारोकारमकार इति । तानेकधा समभरत्तदेतत् ओमिति" என்பது. स्मृतिயாவது "अकारञ्चाप्युकारञ्च मकारञ्च प्रजापतिः । वेदत्रयान्निरबृहत्भूर्भुव स्सुवरिति च" என்கிறது. निरबृहत् – सारमुद्धृतवानित्यर्थः । बृहि उद्यमने என்றிறே धातुः ।

---

24 ஶாண்டில்யஸ்ம்ருதி 5-17.

25 அஷ்டச்லோகீ 1.

26 பெரியதிருமொழி 8-5-3.

**இவ்வக்ஷரங்களிவ்வர்த்தங்களைச் சொல்லுகிறபடி யெங்ஙனே யென்னில்;** [27]''अष्टाक्षरशरीराङ्गप्रणवाद्यक्षरेण तु । अकारेणाखिलाधारः परमात्माभिधीयते ॥ समस्तशब्दमूलत्वादकारस्य स्वभावतः । समस्तवाच्यमूलत्वाद्ब्रह्मणोऽपि स्वभावतः ॥ वाच्यवाचकसंबन्धस्तयोरर्थात्प्रतीयते'' **என்று** श्री वामनपुराणवचन**த்தாலே** सर्ववाचकजातप्रकृति**யான** प्रथमाक्षर**த்துக்கு** सर्ववाच्यजातप्रकृति**யான** नारायण**ன்** वाच्य**னென்று** प्रसिद्ध**மான** अर्थ**த்தை** वेदार्थसंग्रह**த்திலே யருளிச்செய்தார். இத்தாலே** कारणवाक्यसिद्ध**மான** सकलजगन्निमित्तोपादानकारणत्व**மும் அத்தாலே** आक्षिप्त**மன** सर्वज्ञत्व सर्वशक्तित्वादि गुणवर्ग**முமிங்கே** सिद्ध**மாயிற்று. இவ்வக்ஷரம்** भगवद्वाचक**மென்னுமிடம்** [28]''अ निषेधे पुमान्विष्णौ'' **என்றும்,** [29]''अकारो विष्णुवाचकः'' **என்றும்,** [30]''अ इति

प्रणवघटकங்களான अकाराद्यक्षरங்கள் विष्ण्वाद्यर्थங்களைச் சொல்லும் प्रकारத்தை प्रश्नपूर्वकமாகவருளிச்செய்கிறார் **இவ்வக்ஷரங்களி**त्यादियाल். **अष्टाक्षरे**त्यादि । अष्टाक्षररूपं यत् शरीरम्, अष्टाक्षरमन्त्रமென்றபடி. அதற்கு अङ्गभूतமான प्रणवத்திற்கு आद्यक्षरமான अकारத்தாலே अखिलजगத்திற்குமாधारभूतனான परमात्मा சொல்லப்படுகிறான். இத்தை उपपादिக்கிறார் **समस्तशब्दमूलत्वा**दिति । अकारமானது समस्तशब्दங்களுக்கும் स्वतः कारणமாகையாலும், அப்படியே ब्रह्मமும் वाच्यமான सर्वजगத்திற்கும் स्वतः कारणமாகையாலும் वाच्यवाचकभावसंबन्धமானது அந்த अकारத்துக்கும் ब्रह्मத்துக்கும் औचित्यத்தாலே தோன்றுகிறதென்பது இதினர்த்தம். **वेदार्थसङ्ग्रहத்திலே** इति । यद्वेदादौस्वरः प्रोक्तः என்கிற श्रुत्यर्थविचारावसरத்திலென்று கருத்து. अकारवाच्यत्वத்தாலே ईश्वरனுக்கு வரும் उत्कर्षமென்னென்ன வருளிச்செய்கிறார் **இத்தாலே** इति । **இத்தாலே** – सकलशब्दमूलाकारवाच्यत्वத்தாலே, இப்படி अकारवाच्यत्वத்தாலே कारणत्वம் सिद्धिத்தால் सर्वज्ञत्वादिகளின்றிக்கே कारणत्वம் கூடாது என்கிற अर्थापत्तिबलத்தாலே सर्वज्ञत्वादिகளும் सिद्धिக்குமென்கிறார் **அத்தாலே आक्षिप्तமான** इति । **இங்கே** – ईश्वरனிடத்திலே, இப்படி இந்த अकारம் औचित्यத்தாலே सर्वजगत्कारणत्वத்தைச் சொல்லுகிறதென்றாலும் அது भगवाனாக இருக்கவேண்டுமோ வென்ன வதில் निघण्टुகளையும் प्रयोगங்களையும் प्रमाणங்களாகக்காட்டுகிறார் **இவ்வக்ஷரமி**त्यादिना । **अ निषेधे पुमान्विष्णावि**ति । अ என்பது निषेधवाचकம். असंभव इत्यादौ संभवाभावத்திற்கு वाचकமாக प्रयुक्तமாகிறதிறே. विष्णुवाचकமாம்போது अ என்பது पुल्लिङ्गம். ''अ इति भगवतो नारायणस्य प्रथमाभिधानम्'' என்பது अभियुक्तवचनம். व्याकरणप्रक्रियையாலும் இந்த अकारம் सर्वरक्षकனான

---

[27] வாமநபுராணம்.
[28]
[29]
[30] ஹரிக்ரந்தம்.

யாலே இவ்வளவே ரக்ஷணீயதைக்குறுப்பாகாது. சைதன்யக்ருத்யமென்றால் உபாஸநாதிகளும் மற்றுமுள்ள சேதநவ்ருத்திகளுமெல்லாம் சைதன்யக்ருத்யமாகையாலே இதுக்கொருவாசி சொல்லிற்றாகாது. சேதநனுக்குத் தானே வருமதென்று விவக்ஷிக்கில் உபதேசாதிகள் வேண்டாதொழியும். ஃபலாநுபயுக்தசித்தஸமாதானமாத்ர-மென்னில்; தந்தாம் ருச்யநுரூபமாக ப்ரதிபுருஷம் வேறுபடும். ''வ்ரஜ'' என்று விதேயமாய் ஃபலதத்காமநாதிகளன்றிக்கேயிருக்கிறவித்தை அதிகாரிவிசேஷண-மென்னவொண்ணாது. கர்தவ்யமாக விதிக்கிற ப்ரபத்தி தனக்கே இப்படியே தேனுமொரு கண்ணழிவுபண்ணில் உபாஸநாதிகளையும் இப்படி கண்ணழிக்கலாம். அப்போது இம் முகங்களாலே உபாஸநாதிகளிற்காட்டில் ப்ரபத்திக்கு வ்யாவ்ருத்தி சொல்ல நினைத்தது தலைக்கட்டாது. ஸ்வவிஷயஸ்வீகாரவிசிஷ்டமாய்க் கொண்டு ஃபலப்ரதமாகா நிற்கச் செய்தே இஸ் ஸித்தோபாயம் ஸ்வீகாரத்தாலும்

த்யாதிநா । ப்ரதிகூலரையும் ரக்ஷிக்கவேண்டிவருமென்று கருத்து. சைதன்யக்ருத்யமென்பதை சேதநஸம்பந்திவ்யாபாரமாத்ரமா? அல்லது சேதநனுடைய ஸ்வாபாவிகநிமேஷோந்மேஷாதிவ்யாபாரமாத்ரமா என்று இரண்டாக விகல்பித்து தூஷணமருளிச்செய்கிறார் **சைதன்யக்ருத்யமென்றாலித்யாதிவாக்யத்வயத்தாலே. உபதேசாதிகள் வேண்டாதொழியுமிதி** । உபதேசஜந்யசேஷத்வஜ்ஞாநாதிகள் ஸ்வாபாவிகங்களாகையாலே உபதேசம் வ்யர்தமென்று கருத்து. சித்தஸமாதானபக்ஷத்தில் ஃபலோபயுக்தசித்தஸமாதானம் ப்ரபத்தியோ? ஃபலாநுபயுக்தசித்தஸமாதானம் ப்ரபத்தியோ என்று விகல்பத்தை மனஸ்ஸில் எண்ணி ப்ரதமபக்ஷம் ப்ரபத்தியிலே பர்யவஸந்நமாகையால் த்விதீயபக்ஷத்தில் தூஷணமருளிச்செய்கிறர் **ஃபலாநு-பயுக்தசித்தஸமாதானமாத்ரமேயென்னிலிதி** । **ப்ரதிபுருஷம் வேறுபடுமிதி** । புருஷன்தோறும் சித்தஸமாதானம் வெவ்வேறாகையால் அநுகதமான ப்ரபத்தி ஸித்தியாதென்று கருத்து. ப்ரபத்தி அதிகாரிவிசேஷணமென்கிற பக்ஷத்திலே தூஷணம் காட்டுகிறார் **வ்ரஜ என்று விதேயமாய் ஃபலதத்கா-மநாதிகளன்றிக்கே யிருக்கிறவித்தை** இதி । அதிகாரிவிசேஷணம் விதேயமாகாது. இங்கு வ்ரஜ என்று ப்ரபத்தி விதேயமாகத் தோன்றுகிறது. ப்ரபத்தி ஃபலதத்காமநாபிந்நமாகையாலும் அதி-காரிவிசேஷமாகாது என்று கருத்து. உக்தஞ்ச யாமுநாசார்யைः । ''ஃபலாதிப்யோ விபக்தத்வாத் ப்ரபத்திர்விதேய்ய-நந்வயாத்; விதேயாந்தரஹாநேச்ச நாதிகாரிவிசேஷண'' மிதி । கீழ்ச்சொன்ன பக்ஷங்களுக்கெல்லாம் பொதுவான தூஷணமாக உபாஸநப்ரதிபந்தியை யருளிச்செய்கிறார் **கர்தவ்யமாக விதிக்கிற ப்ரபத்தி தனக்கே** இத்யாதி. உபாஸநாதிகளை கண்ணழித்தால் என்ன பாதகமென்ன வருளிச்செய்கிறார் **அப்போது இம்முகங்களாலே** இதி । உபாஸநமும் ப்ரபத்திதுல்யமானால் ப்ரபத்திக்கு உபாஸநத்தைக் காட்டில் வ்யாவ்ருத்தி சொல்ல நினைத்ததின் அபிமதம் ஸித்திக்காதென்று கருத்து. நநு ''சரணம் வ்ரஜ'' என்று ஸ்வவிஷயஸ்வீகாரத்தை விதிக்கிறதென்றும், ஏகசப்தம் ஸித்தோ-பாயம் ஸ்வவிஷயஸ்வீகாரத்தாலும் நிரபேக்ஷமென்று புத்தி பண்ணவேண்டுமென்றும் சொல்லு

**निरपेक्षமென்று बुद्धि பண்ணவேணுமென்னில்; இது दृष्टिविधिபோலே आरो-पितமாதல் स्ववचनविरुद्धமாதலாம். ஆகையால் ईश्वरன் प्रसादनीयனாய் प्रधान-மான सिद्धोपायம்; भक्तिप्रपत्तिகளிரண்டும் प्रसादनங்களாய்க்கொண்டு प्रधान-மல்லாத साध्योपायங்கள். இவையிரண்டத்தொன்றிலே यथाधिकारம் நிலை யாகக் கடவது. अपेक्षितफलத்துக்குपायமாக விதித்த साधनान्तरங்களை யிடை யிடவேண்டாதபடி प्रपत्तिக்கனந்தரம் भरस्वीकारம் பண்ணின शरण्यன் தனித்து நிற்கும் நிலையைப்பற்ற एकशब्दமென்றுஞ்சொல்லுவர்கள். அதெங்ஙனே யென்னில்; प्रपत्तिயும்பண்ணி अनन्तरமதடியாக उपासनादिகளுமனுஷ்டித்தால் फलोपायமாகக் கடவனான शरण्यன் अकिञ्चनனாய் विलंबक्षमனல்லாதவிவன் திறத்தில் प्रपत्तिக்கும் தனக்கும் நடுவே நிற்பதொரு சுமை சுமத்தாதே**

கிறதென்றும் சொல்லுகிற पक्षத்தை அனுவதித்து நிரஸிக்கிறார் **स्वविषयस्वीकारविशिष्टமாய்க் கொண்டு** इति । स्वविषयस्वीकारविशिष्टமாய்க்கொண்டு फलप्रदமாகாநிற்கச் செய்தே என்பது वास्तवार्थानुवादம். இஸ் सिद्धोपायம் स्वीकारத்தாலும் निरपेक्षமென்று बुद्धिபண்ண வேணுமென்பதால் आरोपणप्रदर्शनம். **இது दृष्टिविधिபோலே आरोपितமாதலி**ति । वस्तुतः स्वविषयस्वीकारसापेक्षமான सिद्धोपायத்தை तन्निरपेक्षமாக अनुसन्धिத்தால் ''मनो ब्रह्मेत्युपासीत'' என்பதுபோலே भ्रमरूपமாகையாலே मोक्षप्रदமாகாது. **स्ववचनविरुद्धமாதலாமி**ति । शरणं व्रज என்று स्वविषयस्वीकारத்தை विधिக்கிறதென்று சொல்லி ''एकशब्दம் स्वीकारத்தால் निर-पेक्षம்'' என்றும் சொல்லுகிறது என்றால் भगवद्वचनமே परस्परविरुद्धமாமென்று கருத்து. सिद्धान्तத்தை निगमिத்துக்காட்டுகிறார் **ஆகையாலீश्वरனி**ति । இதனால் प्रसादनीयனான सर्वेश्वरன் साक्षात् फलप्रदனென்றும் भक्तिप्रपत्तिகள் प्रसादकங்களாய்க்கொண்டு व्याजभूत साध्यो-पायங்களென்றும் சொல்லித்தாயிற்று. गुरुलघुக்களான भक्तिप्रपत्तिகளுக்கு विकल्पம் கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் **இவையிரண்டத்தொன்றில் यथाधिकारம் நிலையாகக் கடவது** इति । गुरुलघुக்களுக்கு समविकल्पம் கூடாதாகிலும் शक्ताशक्तभेदத் தாலே व्यवस्थितविकल्पம் கூடுமென்று கருத்து. இனி एकशब्दத்திற்கு योजनान्तरமருளிச் செய்கிறார் **अपेक्षितफलத்துக்குपायமாக விதித்த साधनान्तरங்களை** इत्यादिना । उपासकன் अङ्गமாக प्रपत्तिயைப்பண்ணி अनन्तरம் उपासनத்தையும் பண்ணினால் प्रसन्नனாகும் ईश्वरன் स्वतन्त्रप्रपत्तिनिष्ठன் விஷயத்தில் प्रपत्तिக்கு अनन्तरம் साधनान्तरங்களை अपेक्षिக்காமல் साधनान्तरस्थानத்தில் தானொருவனே நின்று फलம் கொடுக்கையால் ''मामेकं'' என்கிறது என்று கருத்து. இத்தை उपपादिக்கிறார் **அதெங்ஙனேயென்னிலீ**त्यादिना । **சுமை சுமத்தாதே** इति । उपासकனுக்கு अङ्गप्रपत्तिயைப் பண்ணி अनन्तरம் अनुष्ठेयமான उपासन-மானது இவனுக்கு अनुष्ठिக்க शक्यமல்லாமையாலே அதை சுமை என்கிறது. அதை

**இவன் சுமையைத் தன் குணங்களின் மேலேயேறிட்டு [84]"शरणं त्वां प्रपन्ना ये ध्यानयोगविवर्जिताः । तेऽपि मृत्युमतिक्रम्य यान्ति तद्वैष्णवं पदम्" என்றும், [85]"ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தா" யென்றுஞ் சொல்லுகிறபடியே குணவிஶிஷ்டனான தானே நிரபேக்ஷஃபலப்ரதனாய் நிற்கும் நிலையை அனுஸந்தித்துக் கொண்டு ஶரணமாகவடையென்று இங்கு சொல்லிற்றாயிற்று.**

**இப்படியே பரிபூர்ணனான தன்னை ப்ரபத்தி பண்ணும்போது ஆனுகூல்யஸங்கல்பாதி- களை யொழிய வேறொரு பரிகரத்தை யிதிலே வித்யாந்தரத்திற்போலே சொருகிக்கொண்டு அதுவும் ப்ரஸாதநமான உபாயகோடியிலே நிற்கிறதென்றும் நினைவைக் கழிக்கைக்காக ஏகஶப்தனென்றும் சொல்லுவர்கள். ஆஜ்ஞாநுஜ்ஞை- யாலே அனுஷ்டிக்கும் கர்தவ்யாந்தரங்களுமெல்லாம் ப்ரபத்திக்குத் துணையன்று.**

---

**சுமத்தாதே** – அதை இவனும் பண்ணவேண்டுமென்று விதியாதே என்றபடி. **தன் குணங்களின் மேலே யேறிட்டு** இதி । தன் குணங்களில் சுமையையேறிடுகை யாவது:– அகிஞ்சனனான இவன் நடுவே பக்த்யுபாயத்தையும் பண்ணக்கடவனல்லன்; அதைப் பண்ணினால் தரக்கடவ ஃபலங்களை கேவலதயையினாலே நாமே இவனுக்குத் தரக்கடவோமென்று ஸங்கல்பிக்கை. இப்படி அகிஞ்சனவிஷயத்தில் பக்தியோகமில் லாமலே ஸ்வதந்த்ரப்ரபத்திமாத்ரத்துக்கு ஃபலம் கொடுப்பனென்பதில் ப்ரமாணங்காட்டுகிறார் **शरणं त्वां प्रपन्ना ये** இதி । இதில் ध्यानयोगविवर्जिताः त्वां प्रपन्नाः ये तेऽपि मृत्युमतिक्रम्य என்றிருப்பதால் கேவலப்ரபத்திக்கே ஃபலங்கொடுப்பனென்பதில் இது ப்ரமாணமென்று கருத்து. இதில் ஆழ்வார் ஶ்ரீஸூக்தியும் ப்ரமாணமென்கிறார் **ஆறெனக்கிதி** । **எனக்கு** – அகிஞ்சனனான எனக்கு, நின்பாதமே **ஆறு சரணாக** – முக்யோபாயமாக, **தந்தொழிந்தாய்** – தந்தாயென்றபடி. இங்கு ஆறு சரண் என்கிற த்விருக்தியாலே முக்யோபாயத்வம் சொல்லப்பட்டது. **நிரபேக்ஷஃபலப்ரத- னாய் நிற்கும் நிலையை** இதி । பக்த்யுபாயத்தையபேக்ஷிக்காமலே ஃபலப்ரதனாக இருக்கும் இருப்பை என்றபடி.

இனி ப்ரபத்திக்கு ஆனுகூல்யஸங்கல்பாத்யங்கங்களையொழிய வர்ணாஶ்ரமதர்மங்கள் துணையன்று. என்னையொருவனையே துணையாகப் பற்று என்பதில் ஏகஶப்தத்திற்கு நோக்கு என்று யோஜனாந்தரமருளிச்செய்கிறார் **இப்படியே பரிபூர்ணனான தன்னை** இத்யாதியால். வர்ணாஶ்ரமதர்மங்கள் துணையன்று என்பதை ஈஶ்வரோக்தியாலே உபபாதிக்கிறார் **आज्ञानुज्ञेत्यादिना** । இவ்வர்த்தை பூர்ணப்ரபத்தியில் தெளிவில்லாதவனுடைய ஸமுதாயஜ்ஞானபூர்வகஸக்ருதுச்சாரணரூபோக்தி-

---

84 ப்ராஹ்மபுராணம்.
85 திருவாய்மொழி 5-7-10.

**இப் ப்ரபத்தியாலே வஶீக்ருதனாய் ஃபலந்தரவிருக்கிறநானொருவனுமே இக் க்ஷணிகோபாயத்துக்குப் ப்ரதிபூவாய் நின்றேன். இப் ப்ரபத்தி ஃபலத்தைப்பற்ற வேறொரு தேவை செய்யவேண்டா. அத்தேவையைத் துணையாகக் கொண்டு உன்னை நான் ரக்ஷிக்கப்புகுகிறேனல்லேனென்று தாத்பர்யம். இத்தால் ஆனுகூல்யஸங்கல்பாதிவிஶிஷ்டப்ரபத்தியொழிய ப்ரபத்திபரிகரமென்று பேரிட்டுத் தனக்கு வேறொரு ஸஹகாரிகாரணத்தைக் கூட்ட வேண்டாவென்று சொல்லிற்றாயிற்று. [86]''येन केनापि प्रकारेण द्वयवक्ता त्वं'' என்றும், [87]''प्रपत्तिवाचैव निरीक्षितुं वृणे'' என்றுஞ்சொல்லுகிறபடியே பூர்ணப்ரபத்திக்கபேக்ஷிதமான தெளிவி ல்லாவிடிலும் யதாகதஞ்சிதநுஷ்டானத்தாலே கார்யஞ்செய்கிற இவ்வுபாயத்துக்கு வேறொரு பரிகரத்தைத்தேட ப்ரஸங்கமில்லையிறே. [88]''ततस्सागरवेलायां दर्भाना- स्तीर्य राघवः । बाहुं भुजगभोगाभमुपधायारिसूदनः ॥ अञ्जलिं प्राङ्मुखः कृत्वा प्रतिशिश्ये महोदधेः'' என்று பெருமாள் ஸமுத்ரத்தைப்பற்ற ஶரணாகதி பண்ணவிடத்திலும் [89]''स राजा परमापन्नो देवश्रेष्ठमगात्तदा । शरण्यं सर्वभूतेशं भक्त्या नारायणं हरिम् ॥ समाहितो निराहा- रष्षड्रात्रेणमहायशाः । ददर्शादर्शने राजा देवं नारायणं प्रभुम्'' என்று ஸப்தவ்யாதோபாக்யானத்திலே ப்ரஹ்மதத்தசரிதத்திலுஞ் சொன்ன ப்ரகாரங்களுமெல்லாம் ப்ரபத்திக்கங்கமன்று.**

---

ப்ரபத்தியே ஃபலப்ரதமாயிருக்க பூர்ணப்ரபத்திக்கு பரிகராந்தராபேக்ஷை வேண்டுமோ என்று கைமுதிகந்யாயத்தாலே த்ருடீகரிக்கிறார் **येन केनापीत्यादिना** । பெருமாள் ஸமுத்ரராஜனை ஶரணமடைந்த போதும் ஹரிவம்ஶத்தில் ஸப்தவ்யாதோபாக்யானத்தில் சொன்ன ப்ரஹ்மதத்தசரித்ரத்திலுள்ள அவனுடைய ஶரணாகதியிலும் தர்பாஸ்தரண நிராஹாரத்வாதிபரிகரங்கள் காணப்படுகின்றனவே என்ன வருளிச் செய்கிறார் **ततस्सागरवेलायामिति । सपरिकरप्रतिशयनादिप्रधानமாகையாலே** इति । அவ்விரண்டி டத்திலும் ப்ரதிஶயனமே அங்கியாகச் சொல்லப்படுகையாலே தர்பாஸ்தரணாதிகள் அதற்கு பரிகரங்களாகச் சொல்லப்பட்டதே யொழிய ப்ரபத்திக்கு பரிகரங்களாகச் சொல்லப் படவில்லையென்று கருத்து. ''एकोऽपि कृष्णे सुकृतप्रणामः'' என்றாரம்பித்து ''कृष्णप्रणामी न पुनर्भवाय'' என்று புனர்ஜன்மநிவர்தகமாகச் சொல்லப்பட்ட ஸுக்ருதப்ரணாமம் ஶரணாகதியன்றோ? அது ஶரணாகதியாகில் அதின் ஸ்வரூபம் बाहुभ्यां त्रिरायाममञ्जलिकरणं, त्रिराजानुप्रसरणं, ललाटनासा- कपोलानां त्रिर्भूस्पर्शो यथा भवति तता साष्टाङ्गप्रणामस्य द्वादशावृत्तिः என்று சொல்லப்பட்டிருப்பதால்

---

86 ஶரணாகதி கத்யம்.
87 வரதராஜஸ்தவம் 92.
88 ராமாயணம் யுத்தகாண்டம் 21-1, 2.
89 ஹரிவம்சம் 27-11,13.

**இவ்விரண்டிடமும் सपरिकरप्रतिशयनादिप्रधानமாகையாலே அங்கந்த नियमங்கள் சொல்லப் प्राप्तम். இப்படி सुकृतप्रणामத்திலுங்கண்டுகொள்வது. இங்கு प्रपत्त्यध्यायादिகளிற் சொன்ன वानुकूल्यसङ्कल्पादिपरिकरங்களொழிய வேறொரு नियमங்கள் வேண்டா. आकिश्चन्यैकधनரான द्रौपदी-दमयन्ती-राक्षसी-विभीषण-क्षत्रबन्धु-मुचुकुन्द-गजेन्द्र-पाण्डव-देव-सुमुख-त्रिशङ्कु-शुनश्शेप-किरात-काक-कपोतादिகள் शरणागतரா கிறபோது அப்போதை आनुकूल्यादिகளை யொழிய வேறொரு इतिकर्तव्य-தையைச் சொல்லக் கண்டிலோம். क्षणकालसाध्यமாய் निरपेक्षமான प्रपत्तिमात्रத் தாலே கடுக அவ்வோ शरणागतர்க்கு அவ்வோ अपेक्षितसिद्धियுங்கண்டோம். இப்படி मोक्षार्थप्रपत्तिயிலும் இவன் கோலின காலத்திலே फलसिद्धिக்குக் குறையில்லை. இது "मा शुचः" என்கிற वाक्यத்திற்கும் तात्पर्यம். "परित्यज्य" என்கிறவிடத்திலே परिकरान्तरनैरपेक्ष्यஞ்சொன்ன பொருளிலே एकशब्दத்தி**

அதற்கு भूस्पर्शादिपरिकरापेक्षै யவர்ஜனீயமன்றோவென்ன வருளிச்செய்கிறார் **இப்படி सुकृतप्रणामத்திலும் கண்டுகொள்வது** इति । सुकृतप्रणामம் शरणागतिயன்று; पुनर्जन्मनिवर्तक-மான भगवत्प्रसादकारणीभूतமான ஒரு प्रणामरूपक्रियाविशेषம். ஆகையால் அங்கு சொன்ன परिकरங்கள் प्रपत्तिக்கு अङ्गங்களாகாது என்று கருத்து. இப்படி आनुकूल्यसङ्कल्पादिகள் தவிர प्रपत्तिக்கு परिकरान्तरம் வேண்டாமென்பதை पूर्वाचारத்தைக் காட்டி स्थिरीकरिக்கிறார் **இங்கு प्रपत्त्यध्यायादिகளிற் சொன்ன** इति । दमयन्ती – नलपत्नी । இவள் விவாஹகாலத்தில் ஐந்து நளன்கள் தோற்றாநிற்க, நான் போடுகிற மாலை साक्षान्नलन் கழுத்திலேயே விழவேண்டுமென்றெண்ணி "शरणं प्रतिदेवानां प्राप्तकालममन्यत" என்கிறபடி शरणागति பண்ணினாள். राक्षसी – त्रि ஜடை. இவள் பிராட்டியிடத்தில் शरणागतिயைச் செய்தாள் सुमुखன் – पितृहन्तावान गरुडனிடத்தில் भयத்தாலே भगवाனை சரணமடைந்த मातलिजा-मातावान सर्पराजकुमारன். परिकरान्तरनिरपेक्षமான शरणागतिயாலே அவர்களுக்கெல்லாம் फलம் सिद्धिத்ததோ வென்ன வருளிச்செய்கிறார் **क्षणकालसाध्यமாயிति । கண்டோம்** – शास्त्रத்தாலே प्रत्यक्षம்போல் அறிந்தோம். இப்படி दृष्टप्रपत्तिக்கு फलसिद्धि காணப்பட்டா லும் मोक्षार्थप्रपत्तिக்கு फलसिद्धि கண்டதுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் **இப்படி** इत्यादिயால். **फलसिद्धिக்குக் குறையில்லை** इति । "सामान्यतस्तु दृष्टाऽतीन्द्रियाणां प्रतीतिरनु-मानात्" என்கிறபடியே दृष्टार्थप्रपत्तिदृष्टान्तத்தாலே अदृष्टार्थप्रपत्तिயிலும் फल सिद्धि अनुमानத் தாலே निश्चितமென்று கருத்து. இது – கோலின காலத்தில் फलसिद्धिயானது, मा शुचः என்கிற वाक्यத்திற்கும் शोकनिषेधத்திலே तात्पर्यமாகையாலே அதனால் परिकरान्तराभाव-कालविलंबप्रयुक्तशोकமும் निवर्त्यமென்று கருத்து. இந்த प्रपत्तिनैरपेक्ष्यம் परित्यज्य என்பதில் विवक्षितமாம்போது एकशब्दம் पुनरुक्तமாகாதோ என்கிற ஶங்கையை परिहरिக்கிறார்

**லிந்த योजनை दृढीकरणार्थமாகக்கடவது. இதுக்கு अर्थान्तरம் विवक्षितமாகவு மாம். एकशब्दத்துக்கிது பொருளானால் ''परित्यज्य'' என்கிற விதுக்கங்கு சொன்ன अर्थान्तरங்களைக் கொள்ளவுமாம். सपरिकरप्रपत्तिக்கு उपासनादि-களான अङ्गिகளையும் இவற்றின் परिकरங்களான धर्मान्तरங்களையுங் கழிக் கிற விப் பொருள்களில் இவ்வேकशब्दம் शरण्यனை विशेषिத்தபடி யென் னென்னில்; अकिञ्चनன் பக்கலிலே இவை प्रसादनமாய்க்கொண்டு शरण्य-னோடு துவக்கற்றமை காட்டுகைக்காக ''मामेकं'' என்கிறது ''सर्वधर्मान्'' என்கிற கீழில் सर्वशब्दத்தையும், ''सर्वपापेभ्यः'' என்கிற மேலில் सर्वशब्दத்தை யும் பார்த்திவ்வேकशब्दம் सर्वशब्दத்துக்குப் प्रतिसंबन्धिயாய் நிற்கிறதென்றுஞ் சொல்லுவர்கள். அப்போது,**

---

**परित्यज्य என்கிறவிடத்திலே** इति । **दृढीकरणार्थமாகக்கடவது** इति । அப்போது एकशब्दம் अभ्यासरूपतात्पर्यलिङ्गமாய்க்கொண்டு प्रपत्तिயின் नैरपेक्ष्यத்தை दृढीकरिக்குமென்று கருத்து. परित्यज्य என்பதற்கு नैरपेक्ष्यம் கொள்ளும்பக்ஷத்தில் एकशब्दத்திற்கு प्राप्यस्यैव प्रापकत्व-मित्याद्यर्थान्तरங்களில் ஒன்றைக் கொள்ளவுமாமென்கிறார் **இதுக்கு अर्थान्तरம் விவக்ஷிதமாகவுமாமிதி** । एकशब्दத்திற்கு नैरपेक्ष्यार्थकत्वம் கொள்ளும் பக்ஷத்தில் परित्यज्याவுக்கு अनुवादाद्यर्थान्तरம் கொள்ளவுமாமென்கிறார் **एकशब्दத்திற்கு இது பொருளானாலிதி** । இப்படி एकशब्दத்தாலே सपरिकरप्रपत्तिயில் उपासनத்திற்கும் तदङ्गங் களுக்கும் अनन्वयம் சொல்லப்படுகிறதென்னில்; இந்த एकशब्दம் शरण्यனுக்கு எப்படி विशेषणமாகுமென்று ஶங்கித்து समाधानமருளிச்செய்கிறார் **सपरिकरप्रपत्तिக்கு** इत्यादियाल். **अकिञ्चनன்பக்கலிலே இவை प्रसादनமாய்க்கொண்டு** इति । **இவை** – उपासनமும் तत्परिकरங்களும். **துவக்கற்றமை காட்டுகைக்காக** इति । शक्तனான उपासकன் விஷயத்தில் उपासनமும் तत्परिकरங்களும் प्रसादकतया எப்படி शरण्यனோடு संबन्धिக்குமோ அப்படி अकिञ्चनன்விஷயத்தில் उपासनத்திற்கும் तत्परिकरங்களுக்கும் शरण्यனோடு प्रसादकतया संबन्धமில்லாமையைக் காட்டுகைக்காக என்றபடி. இதனால் अकिञ्चनன் விஷயத்தில் प्रसादकतया उपासनத்தோடும் तत्परिकरங்களோடும் संबन्धமில்லாத என்னை யொருவனையுமே शरणமடை யென்றால் अकिञ्चनனுடைய सपरिकरமான प्रपत्तिக்கு उपासनतत्परिकरங்களால் निरपेक्षत्वம் अर्थात् सिद्धिக்குமென்று கருத்து. மேல் कारिकैயில் ''सर्वसाध्येष्वभिन्नता'' என்று சொல்லப்போகிற योजनान्तरத்தை सोपपत्तिकமாக उपपादिக் கிறார் **सर्वधर्मान् என்கிற கீழில் सर्वशब्दத்தையுமி**त्यादिना । तत्तदलौकिक श्रेयஸ்ஸுக்களுக்கு साधनங்களான धर्मங்களை விட்டு என்னையொருவனையே साधनமாகப்பற்று; அதாவது उपायமாகப்பற்று. शरणं व्रज इति यावत् என்றால் साध्यங்களான அவ்வோ

★सुदुष्करेण शोचेद्यो येनयेनेष्टहेतुना ।
स स तस्याहमेवेति चरमश्लोकसंग्रहः ॥ ★

**இத்தாலே என் சொல்லிற்றாயிற்றென்னில்;** [90]''यद्येनकामकामेन न साध्यं साधनान्तरैः । मुमुक्षुणा यत्साङ्ख्येन योगेन न च भक्तितः ॥ प्राप्यते परमं धाम यतो नावर्तते यतिः । तेन तेनाख्यते तत्तन्न्यासेनैव महामुने ॥ परमात्मा च तेनैव साध्यते पुरुषोत्तमः'' **என்கிற கட்டளையிலே தனக்கபிமதங்களாயிருப்பதேதேனுமொரு ஃபலங்களைப் பற்ற அவற்றுக்கு அநுகுணமாகத் தனித்தனியே शास्त्रங்களாலே विधिக்கப் பட்ட उपायங்களில் ज्ञानभावத்தாலேயாதல், ज्ञानமுண்டாயிருக்க शक्त्यभावத் தாலேயாதல், இவையிரண்டுமுண்டாயிருக்க விளம்பாக்ஷமत्वத்தாலேயாதல் शोकித்தவधिकारिயைப்பற்ற அவ் उपायங்களொன்றிலும் நீ யலையவேண்டா; அவை தனித்தனியே தரும் ஃபலங்களுக்கெல்லாம் प्रपत्तिवशीकृतனான நானொருவனுமே யமையுமென்று சொல்லிற்றாயிற்று. பல औषधங்கள் தரவல்ல आरोग्यத்தை யெல்லாம் இஸ் सिद्धौषधமொன்றுமே தரவற்றாகை**

---

ஶ்ரேயஸ்ஸுக்களுக்கு அவன் ஒருவனே ஸாதனமென்று தோன்றுகையால் सर्वसाध्य-விஷயங்களிலே பகவானாகிற ஸாதனத்திற்கு அபிந்நत्वம் தோன்றுமிறே. **सर्वपापेभ्यः என்கிற மேலில் सर्वशब्दத்தையும் பார்த்து** இதி । இங்கு तत्तद्धर्मங்களாலே निवृत्तिக்கக் கூடிய सर्वपापங்களையும் நானொருவனே நிவர்த்திப்பிக்கிறேன் என்றால் सर्वपाप-निवृत्तिरूपसाध्यविஷயத்தில் பகவானொருவனுக்கே அபிந்நஸாதனत्वம் ஃபலிக்குமிறே.

இந்த யோஜனையில் ஃபலிதமான चरमश्लोकार्थத்தைக் காரிகையாலே संग्रहிக்கிறார் **அப்போது सुदुष्करेण** இதி । இந்தக் காரிகையில் ''स स तस्याहमेव'' என்று பகவானுக்கு साधितமான तत्तत्साधनान्तराभेदकथनத்தாலே ஃபலிக்குமர்த்தத்தை प्रश्नपूर्वकமாக வருளிச்செய் கிறார் **இத்தாலே** इत्यादिना । **यद्येनेति** । இது साध्योपायशोधनाधिकारத்தில் व्याख्यातம். **கட்டளை யிலே** – प्रकारத்திலே, இந்த अहिर्बुध्न्यसंहिताश्लोकத்திலே सर्वधर्मप्रतिकोटिயாக न्यासமன்றோ தோன்றுகிறது. பகவானுக்கு तत्प्रतिकोटित्वம் தோன்றவில்லையே என்கிற ஶங்கையை चरमश्लोकानुगुणமாக ஒரு दृष्टान्तத்தைக் காட்டி परिहरिக்கிறார் **பல औषधங்களीत्यादिना** । இந்த दृष्टान्तத்தில் பல औषध स्थानத்தில் सर्वधर्मங்களும் தோன்றுகையாலும் सिद्धौषध-स्थानத்தில் ஏகனான பகவான் தோன்றுகையாலும் औषधसेवनस्थानத்தில் शरणवरणம் தோன்றுகையாலும் सर्वधर्मप्रतिकोटिயாக பகவானே सिद्धिக்கையால் उक्तஶங்கைக்கு

---

[90] அஹிர்புத்ந்யஸம்ஹிதை 37-25.

**யாலே நீ औषधान्तरங்களுக்கலமரவாதேயிந்த औषधமொன்றையுமே उपजीविக்கவமையும்; இதுவுனக்கந்த औषधங்களாலே கழிக்கப்படும் व्याधिகளெல்லாத்தையுங் கழிக்கும்; உனக்குப் பின்பு सर्वभोगங்களையும் भुजिக்கலாம்; நீ आरोग्यத்தையும் भोगங்களையுமிழக்கிறோமென்று வெறுக்க வேண்டாவென்று சொல்லுமாப்போலே யிருக்கிறது இச் चरमश्लोकம். सर्वशब्दप्रतिसंबन्धिயான வேकशब्दம் सिद्धोपायप्राधान्यத்தாலே शरण्यனை विशेषिத்துக் கொண்டு நின்றாலும் "न्यासेनैव" என்கிறபடியே प्रपत्तिயொன்றுமே सर्व-धर्मान्तरस्थानத்திலும் विधिக்கப்படுகிறதென்று फलिக்கும். இத்தால் त्रिवर्गार्थि-களும் இப் भगवत्प्रपत्ति பண்ணலாமென்றதாயிற்று. அப்போது [91]"त्वयापि प्राप्तमैश्वर्यं यतस्सन्तोषयाम्यहम् । नाहमाराधयामि त्वां तव बद्धोऽयमञ्जलिः", [92]"स त्वं प्रहर वा मा वा मयि व्रजं पुरन्दर । नाहमुत्सृज्य गोविन्दमन्यमाराधयामि भो" इत्यादिகளிற்படியே**

---

अवकाशமில்லையென்று திருவுள்ளம். **அலமரவாதே** – अशक्तिயினாலே शोकिயாதே, இப்படி चरमश्लोकத்தில் एकशब्दविशेषितமான सिद्धोपायமே सर्वधर्मप्रतिसंबन्धिயாய்த் தோன்றா-நிற்க संहितावचनத்தில் "न्यासेनैव" என்று न्यासத்திற்கே सर्वधर्मप्रतिसंबन्धित्वம் தோன்றும்படி சொன்னதற்கு भावமென்னென்ன வருளிச்செய்கிறார் **सर्वशब्दप्रतिसंबन्धिயான एकशब्द-मित्यारभ्य विधिக்கப்படுகிறதென்று फलिக்குமித्यन्तेन** । तथा च संहितावचनத்தில் சொன்னது फलितार्थकथनरूपமாகையாலே विरोधமில்லை யென்று கருத்து. இப்படி न्यासத்திற்கே सर्वफलसाधनत्वம் சொன்னதாலே வரும் प्रयोजनத்தை யருளிச்செய்கிறார் **இத்தாலிति** । **त्रिवर्गार्थिகளும்** – धर्मार्थकामार्थिகளும், **அப்போது** – त्रिवर्गार्थिகளும் भगवानிடத்தில் भरन्यासம் பண்ணலாமென்று सिद्धिத்தபோது, **त्वयापीति** । இது विष्णुधर्मश्लोकம். ஒரு தபஸ்வியைப் பார்த்து इन्द्रன் நீ என்னைக்குறித்து தபஸ் செய், உனக்கு सर्वैश्वर्यத்தையும் நான் கொடுக்கிறேன் என்று சொல்ல, परमैकान्तिயான அந்த தபஸ்வியின் प्रत्युत्तरமிது. ஓய் इन्द्रனே! உம்மாலும் इतरருக்கு வரம் கொடுக்கும்படியான ऐश्वर्यம் யாதொரு भगवानிடத்தில் நின்றும் அடையப்பட்டதோ, அந்த भगवानை நான் தபஸ்ஸினாலே ஸந்தோஷப்படுத்துகிறேன்; நான் உன்னை आराधिக்கிறேனில்லை. உன் விஷயத்தில் अञ्जलिயானது பண்ணப்பட்டது. இப்படி उपेक्षिக்கப்பட்ட நீ என்னிடத்தில் वज्रायुधத்தைப் போட்டு कोपத்தால் அடித்தாலுமடி; விட்டாலும் விடு; நான் गोविन्दனை விட்டு வேறொருவனை आराधिக்கமாட்டேன். **इत्यादिகளிற்**

---

[91] விஷ்ணுதர்மம் 2-14.
[92] விஷ்ணுதர்மம் 8-28.

**नित्यनैमित्तिकங்களில் विशेषणமாய்ப் புகுமளவொழிய மற்றும் सर्वावस्थै-யிலும் देवतान्तरस्पर्शமற்றிருக்கை उचितம். मोक्षத்துக்குपायान्तरार्थिகளாய் उपाय-विरोधिகளைக் கழிக்கவேண்டுவார்க்கும் இப் प्रपत्ति பண்ணலாம்; प्राप्ति-विरोधिயைக் கழிக்க வேண்டுவார்க்குமிப் प्रपत्तिதானே யமையுமென்று प्रपत्तिயினுடைய सकलाभिमतसाधनत्वமிங்கே சொல்லிற்றாயிற்று. இதில் प्रपत्ति उपायविरोधिயைக் கழிக்குங்கட்டளையை श्रीगीताभाष्यத்தில் द्वितीययोजனையிலே யருளிச்செய்தார். प्राप्तिविरोधिயைக் கழிக்குங்கட்டளையை गद्यத்திலே யருளிச்செய்தார். இவை யிரண்டிடத்திலுமொன்றையனாதரித்தொன்றை யருளிச்செய்தபடியன்று. இரண்டிடமும் सर्वाभिमतसाधनமான இவ்வுபாயத் தின் प्रभावத்துக்கு उदाहरणपरம். प्रणवம் मन्त्रान्तरத்தில் प्रवेशिத்து நின்று स्वतन्त्र-மாயும் நிற்குமாப்போலே இப் प्रपत्ति अधिकारिविशेषத்திலே भक्त्यङ्गமுமாய் अधिकार्यन्तरத்திலே स्वतन्त्रமுமாயிருக்கை वचनबलத்தாலே सिद्धம்.**

---

**படியே** – இது முதலான परमैकान्तिवचनங்களில் சொன்னபடியே, **नित्यनैमित्तिकங்களிति।** प्रतर्दनविद्यान्यायத்தாலே तत्तदन्तर्यामिपर्यन्तமாக முடியும் अनन्यथासिद्धजीवादिलिङ्गसहितवाक्यप्रति-पाद्यங்களான नित्यनैमिककर्मங்களிலென்றபடி. **विशेषणமாய்ப் புகுமளவேயொழிய** – तत्तदन्तर्यामिயை आराधिக்கும்போது अन्तर्यामिக்கு विशेषणமாய் அதாவது शरीरமாய்ப் புகுகிறமாத்திரமேயொழிய, **மற்றும் सर्वावस्थैயிலும்** – नित्यनैमित्तिकங்களுக்குப்புறம்-பான अवस्थैயிலும், **देवतान्तरस्पर्शமற்றிருக்கை** – विशेषणமாகவும் देवतान्तरसंबन्धமற்றி ருக்கை, **उचितம்** – परमैकान्तिக்கு अर्हமானது. இப்படி प्रपत्ति सकलफलसाधनமாக सिद्धिக்கை யாலே प्रपत्तिக்கு भक्तिरूपोपायविरोधिपापनिवर्तकत्वेन भक्तिनिष्पादकत्वமும் स्वतन्त्रप्रपत्ति निष्ठन् விஷயத்தில் प्राप्तिविरोधिपापनिवर्तकत्वेन मोक्षजनकत्वமும் சொல்லிற்றாயிற்றென்கிறார் **मोक्षத்துக்கு** इत्यादिना। இதில் श्रीगीताभाष्यத்தில் प्रपत्तिக்கு उपायविरोधिनिवर्तकत्वம், गद्यத்தில் प्राप्तिविरोधिपापनिवर्तकत्वமும் भाष्यकारராலேயே சொல்லப்பட்டபடியால் सर्वफलसाधनமான இப் प्रपत्तिயின் प्रभावம் வெளியிடப்பட்டதென்கிறார் **இதில் प्रपत्तीत्यादिना**। ननु प्रपत्ति-யொன்றுக்கே अङ्गत्वமும் तद्विरुद्धமான स्वतन्त्रत्वமும் சொல்லக்கூடுமோ என்கிற ஶங்கையில் प्रणवदृष्टान्तத்தைக் காட்டி परिहरिக்கிறார் **प्रणवமித்யாदिना**। **मन्त्रान्तरத்தில் प्रवेशिத்து நின்று** इति। व्यापकमन्त्रங்களில் व्यापकनामशेषतया अन्वयिத்து अप्रधानமாய் நின்று என்றபடி. **स्वतन्त्रமாய் நிற்குமாப்போலே** इति। न्यास विद्यैயில் ''ओमित्यात्मानं युञ्जीत'' என்று प्रपत्तिकरणमन्त्रतया स्वतन्त्रமாயும் நிற்குமாப்போலே என்றபடி. **अधिकारिविशेषத்திலே** – सकिञ्चनனான अधिकारि विशेषத்திலே, **अधिकार्यन्तरத்திலே** – अकिञ्चनனான अधि-

**இப்படி नियताधिकारமாக भक्तिप्रपत्तिகள் विकल्पित्து நிற்கிற நிலை [93]"भक्त्या परमया वापि प्रपत्त्या वा महामत" इत्यादिகளிலே प्रसिद्धம். ஆகையால் [94]"सम्यक् ज्ञानेन वा मोक्षं गङ्गायां मरणेन वा। प्रणामाद्वापि सुकृताद्भक्त्या वा लभते नर" इत्यादिகளிலே साक्षादुपायத்தோடே கூட परंपरोपायங்களை யெடுத்ததுவும் அவற்றினுடைய प्राशस्त्यातिशयந் தோற்றுகைக்காக வத்தனை.**

---

காரிविशेषத்திலே, **वचनबलத்தாலே सिद्धமிति** । श्रीगीதையில் कर्मयोगज्ञानयोगभक्तियोगादि-களைச்சொல்லி "सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज" என்று तदङ्गतया प्रपत्तिயை विधिக்கை யால் अङ्गत्वமும், "शरणं त्वां प्रपन्ना ये ध्यानयोगविवर्जिताः । तेऽपि मृत्युमतिक्रम्य यान्ति तद्वैष्णवं पदम्" என்று ध्यानयोग शून्यர்களுக்கும் प्रपत्तिயை मोक्षसाधनतया சொல்லுகையால் स्वतन्त्रत्वமும் वचनसिद्धமென்று கருத்து. अधिकारिभेदத்தாலே अङ्गत्वस्वातन्त्र्यங்களைச் சொல்லுகை யாலும் அவை विरुद्धங்களன்று; एकाधिकारिவிஷயத்தில் प्रपत्तिக்கு अङ्गत्वस्वातन्त्र्यங்களைச் சொன்னாலன்றோ विरोधம் என்று திருவுள்ளம். இப்படி प्रपत्ति भक्तिபோலே स्वातन्त्र्येण फलसाधनமென்பது भक्तिயோடு व्यवस्थितविकल्पமாகச் சொல்லுகிற "भक्त्या परमया वापि" என்கிற वचनத்திலும் सिद्धமென்கிறார் **இப்படி नियताधिकारமாக** इति । இப்படி "भक्त्या परमया वापि प्रपत्त्या वा" என்கிற वचनத்தில் प्रपत्तिக்கு भक्तिயோடு भगवत्प्राप्तिसाधनत्वத்தில் விகல்பம் சொல்லியிருப்பதால் अधिकारिव्यवस्थैயால் भक्तितुल्योपायत्वம் கொண்டால் "सम्यक् ज्ञानेन वा मोक्षो गङ्गायां मरणेन वा । प्रणामाद्वापि सुकृताद्भक्त्या वा लभते नरः" என்கிற वचनங் களில் भक्तिயோடு विकल्पेन मोक्षसाधनங்களாகச்சொல்லப்பட்ட सम्यक्ज्ञानादिகளுக்கும் भक्तितुल्योपायत्वம் स्वीकरिக்கும்படி நேராதோவென்ன வருளிச்செய்கிறார் **ஆகையாலி**ति । **ஆகையால்** – भक्तिप्रपत्तिகள் सकिञ्चनाकिञ्चनाधिकारिभेदेन नियतव्यवस्थितங்களாக प्रसिद्धமாகை யால். **प्राशस्त्यातिशयந்தோற்றுகைக்காக வத்தனையி**ति । भक्त्या परमया वापि என்கிற श्लोकத்தில் प्रधानமான भक्त्युपायத்தை முதலிலே யெடுத்து அதில் ப₃க்தியில்லாத வனுக்குப் प्रपत्ति என்று व्यवस्थै தோன்றும்படி சொல்லியிருப்பதாலும், नान्यथा प्राप्यः என்று भक्तिप्रपत्तीतरங்களாலே நான் प्राप्यனன்று என்று निषेधिத்திருப்பதாலும் प्रपत्तिக்கு अधिकारिव्यवस्थया भक्तितुल्योपायत्वம் सिद्धமானாலும், "सम्यक्ज्ञानेन वा" என்கிற वचनத்தில் तत्त्वज्ञानादिகளை उपायமாகச் சொல்லி अन्ततः भक्त्या वा என்று प्रधानोपायத்தைச் சொல்லு கையாலே கீழ்ச்சொன்னவைகளை भक्तिद्वारा साधनங்களென்று निर्वहिக்கலாமாகை யாலும் भक्तिயோடு இவைகளை விகல்பித்துச்சொன்னது नान्यथा प्राप्यः என்கிற वचनान्तरनिषेधத்தாலே அவைகளின் प्राशस्त्यपरமாகவே கொள்ளவேண்டுமென்று கருத்து.

---

93

94

★प्राप्यस्यैव प्रापकत्वं स्वप्राधान्यनिवारणम् ।
प्रपत्तेर्व्याजमात्रत्वमन्योपायैरनन्वयः ॥
तदङ्गैरप्यसंबन्धस्सर्वसाध्येष्वभिन्नता ।
इत्थमर्थाष्षडाचार्यैरेकशब्दस्य दर्शिताः ॥
केचित्त्विहैकशब्दार्थं शरण्यैक्यं प्रचक्षते ।
विशिनष्टि तथापि श्रीर्गुणविग्रहवत् प्रभुम् ॥
ईश्वरी सर्वभूतानामियं भगवतः प्रिया ।
संश्रितत्राणदीक्षायां सहधर्मचरी स्मृता ॥

இப்படி விஸ்தாரமாகவுபபாதித்த एकशब्दार्थषट्कத்தை शिष्यबुद्धिसौकर्यार्थம் காரிகைகளாலே संग्रहिக்கிறார் **प्राप्यस्यैवेति** । प्रपत्तेरिति उत्तरत्र सर्वत्रान्वयः, **व्याजमात्रत्वं** – सिद्धोपायतुल्योपायत्वाभावः । **अन्योपायैरनन्वयः** – भक्त्याद्युपायैस्सहकारितयाप्यपेक्षाभावः । **तदङ्गैरपि** – भक्त्यङ्गैरपि, **असंबन्धः** – संबन्धशून्यता, **सर्वसाध्येष्वभिन्नता** – सर्वसाध्यவிஷயங்களில் एकोपायत्वம். இங்கு சிலர் ''मामेकं शरणं व्रज'' என்று भगवानொருவனையுமே ஶரணமாகப் பற்று என்கையால் भगवानுக்கே सिद्धोपायत्वं; न तु लक्ष्म्याः என்று சொல்லுவர்கள், அவர்கள் பக்ஷத்தை अनुवदिக்கிறார் **केचित्त्विति** । அதை நிராகரிக்கிறார் **विशिनष्टि तथापीति** । यद्यपि एकशब्दार्थத்திற்கு शरणशब्दार्थம் विशेषणமாகத் தோன்றுகிறது. तथापि एकशब्दार्थविशेष्यமான अस्मच्छब्दार्थம் लक्ष्मीगुणविग्रहविशिष्टமாகையாலே गुणविग्रहங்கள்போலே லக்ஷ்மியும் विशेषणமாகத் தோன்றுகையால் विशिष्टोपायत्वसिद्धिக்கு बाधकமில்லையென்று திருவுள்ளம். இப்படி सर्वदा अपृथक्सिद्धविशेषणமாக நிற்கையாலும் सङ्कल्पार्हचेतनैயாகையாலும் विशिष्टस्योपायत्वे विशेषणस्याप्युपायत्वம் सिद्धिக்குமென்று கருத்து. இப்படி विशेषणतया उपायत्वसिद्धिमात्रமன்றிக்கே प्रमाणबलத்தாலும் லக்ஷ்மிக்கு उपायत्वமுண்டென்கிறார் **ईश्वरीति** । गुणविग्रहादिகளைப்போலே विशेषणமாக நிற்கிறமாத்திரமளவன்றிக்கே अशेषलोकத்திற்கும் भगवानைப்போலே नियन्त्रिயாயிருக்கையாலும் ''तदिङ्गितपराधीनो विधत्ते'' என்னும்படி भगवानுக்கு प्रियतमैயாய் நிற்கையாலும் संश्रितர்களுடைய रक्षणविषयத்தில் அவன் मोक्षयिष्यामि என்று ஸங்கல்பித்தால் அவனோடு கூட இவளும் सहधर्मचारिणिயாய் ''उपायो भवानि'' என்று ஸங்கல்பிக்கிறாளென்றும் ''लक्ष्म्या सहहृषीकेशः'' इत्यादिप्रमाणங்களில் சொல்லுகையாலும் भगवानுக்குப்போலே பிராட்டிக்கும் उपायत्वம் सुस्थितமாமென்று கருத்து. இங்கு सर्वभूतानामीश्वरी, भगवतः प्रिया, என்கிற विशेषणद्वयம் हेतुगर्भம். अनुरूपமாயிருக்கையாலும் अभिमतैயாயிருக்கையாலும் सहधर्मचारिणिயாக स्मरिக்கப்பட்டாளென்று கருத்து. मामेकं शरणमिति भगवानொருவனுக்கே उपायत्वம் தோன்றாநிற்க எப்படி

**एकं जगदुपादानमित्युक्तेऽपि प्रमाणतः ।**
**यथापेक्षितवैशिष्ट्यं तथात्रापि भविष्यति ॥**
**एकोपास्तिविधानेऽपि गुणादीनां यथान्वयः ।**
**तथैकशरणव्रज्याविधानेऽप्यनुमन्यताम् ॥**
**यथा गुणादिवैशिष्टे सिद्धोपायैक्यमक्षतम् ।**
**एवं पत्नीविशिष्टत्वेऽप्यभीष्टं शास्त्रचक्षुषाम् ॥**
**प्रभाप्रभावतोर्यद्वदेकोक्तावितरान्वयः ।**
**एवमन्यतरोक्तौ स्यात्सहवृत्त्यभिधानतः ॥**

---

அவனுக்கு श्रीविशिष्टत्वம் சொல்வது என்ன? विशेषणமபேக்ஷிதமானால் तद्विशिष्टत्वம் अवश्यம் தோன்றும் என்பதை दृष्टान्तप्रदर्शनத்தாலே समर्थिக்கிறார் **एकं जगदुपादानमिति** । ''एकमेवाद्वितीय'' மென்கிற श्रुतिயில் ஒன்றுக்கே जगदुपादानत्वம் சொல்லியிருந்தாலும் எப்படி अपेक्षितமான सूक्ष्मचेतनाचेतनवैशिष्ट्यம் தோன்றுகிறதோ, அப்படியே मामेकं शरण-மென்கிறவிடத்திலும் உபாயமாகச் சொல்லப்பட்ட भगवाனுக்கு கீழ் श्लोकத்திற் சொன்னபடி अपेक्षणीயையான ஸ்ரீயினுடைய वैशिष्ट्यமும் தோன்றுமென்று கருத்து. दृष्टान्तान्तरமருளிச்செய்கிறார் **एकोपास्तीति** । ''तमेवैकं जानथात्मानं'', ''तमेव विदित्वातिमृत्युमेती'' त्यादिகளான भगवदेकोपासनविधानस्थलத்திலும் எப்படி सगुणब्रह्मवादिகளான நமக்கு गुणवैशिष्ट्यம் தோன்றுகிறதென்று கொள்ளவேண்டுமோ அப்படியே भगवाனொருவனுக்கே शरणव्रज्यै विधिக்கிற स्थलத்திலும் लक्ष्मीवैशिष्ट्यத்தை अकामனுமனுமதிக்கவேண்டுமென்கை. இப்படி உபாயமான भगवाனுக்கே पत्नीवैशिष्ट्यத்தை யொப்புக்கொண்டால் भगवा-னுடைய उपायैक्यத்துக்கு भङ्गம் வாராதோவென்னில்; गुणादिविशिष्टत्वे यथा उपायैक्यத்துக்கு भङ्गமில்லையோ அப்படியே पत्नीविशिष्टत्वेऽपि विशेष्यமான भगवाனொருவனே உபாய மாகையாலே उपायैक्यத்துக்கு क्षतिயில்லையென்கிறார் **यथा गुणादीति** । **शास्त्रचक्षुषामिति** । विशेषणवैशिष्ट्यம் विशेष्यैक्यத்துக்கு बाधकமாகாது என்பதை शास्त्रज्ञர்களெல்லோரும் அறிவார்கள் என்று கருத்து. இங்கு मामेकं शरणं என்கிறவிடத்தில் भगवाனொரு வனையே உபாயமாகச் சொல்லியிருக்க பிராட்டிக்கு இங்கு சொல்லப்படாத शरण्यान्तर्भावம் கூடுவது எங்ஙனேயென்ன प्रभाप्रभावத்துக்களுக்கு सहवृत्तित्वமிருப்பதால் அதில் ஒன்றைச் சொன்னால் इतरத்துக்கும் எப்படி அந்வயம் வருமோ, அப்படியே பெருமாளுக்கும் பிராட்டிக்கும் सहवृत्तित्वத்தை प्रमाणங்கள் சொல்லுகையால் அந்த दृष्टान्तத்தாலே भगवाனொருவனையுமே शरणமாகச் சொல்லியிருக்குமிடத்திலும் பிராட்டிக்கும் शरण्यान्तर्भावம் கூடுமென்கிறார் **प्रभाप्रभावतोरिति** । ग्लपयत्यातपः, आह्लादयति

**स्मरन्ति चैनां मुनयस्संसारार्णवतारिणीम् ।**
**ऊचतुस्स्वयमप्येतस्सात्वतादिषु तावुभौ ॥**
**उपायोपेयदशयोर्द्वयेऽपि श्रीस्समन्विता ।**
**इष्टा च शेषिणी द्वंद्वे शेषवृत्तिर्यथोचिता ॥**
**अतोऽनन्यपरानेकश्रुतिस्मृत्यनुसारतः ।**
**पत्नीविशिष्ट एवैकः प्रपत्तव्य इहोदितः ॥ ★**

ज्योत्स्ना என்று प्रभैகளின் कार्यம் சொன்னால் அதில் प्रभावाனுக்கும் அந்வயம் எப்படி தோன்றுகிறதோ, सूर्यः शोषयति, चन्द्रः शीतळयति என்று प्रभावान्களுடைய कार्यம் சொன்னால் அதில் आतपज्योत्स्नादिகளுக்கும் அந்வயம் எப்படித் தோன்றுகிறதோ அப்படியே இத் दंपतिகளின் अन्यतरத்தை शरणமென்று சொன்னால் इतरத்திற்கும் शरण्यान्तर्भावம் सिद्धिக்குமென்கை. அதற்குக் காரணம் सहवृत्त्यभिधानம்.

இனி பிராட்டிக்கு उपायत्वத்தை काश्यपादि ऋषिகளும் சொன்னார்கள்; இத் दिव्य-दंपतिகளும் சொன்னார்களென்கிறார் **स्मरन्तीत्यादिना** । **मुनयः** – काश्यपादिகள். **संसारार्ण-वतारिणीं** – प्रकृतिसंबन्धरूपसंसारसमुद्रத்தைத் தாண்டிவைப்பவளாக, **स्मरन्तीति** । ''सर्वकामप्रदां रम्यां संसारार्णवतारिणीम् । क्षिप्रप्रसादिनीं देवीं शरण्यामनुचिन्तयेत् ॥ यामालंब्य सुखेनेमं दुस्तरं हि गुणोदधिम् । निस्तरन्त्यचिरेण'' என்று ஸ்மரித்தார்கள் என்றபடி. ऋषिகள் ஸ்மரித்தது மாத்திர மன்றிக்கே இத் दिव्यदंपतिகளும் सात्वतादिகளிலே இந்த उपायत्वத்தை स्वयमूचतुः । ''लक्ष्मीं माञ्च सुरेशेशं द्वयेन शरणं गतः । मल्लोकमचिराल्लब्ध्वा मत्सायुज्यं स गच्छति ॥ मामेकां देवदेवस्य महिषीं शरणं व्रजेत्'' इति । मामेकाமென்பது पत्न्यन्तरव्यावृत्तिपरம். किं बहुना प्रमाणोपन्यासेन द्वयाख्यकरणमन्त्रத்தி லேயே उपायोपेयदशैகளில் श्रीवैशिष्ट्यம் தோன்றுகிறதென்கிறார் **उपायोपेयेति** । द्वयाख्यमन्त्रத் திலும் उपायत्व – उपेयत्वप्रतिपादकங்களான पूर्वोत्तरखण्डங்களில் பிராட்டியானவள் विशेषण-மாகச் சொல்லப்பட்டிருக்கிறாள், அதில் शेषिகளான தம்பதிகள்விஷயத்தில் **शेष-वृत्तिः यथोचिता इष्टा** – கைங்கர்யமானது यथोचितமாக இஷ்டமாயிருக்கிறது. ஆகையால் उपायदशैயிலும் श्रीवैशिष्ट्यத்தை அகாமனும் ஒப்புக்கொள்ளவேண்டும் என்று கருத்து. उक्तार्थத்தை निगमिத்துக் காட்டுகிறார் अत इति । பிராட்டிக்கே उपायत्वம் சொல்லுகிற अनन्यपरानेकशक्तियாவது ''चन्द्रां प्रभासां यशसा ज्वलन्तीं श्रियं लोके देवजुष्टामुदाराम् । तां पद्मनीमीं शरणमहं प्रपद्ये'', ''कामवत्सामृतं दुहाना'', ''सा नो लोकममृतं दधातु'', ''श्रियं वसाना अमृतत्वमायन्'' इत्यादिः । स्मृतिகளாவது – ''संसारार्णवतारिणी'' ''विमुक्तिफलदायिनी'' त्यादिகள். அவைகளின் அநு ஸாரத்தாலே, इह – ''मामेकं शरणं व्रजे'' त्यादि प्रपत्तिविधायकशास्त्रத்தில் भगवाனொருவனை யுமே प्रपत्तव्यனாகச் சொல்லியிருந்தாலும் லக்ஷ்மீ विशिष्टனான ஒருவனே प्रपत्तव्य-னாகச் சொல்லப்பட்டானென்கை.

**இங்குற்றை शरणशब्दத்துக்கும் द्वयाधिकारத்திற் சொன்ன பொருளையனு-
सन्धिத்துக்கொள்வது. இந்த शरणवरणம் अर्जुनனைக்குறித் துपदेशिக்கப்
பட்டதே யாகிலும் [95]''अनालोचितविशेषाशेषलोकशरण्य'' என்கிறபடியே सर्व-
विषयமென்னுமிடம் श्वेताश्वतरश्रुतिप्रसिद्धம். [96]''कृष्णं धर्मं सनातनं'', [97]''शरण्यं
शरणं च त्वां'', [98]''योगो योगविदां नेता'', [99]''अमृतं साधनं साध्य'' मित्यादिகளிலும்
सङ्कोचமில்லாமையாலே सर्वविषयत्वம் विवक्षितம். இப்படியிவன் शरणமாக
वरणीयனாம்போதைக்குத்தானनन्यशरणனாகையே வேண்டுவது. ''व्रज''
என்கிற शब्दமும் ''प्रपद्ये'' என்கிறவிடத்திலறுதியிட்ட सपरिकरात्मनिक्षेपத்
தையே சொல்லுகிறது. அவ்விடமनुष्ठाताவினுடைய अनुसन्धानமானபடி
யாலே उत्तमனாயிற்று. இவ்விடம் [100]''शिष्यस्तेऽहं शाधि मां'' என்றभिमुखனாக**

---

இனி शरणशब्दத்திற்கு व्याख्यानம் செய்யக்கருதி लाघवात् द्वयाधिकारத்திற்சொன்ன
शरणशब्दार्थத்தை இங்கு अनुसन्धिத்துக்கொள்ளவேண்டுமென்கிறார் **இங்குற்றை
शरणशब्दத்துக்கு**मिति । இங்கு ''मामेकं शरणं व्रज'' என்று अर्जुनனைக்குறித்தே शरणवरणம்
विहितமாய்த் தோன்றுகையால் இது अकिञ्चनाधिकारिसामान्यविஷயமாக ஆகுமோ?
नह्येकं प्रति शिष्यते என்றன்றோ शास्त्रம் என்ன, ''मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये'', ''सर्वस्य शरणं सुहृत्'',
என்கிற श्वेताश्वतरश्रुत्याद्यानुगुण्यத்தால் सर्वविஷயமென்கிறார் **இந்த शरणवरण**मित्यादि-
யால். ''कृष्णं धर्मं सनातनम्'' इत्यादिகளிலும் இன்னாருக்கு अलौकिकश्रेयस्साधनம், இன்னாருக்கு
உபாயம் என்று ஸங்கோசித்துச்சொல்லாமையாலே उपायत्वம் सर्वविஷயமாகலா
மென்கிறார் **कृष्णं धर्मं सनातन**मित्यादिना । இப்படி இது सर्वविஷயமாகில் अन्यशरणனான
भक्तियोगनिष्ठனும் இதற்கு விஷயமாகலாமோவென்ன வருளிச்செய்கிறார் **இப்படி
யிவனி**त्यादि । व्रजधातु गत्यर्थकமானாலும் गत्यर्थानां बुद्ध्यर्थत्व முண்டாகையாலே व्रज என்கிற
शब्दம் द्वयத்தில் प्रपद्ये என்கிற शब्दம்போலே सपरिकरात्मनिक्षेप रूपबुद्धिविशेषத்தையே சொல்லு
கிறதென்கிறார் **व्रज என்கிற शब्दமு**मिति । द्वयத்தில் अनुष्ठातृविஷயமாகையாலே
उत्तमன்; இவ்விடத்தில் अभिमुखचेतनविषयமாகையாலே मध्यमன்; अर्थத்தில் भेदமில்லை
யென்கிறார் **அவ்விட**मित्यादिवाक्यद्वयத்தாலே. परित्यज्याவில் சொல்லப்பட்ட कार्पण्यத்
தைக்காட்டிலும் வேறுபட்ட आनुकूल्यसङ्कल्पाद्यङ्गங்களும் இங்கே उचितपदங்களில்

---

95 ஶரணாகதிகத்யம்.
96 பாரதம் ஆரண்யபர்வம் 71-123.
97 ராமாயணம் யுத்தகாண்டம் 120-18.
98 ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமம்.
99 விஷ்ணுதர்மம் 72-4.
100 கீதை 2-7.

**நின்றவனைக் குறித்து विधिக்கிறதாகையாலே मध्यमனாயிற்று. இவ்வானு-கூல்யसङ्कल्पाद्यङ्गान्तरங்களுமிங்கே सूचितமானபடியை द्वयத்திற்போலே उचित-पदங்களிலே கண்டுகொள்வது. [101]“सकृत्कृतश्शास्त्रार्थः” என்கிற निर्णयத்துக்கு उपासनத்திற்போலே இங்காवृत्तिவேண்டும்படி अपवादமில்லை. இவ்வर्थம் [102]“सकृदेव प्रपन्नाये” त्यादि वचनத்தாலும் सुप्रतिष्ठितம். இப்படி महोदारனான सर्वशक्तिபக்கலிலே भरन्यासம் பண்ணுமவனுக்கு स्वाभिप्रायविशेषமொழிய फलविलंबத்துக்கு हेतुவில்லை. ஆகையாலே இந் न्यासविद्यैக்கு प्रारब्ध निवर्त-कत्वம் विशेषமாகிறது.**

अनुसन्धेयங்களென்கிறார் **இவ்வானுகூல்யसङ्कल्पाद्यङ्गान्तरங்களுமிங்கே** इति । **उचितपदங்களிலே** इति । प्रथमपादத்தில் उपायान्तराशादिपरित्यागத்தைச் சொல்லுகையாலே प्रातिकूल्य-वर्जनமும், அவ்விடத்திலேயே अर्थादानुकूल्यसङ्कल्पமும், बुद्ध्यर्थकமான व्रजशब्दத்தில் महाविश्वासமும், शरणशब्दोपश्लिष्टமான व्रजशब्दத்திலேயே गोप्तृत्ववरणமும் अनुसन्धेयமென்று கருத்து. प्रथमपादस्याधिकारिपरत्वे मा शुचः என்கிறவிடத்தில் आकिञ्चन्यानुसन्धानरूपकार्पण्यம் अनुसन्धेयம். भक्तिस्थानத்தில் विधिக்கப்படுகையாலே இந்த प्रपत्ति அதுபோலே असकृदा-वृत्तமாகவேண்டுமோ வென்ன வருளிச்செய்கிறார் **सकृत्कृतश्शास्त्रार्थः என்கிற निर्णयத்துக்கு** इति । இது भक्तिபோலே मोक्षजनकतया भक्तिस्थानापन्नமானாலும் भक्तिபோலே இதற்கு सकृत्कृतश्शास्त्रार्थः என்கிற अंशத்தில் अपवादமில்லையாகையால் आवृत्तिप्रसङ्गம் வாராதென்று கருத்து. अपवादமில்லாததோடு प्रपत्तिக்கு सकृत्कर्तव्यत्वे अनुग्राहकप्रमाणமு முண்டென்கிறார் **இவ்வर्थமி**ति । இப்படி प्रपत्ति सकृत्कृतமாய்க்கொண்டே मोक्षजनक-மென்னில் प्रपत्त्युत्तरक्षणத்திலேயே மோக்ஷம் வர प्रसङ्गियாதோ என்ன வருளிச்செய் கிறார் **இப்படி महोदारனான** इति । **स्वाभिप्रायविशेषமொழிய** इति । शास्त्रार्थத்தை அநுஷ்டித்த பிறகும் फलविलंबத்திற்குக் காரணம் महोदारனான भगवानுடைய औदार्यத்தின் குறை யினாலன்று. सर्वशक्तனான அவனுடைய शक्तिயின் குறைவினாலன்று; किन्तु प्रपत्ति பண்ணுமவனுடைய फलकालத்தைக் குறிக்கிற अभिप्रायविशेषமே என்று தாத்பர்யம். स्वाभिप्रायविशेषமேயொழிய फलविलंबத்துக்கு வேறு ஹேதுவில்லையென்றதால் स्वाभि-प्रेतकालத்தில் फलजनकत्वம் सिद्धिக்கையாலே அது प्रारब्धनिवर्तकत्वं विना अनुपपन्नமாகையால் இந்த प्रपत्तिविद्यैக்கு प्रारब्धनिवर्तकत्वம் भक्त्यपेक्षया विशेषமாக फलिக்கிறதென்கிறார் **ஆகையாலே** इति । **ஆகையாலே** – स्वाभिप्रायव्यतिरिक्तமான विलंबहेतु இல்லாமையாலே.

101

102 ராமாயணம் யுத்தகாண்டம் 18-33.

**இவ்விடத்திலே சிலர் स्वतन्त्रனைக் குறித்தன்றோ வொன்றை விதிப் பது; अत्यन्तपरतन्त्रனாக अध्यात्मशास्त्रங்களிலும் மூலமன்த்ராதிகளிலும் शिक्षितனான அதிகாரியைக் குறித்து "व्रज" என்றொரு कर्तव्यத்தை விதிக்கும்படி யென் னென்று சொல்லுவர்கள். இது பாரதந்த்ர்யகாஷ்டையைப் பராமர்ஶியாமற்சொன்ன படி. எங்ஙனேயென்னில்; [103]"कर्ता शास्त्रार्थवत्वात्", [104]"परात्तु तच्छ्रुतेः" என்று வேதாந்தத்திலறுதியிட்டபடியே இவனுக்கு भगवदधीनकर्तृत्वமுண்டாகையாலே இவனைப்பற்ற விதிக்கக் குறையில்லை. அசித்துக்கள் शब्दादिகளை ईश्वरனுண்டாக்கச் சுமக்கிறாப்போலே இவ்வளவு स्वातन्त्र्यத்தை யெடுத்துச் சுமக்கையுமிவனுக்கு भगवत्पारतन्त्र्यकाष्ठैயிருந்தபடி. இவனுக்கொருவழி யாலும் कर्तृत्वமில்லையென்னில்; प्रकृत्यविद्यादिகளுக்கு कर्तृत्वஞ்சொல்லு**

शरणं व्रज என்று ஜீவனைக்குறித்து शरणवरणத்தை விதிக்கக் கூடுமோ? வேதாந்தத்தில் "य आत्मनि तिष्ठन् य आत्मानमन्तरो यमयति" என்றும், மூலமன்த்ரத்தில் नमः என்றும் अत्यन्तपरतन्त्र-னாக பரிக்ஷிக்கப்பட்ட ஜீவனுக்கு शरणवरणம் कर्तव्यतया विधेयமாக ஆகாதே என்கிற பக்ஷத்தை அனுவதிக்கிறார் **இவ்விடத்திலே சில**ரித்யாதினா। இதை நிரஸிக்கிறார் **இது பாரதந்த்ர்யகாஷ்டையைப் பராமர்ஶியாமற் சொன்னபடி** இதி। பராமர்ஶியாமையை ஸ்பஷ்டீகரிக்கிறார் **எங்ஙனேயென்னி**லிதி। ஸாங்க்யாதிகள் சொல்லுகிறபடி ஜீவனை अत्यन्तोदासीनனாக்கி அவனுக்கு कर्तृत्वமே இல்லையென்று சொல்லாமல், जीवः कर्ता, विधिनिषेधशास्त्रयोः प्रयोजन-वत्वात्, என்று அவனுக்கு कर्तृत्वத்தை ஸ்தாபித்து "परात्तु तच्छ्रुतेः" என்று அதற்கு पराधी-नत्वத்தைச் சொல்லியிருப்பதாலே அவனைக்குறித்து ஒரு कार्यத்தைப் பண்ணும்படி விதிக்கையிலும், அந்த कर्तृत्वம் पराधीनமாகையாலே அவன் விதித்தபடி அந்த कार्यத்தைப் பண்ணுகையிலும் ஒரு விதி बाधकமில்லை. ஆகையால் விதிகூடா தென்பது सम्यक्परामर्शमूलமன்று என்று கருத்து. இப்படி कर्तृत्वத்தை இவனுக்கு ஒப்புக்கொண்டு அவனும் அதைச் சுமந்தால் இவனுடைய पारतन्त्र्यத்தோடே அது விரோதியாதோவென்னில்; அவன் கொடுத்த कर्तृत्वத்தை சுமக்கையே पारतन्त्र्यத்துக்கு अत्यन्तानुगुणம். அதைச் சுமக்காமையே पारतन्त्र्यविरोधि என்று सदृष्टान्तமாக उपपादिக் கிறார் **அசித்துக்களி**தி। **சுமக்கிறாப்போலே** இதி। ஆகாஶாதிகள் शब्दादिगुणங்களைச் சுமக்கிறாப்போலே என்றபடி. இவனுக்கு कर्तृत्वத்தையொப்புக்கொண்டு அது पराधीनமென்பதைக் காட்டிலும் कर्तृत्वமே இல்லையென்று சொல்வது युक्तமாகாதோ

[103] ப்ரஹ்மஸூத்ரம் 2-3-33.
[104] ப்ரஹ்மஸூத்ரம் 2-3-40.

**கிற सिद्धान्ततुल्यமாம். कर्तृत्वம் स्वाधीनமென்னில்; सर्वात्मनियन्ता வொருவ னென்கிற अर्थங்கிடையாமையாலே निरीश्वरसिद्धान्तப்படியாம். ईश्वराधीन-மாக வரும் कर्तृत्वந்தானும் ज्ञातृत्वमात्रமென்னில்; पुरुषार्थसंपादनरुचियும் तदुपाय प्रवृत्तिயும் தவிரப் प्रसङ्गिக்கும். ज्ञानமும் அதினவस्थाविशेषமான इच्छैயுமே யுள்ளது. வேறொரு व्यापारமில்லையென்னிலும்; दृष्टादृष्टार्थங்களான வொரு-पायங்களையும் स्वयंप्रयोजनமான कैङ्कर्यங்களையுமனுஷ்டிக்க விரகில்லை. ஆகை யால் ज्ञानचिकीर्षाप्रयत्नங்கள் மூன்றும் आत्माவுக்கு உண்டு. இதில் चिकीर्षा-प्रयत्नங்கள் ज्ञानத்தினுடைய अवस्थाविशेषங்களென்னுமிடத்தை वेदार्थसंग्रहத்**

வென்னில்; அது "योऽन्तरो यमयती" त्यादि श्रुतिविरुद्धமாகையாலே साङ्ख्यादिमततुल्यமா மென்கிறார் **இவனுக்கொரு வழியாலும் कर्तृत्वமில்லையென்னிலி**தி । **प्रकृत्य-विद्यादिகளுக்கு** इति । இங்கு आदिपदத்தாலே क्षणिकविज्ञानसन्ततिக்கு परिग्रहம். प्रकृतिக்கு कर्तृत्वம் சொல்லுகிறது सांख्यासिद्धान्तம்; अविद्यैக்கு कर्तृत्वம் சொல்லுகிறது मायावादिसिद्धान्तம்; विज्ञानसन्ततिக்கு कर्तृत्वம் சொல்லுகிறது बौद्धसिद्धान्तம்; ननु स्वाधीनकर्तृत्वाभ्युपगमத்தாலேயே கீழ்ச்சொன்ன मतत्रयங்கள் व्यावृत्तமாகாதோ? அதற்கு पराधीनत्वத்தையுமொப்புக் கொள்ளவேண்டுமோ வென்ன வருளிச்செய்கிறார் **कर्तृत्वம் स्वाधीनமென்னிலி**தி । **सर्वात्मनियन्ता வொருவனென்கிற अर्थங் கிடையாமையாலே** इति । अन्तर्यामि-ब्राह्मणத்தில் "य इमञ्च लोकं परञ्च लोकं सर्वाणि च भूतानि योऽन्तरो यमयति" என்று ஒருவனுக்கே सर्वात्मनियन्तृत्वம் சொல்லுகிற श्रुत्यर्थம் घटिயாதாகையாலே யென்கை. **निरीश्वरसिद्धान्तப் படியாம்** – निरीश्वरमीमांसकसिद्धान्ततुल्यமாம். प्रसङ्गात् கீழ்ச்சொன்ன पराधीनकर्तृत्वस्वरूपத்தை शोधिத்து निष्कर्षिக்கிறார் **ईश्वराधीनமாக வரும் कर्तृत्वந்தானுமி**தி । ज्ञानचिकिर्षाकृतिमत्वம் कर्तृत्वமென்று स्थापिக்கப்போகிறவராய் முதலில் ज्ञातृत्वमात्रமே कर्तृत्वமென்கிற पक्षத்தில் दोषமருளிச்செய்கிறார் **ज्ञातृत्वमात्रமென்னிலீ**த்யாதினா । इच्छैயில்லாமையாலே पुरुषार्थरुचि தவிர प्रसङ्गिக்கும்; प्रयत्नाभावात् तदुपायानुष्ठानம் தவிர प्रसङ्गिக்குமென்றபடி. ज्ञातृत्वமும் इच्छावत्वமும் சேர்ந்தே कर्तृत्वरूपமென்னில் दूषणமருளிச்செய்கிறார் **ज्ञानமும் அதின वस्था विशेषமான इच्छैயுமேயுள்ளது** इत्यादिना । कर्तृत्वம் प्रवृत्तिघटितமல்லாமையாலே ஒரு विधोपायानुष्ठानமும் फलமான कैङ्कर्यानुष्ठानமும் घटिயாதென்று கருத்து. இப்படி ज्ञानादि-களில் प्रत्येकத்தை कर्तृत्वरूपமென்றாலும் उभयம் कर्तृत्वरूपமென்றாலும் अनिष्टம் प्रसंगिக் கையால் उत्तरोत्तरावस्थाश्रयங்களான மூன்றையும் சேர்ந்தே कर्तृत्वமென்று கொள்ள வேண்டுமாகையாலே இவை மூன்றும் ஜீவனுக்குண்டென்கிறார் **ஆகையாலீ**தி । இப்படி ज्ञानचिकीर्षा प्रयत्नங்கள் மூன்றும் आत्माவுக்குண்டென்றால் ज्ञानातिरिक्तेच्छाप्रयत्नங்கள் இல்லை என்கிற भवदीयसिद्धान्तविरोधம் வாராதோ வென்ன வருளிச்செய்கிறார் **இதில்**

**திலருளிச்செய்த லாघवयुक्तियாலே கண்டுகொள்வது. क्रियाश्रयत्वरूपமான कर्तृत्वம் चेतनाचेतनसाधारणம்; प्रयत्नाश्रयत्वरूपமான कर्तृत्वம் चेतनैकान्तம். प्रयत्न-மாவது शरीरादिप्रेरणहेतुவான बुद्धिविशेषம். ज्ञानमात्रத்துக்காश्रयமானபோதும் भोगमात्रத்துக்காश्रयமானபோதும் क्रियाश्रयत्वमात्रமான सामान्य कर्तृत्वமே யுள்ளது. ஒன்றைத் தன் बुद्धिயாலே उत्पादिக்கும்போது प्रयत्नाश्रयत्वरूपமான कर्तृत्वம். இப்படிப்பட்ட कर्तृत्वம் कैङ्कर्यमात्रத்திலே யென்கையுமுचितமன்று. அங்கும் भगवत्प्रीतिயென்றொரு प्रयोजनத்தை उद्देशिத்துपायानुष्ठानம் பண்ணினானாயிறே**

**चिकीर्षाप्रयत्नங்களிதி** । **लाघवयुक्तिயாலே** इति । चिकीर्षाप्रयत्नங்களை पृथग्गुणங்களாக ஒப்புக் கொள்ளுகிற नैयायिकमतத்திலேயே गौरवம். அவைகளை अवस्था विशेषापन्नज्ञानமாகவே ஒப்புக்கொண்டால் लाघवமென்று திருவுள்ளம். இப்படி ज्ञानचिकीर्षाप्रयत्नाश्रयत्वம் कर्तृत्वமென்றால் ज्ञानादिशून्यங்களான रथादिகளுக்கு कर्तृत्वம் சொல்லுகிற ''रथो गच्छती'' त्यादिव्यवहारविरोधம் வாராதோ என்னவருளிச்செய்கிறார் **क्रियाश्रयत्वरूपமான कर्तृत्व-मित्यादिना** । तथाच कर्तृत्वம் द्विविधம் क्रियाश्रयत्वமென்றும் प्रयत्नाश्रयत्वமென்றும். அதில் क्रियाश्रयत्वरूपकर्तृत्वம் चेतनाचेतनासाधारणமாகையால் रथो गच्छतीत्याद्यचेतनकर्तृत्वव्यवहारத்திற்கு ஒருவித बाधकமில்லை. प्रयत्नाश्रयत्वरूपकर्तृत्वம் चेतनैकान्तமாமென்று திருவுள்ளம். இப்படி प्रयत्नமும் ज्ञानरूपமென்றால் அது कीदृशज्ञानरूपம் என்று निरूपिக்கமுடியுமோ வென்ன வருளிச்செய்கிறார் **प्रयत्नமாவது शरीरादीति** । तथाच शरीरेन्द्रियव्यापारजनकज्ञानत्वம் प्रयत्नत्वமென்றதாயிற்று. चेतनனுக்கு सर्वत्र प्रयत्नाश्रयत्वமே संभविया நிற்க क्रियाश्रयत्वरूपकर्तृत्वத் திற்கு चेतनसाधारण्यம் கூடுவது எங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார் **ज्ञानमात्रத்துக்கு** इत्यादिना । जानाति, भुङ्क्ते என்கிற விடங்களில் आख्यातத்திற்கு आश्रयत्वமே अर्थம் கொள்ள வேண்டுமாகையால் तादृशस्थलங்களில் धात्वर्थज्ञानादिरूपक्रियाश्रयत्वமும் अर्थமாகக் கொள்ள வேண்டுமாகையால் क्रियाश्रयत्वरूपकर्तृत्वம் चेतनसाधारणமாகிறது. प्रयत्नाश्रयत्वरूपமான चेतनैकान्तकर्तृत्वம் சொல்லுமிடத்தைக் காட்டுகிறார் **ஒன்றைத் தன் बुद्धिயாலே उत्पादिக்கும்போது** इति । **தன் बुद्धिயாலே** – इच्छावस्थापन्न ज्ञानத்தாலே, இப்படிப்பட்ட इच्छापूर्वककर्तृत्वம் फलदशैயில் कैङ्कर्यविஷயத்தில் स्वरूपानुगुणமானாலும் उपायविஷயத்தில் அது स्वरूपविरुद्धமாகையால் அதை व्रज என்று विधिக்கக்கூடுமோ என்று சிலர் சொல்லும் ஶங்கையை பரிஹரிக்கிறார் **இப்படிப்பட்ட कर्तृत्वம் कैङ्कर्यमात्रத்திலே யென்கையுமுचितமன்று** इति । उचितமாகாமையை उपपादिக்கிறார் **அங்குமி**ति । कैङ्कर्यமும் भगवत्प्रीतिहेतुவாகையாலே उपायமாக முடிகையால் उपायकर्तृत्वம் स्वरूपविरुद्ध-மென்று சொல்லுபவர்களுக்கு அதுவும் घटिயாது என்று கருத்து. இப்படி कैङ्कर्य-कर्तृत्वம்போலே उपायकर्तृत्वமும் स्वरूपानुगुणமாகில் कर्तृत्वत्यागம் சொல்லுகிற शास्त्रத்தில்

**யிருப்பது. ஆனபின்பு கர்த்ருத்வத்தில் பந்தஹேதுவான ஆகாரமே த்யாஜ்யம். அதெ தென்னில்; ஈஶ்வரன் கொடுத்த ஜ்ஞானஶக்த்யாதிகளையும் கரணகளேபராதிகளையுங் கொண்டு அவன் ப்ரேரகனுமாய் தாரகனுமாய் ஶேஷியுமாய்க்கொண்டு ஸஹ-கரிக்கப் ப்ரவர்த்திக்கிற தன்னையிதுக்கு விபரீதமாக அநுஸந்தித்திருக்கையும் இவ்வநுஸந்தானத்தில் திருத்தமுண்டேயாகிலும் இதிலே ப்ரயோஜனாந்தரத்தை யிடுக்கி அநுஷ்டிக்கையும் பந்தகம். பக்திப்ரபத்திகள் தானும் ப்ரயோஜனாந்தரபரனுக்கு பந்தகமாயிறே யிருப்பது. ஆகையால் ஸ்வாபாவிககைங்கர்யார்த்தியாய் அநந்யப்ரயோஜன-னாயிருக்குமவனுக்கும் பலதஶையில் கர்த்ருத்வம் போலே உபாயதஶையில் கர்த்ருத்வமும் விருத்தமன்று. பலதஶையில் விவிதவிசித்ரகைங்கர்யகர்த்ருத்வம் கேவலமீஶ்வரேச்சாவைசித்ரியோடே பொருந்தின ஸ்வேச்சையாலேயாயிருக்கும். ஸம்ஸாரதஶையிலுள்ள கர்த்ருத்வமெல்லாம் கர்மாநுரூபமாக ஈஶ்வரன் பரிணமிப்பித்த ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களை உபாதியாகக்கொண்டு பஹுவிதமாயிருக்கும். இதில் ரஜஸ்ஸாலும் தமஸ்ஸாலும் ப்ரயோஜனாந்தரஸங்கஹேதுவான ஸத்த்வத்தாலும்வரும் கர்த்ருத்வம் பந்தகம். பகவத்ப்ராப்தியிலே ஸங்கத்தைப் புணர்க்கும் ப்ரக்ருஷ்டஸத்வவிஶேஷமடியாக வரும் கர்த்ருத்வம் மோக்ஷகாரணம். இக் குணத்ரயத்தோடு துவக்**

---

த்யாஜ்யமாகச் சொல்லியிருக்கிற கர்த்ருத்வம் எது என்ன வருளிச்செய்கிறார் **ஆன பின்பு கர்த்ருத்வத்தில் பந்தஹேதுவான ஆகாரமே த்யாஜ்ய**மிதி। அந்த ஆகாரத்தை விவிச்ய உபபாதிக்கிறார் **அதென்னில**ீத்யாதினா। இவ்வநுஸந்தானத்தில் **திருத்தமுண்டேயாகிலும்** – வைஶத்ய-முண்டேயாகிலும், **இடுக்கி** – கூட்டி, ப்ரயோஜனாந்தரத்தையுமுத்தேஶித்து என்றபடி. ஐஶ்வர்யகைவல்யாதி ப்ரயோஜனாந்தரபரர்களுக்கு பக்திப்ரபத்திகளும் பந்தகங்களாகவே ஸித்தங்களென் கிறார் **பக்திப்ரபத்திகள்தானு**மிதி। இப்படி ப்ரயோஜனாந்தரார்த்தமாக கர்த்ருத்வமே த்யாஜ்யமாகையால் அநந்யப்ரயோஜனனுக்கு கைங்கர்யகர்த்ருத்வம் போல் உபாயகர்த்ருத்வமும் ஸ்வரூபாநுகுணமே என்று முடிக்கிறார் **ஆகையால**ீதி। இனி பலதஶையிலுள்ள கர்த்ருத்வத்திற்கும், ஸம்ஸாரதஶையிலுள்ள கர்த்ருத்வத்திற்கும் வாசி யருளிச்செய்கிறார் **பலதஶையில் விவிதவிசித்ரகைங்கர்ய கர்த்ருத்வ**மிதி। **ஈஶ்வரேச்சாவைசித்ரியோடே பொருந்தின ஸ்வேச்சையாலே** இதி। அங்கும் கைங்கர்யகர்த்ருத்வம் ஸ்வாச்சந்த்யத்தாலே வருமாகிலும் அது ஈஶ்வராநுகுணமாகவே இருக்குமென்றபடி. **ஸம்ஸாரதஶையிலுள்ள கர்த்ருத்வமெல்லா**மிதி। கைங்கர்யகர்த்ருத்வமும் உபாயாநுஷ்டானகர்த்ருத்வமும் ஸாம்ஸாரிகவ்யாபாரகர்த்ருத்வமுமென்றபடி. **பஹுவிதமாயிருக்கு**மிதி। கர்மாநுகுணமாக வருகையாலும் ரஜஸ்தம உபாதிகங்களாகையாலும் இங்குள்ள கைங்கர்யகர்த்ருத்வ-மும் புருஷபேதேன விசித்ரமாயிருக்குமென்று கருத்து. இந்த ஸாம்ஸாரிககர்த்ருத்வங்களில் பந்தக-கர்த்ருத்வத்தை விவிச்ய ப்ரதர்ஶிப்பிக்கிறார் **இதில**ீத்யாதினா। மோக்ஷகாரணகர்த்ருத்வத்தை நிரூபிக்கிறார் **பகவத்ப்ராப்தியிலே** இத்யாதினா முக்ததஶையில் கர்த்ருத்வம் ரஜஸ்தம உபாதிகமல்லாமையால் விலக்ஷண

**கற்றிருக்கும் मुक्तदशैயில் कर्तृत्वம். இப்படி யிருக்கையால் आत्माவுக்கு कर्तृत्वமில்லையென்கிற वाक्यங்களுக்கும் कर्तृत्वமுண்டென்கிற वाक्यங்களுக்கும் विषयव्यवस्थैயுண்டாகையாலே विरोधமில்லை. அதெங்ஙனே யென்னில்; कर्तृत्वமில்லை யென்கிற वाक्यங்கள் ईश्वराधीनமாயும் तदायत्त-प्रकृतिगुणाधीनமாயும் வரும் कर्तृत्वத்தை निरपेक्षமென்று நினைக்கலாகாதென் கிறன. कर्तृत्वமுண்டென்கிற वाक्यங்கள் ईश्वरेच्छादिகளடியாகவே வந்த ज्ञानத்துக்கும் तद्विशेषங்களான चिकीर्षा प्रयत्नங்களுக்குமிவனே आश्रयமென்னு மிடத்தைச்சொல்லுகிறன. இந் निष्कर्षप्रकारத்தை ''शरीरवाङ्मनोभिर्यत्'' என்று துடங்கி गीताचार्यன்றானே அறுதியிட்டான். அவ்விடத்தில் ''दैवञ्चैवात्र पञ्चमं'' என்று पुरुषोत्तमனைச் சொல்லுகிறது. இவன் ஜீவனையொரு कार्यத்தில் प्रवर्तिப்பிக்கும்போது இக் कार्यத்தைப்பற்ற कारयिताவென்று சொல்லப் படும், தானே प्रवर्तिக்கும் फलप्रदानादिகளிலும் सृष्ट्यादिகளிலும் कर्ताவென்று சொல்லப்படும், ஒன்றிலே प्रवृत्तனான चेतनனை விலக்காதவளவில்**

---

மென்கிறார் **இக் गुणत्रयத்தோடு** इति । இப்படி ஜீவனுடைய कर्तृत्वத்தை बहुविधமாக निरूपिக்கையால் ''कर्ता भोक्ता विज्ञानात्मा पुरुषः'' என்று ஜீவனுக்கு कर्तृत्वம் சொல்லுகிற वाक्यங்களுக்கும், ''न कर्तृत्वन्न कर्माणि लोकस्य सृजति प्रभुः'' என்று ஜீவனுக்கு कर्तृत्वமில்லை யென்கிற वाक्यங்களுக்கும் विषयव्यवस्थैயாலே विरोधपरिहारம் सिद्धமாகுமென்கிறார் **இப்படியிருக்கையாலி**தி । विरोधமில்லாமையை उपपादिத்துக்காட்டுகிறார் **அதெங் ஙனேயென்னிலி**தி । कर्तृत्वம் இல்லையென்று சொல்லுகிற प्रमाणம் ஜீவனுக்கு कर्तृत्वसामान्यनिषेधपरமன்று; किन्तु இவனுடைய कर्तृत्वத்திற்கு प्रकृतिगुणाधीनत्वத்தையும் ईश्वराधीनत्वத்தையும் சொல்லுகிற प्रमाणानुरोधेन निरपेक्षकर्तृत्वनिषेधपरமென்றும் कर्तृत्वமுண் டென்று சொல்லும் प्रमाणம் ईश्वराधीनமாக வரும் ज्ञानचिकीर्षाप्रयत्नरूपங்களான कर्तृत्वம் ஜீவனை आश्रयिத்திருக்குமென்று சொல்லுகிறதென்றும் विषयव्यवस्थै கொண்டால் विरोधமில்லையென்று திருவுள்ளம். இந் निष्कर्षप्रकारம் கீதையில் சொல்லப்பட்ட தென்கிறார் **இந் निष्कर्षप्रकारத்தை** इति । அவ்விடத்தில் ''अधिष्ठानन्तथा कर्ता'' என்கிற श्लोकத்தில் ''दैवञ्चैवात्र पञ्चमं'' என்று ईश्वराधीनत्वமும் சொல்லப்பட்டதென்கிறார் **அவ்விடத்திலி**தி । ''न दैवं केशवात्परं'', ''दैवाधीनं जगत्सर्वं'', इत्यादौ दैवशब्दம் पुरुषोत्तमपरமாக प्रयुक्तமிறே. இனி प्रसङ्गात् ईश्वरனுடைய कारयितृत्वकर्तृत्वोपेक्षकत्वानुमन्तृत्वसहकारित्वங்களை विविच्य प्रदर्शिப்பிக்கப்போகிறவராய் कारयितृत्वத்திற்கு விஷயம் காட்டுகிறார் **இவன் ஜீவனை** इति । कर्तृत्वத்திற்கு விஷயம் காட்டுகிறார் **தானே प्रवर्तिக்கும்போது** इति ।

**உபேக்ஷகன்; அப்போதிசைந்திருக்கையாலே அனுமன்தா; இளந்தலை சுமக்குமவனுக்கு ப்ரபலன் பெருந்தலை சுமக்குமாப்போலே கூடப் ப்ரவர்த்திக்கையாலே ஸஹகாரி । ஸ்ருஷ்ட்யாதிகளில் தேவமனுஷ்யாதிவைஷம்யம் ஜீவகர்மவிசேஷோபாதிகமாகையாலே [105]"சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகச: । தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்த்யகர்த்தாரமவ்யயம்" என்று ஈச்வரனுக்கு கர்த்ருத்வநிஷேதம் பண்ணுகிறது. இப்படி ஸர்வவிஷயஸாதாரண கர்த்ருத்வமுடைய ஈச்வரனடியாக ஜீவனுக்கு ஸ்வபுத்திபூர்வப்ரவ்ருத்தி சக்திரூபமான நியோகயோக்யத்வம் ஸித்தமாகையாலே இங்கு "வ்ரஜ" என்று விதிக்கக்குறையில்லை. இப்படி பக்த்யாதிகள் போலே சரணாகதி தர்மமும் கர்தவ்யமாக விதிக்கப்படுகையால் "தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே, ஈச்வரனால் வரும் நன்மை முலைப்பால்போலே" என்று பிள்ளான் வார்த்தைக்கு பக்திப்ரபத்த்யாதிகளெல்லாம் அவனாலே வருகிறதென்று நினைக்கவேணுமென்று தன்னுடைய பராதீனகர்த்ருத்வத்திலே தாத்பர்யம்.**

உபேக்ஷகத்வத்திற்கு விஷயம் காட்டுகிறார் **ஒன்றிலே** இதி । அதை ப்ரதமப்ரவ்ருத்தியிலே கண்டுகொள்வது. அனுமன்த்ருத்வத்தைக் காட்டுகிறார் **அப்போது** இதி । **இசைந்திருக்கையாலே** – அந்த கார்யத்தையே செய்யும்படி ஒப்புக்கொண்டிருக்கையாலே, ஸஹகாரித்வத்தைக் காட்டுகிறார் **இளந்தலை சுமக்குமவனுக்கி**தி । அடி பெருத்து நுணியில் க்ருசமாயிருக்கிற ஒரு மரத்தில் இளதான நுணி பாகத்தைச் சுமக்கும் பாலனுக்கு பலிஷ்டனான ஒருவன் பெரியதான அடி பாகத்தைச் சுமந்து ஸஹகரிக்குமாப் போலே என்றபடி. இங்கு ஒரு கார்யவிஷயத்தில் ஜீவனைக்காட்டிலும் ஈச்வரனுக்கு ப்ரவ்ருத்தி அதிகமென்று தோற்றுகைக்காக இளந்தலை பெருந்தலை யென்றது. சில விடத்தில் ஈச்வரனுக்கும் கர்த்ருத்வமில்லையென்பதுபோல் சொல்லுகிற வசனங்களுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார் ஸ்ருஷ்ட்யாதிகளிலீத்யாதினா । ஈச்வரன் தேவாதிஸ்ருஷ்டிகளுக்கு கர்த்தாவாக இருந்தாலும் தேவாதிகளுடைய தேவத்வமனுஷ்யத்வாதிவைஷம்யங்களுக்கு அவரவர்களுடைய கர்மமே காரணமாகையாலே அதைப்பற்றி அகர்த்ருத்வம் சொல்லுகிறதென்று தாத்பர்யம். **குணகர்மவிபாகச** இதி । ஸத்வாதிகுணைச்சமாதிகர்மபிச்ச விபஜ்ய ஸ்ருஷ்டமென்றபடி. இனி ஜீவன் பரதன்த்ரனானாலும் ஸர்வவிஷயஸாதாரணகர்த்ருத்வமுடைய ஈச்வரனாலே அவனுக்கு ஸ்வபுத்திபூர்வகப்ரவ்ருத்திசக்தி கொடுக்கப்பட்டிருப்பதால் அவனைக்குறித்து வ்ரஜ என்று விதிக்கக் குறையில்லை என்று நிகமிக்கிறார் **இப்படி** இத்யாதியால். இப்படி ஜீவனுக்கு விதிவிஷயமாம்படியான கர்த்ருத்வமுண்டானாலும் அதை தன்னால் வரும் நன்மை விலைப்பால்போலே,

---

[105] கீதை 4-13.

★अन्यविश्वाससिद्ध्यर्थं भक्त्युपायविधिं वदन् ।
सर्वशास्त्रेष्वविश्वासमाधत्ते मुखभेदतः ॥
मद्योपहतपात्रस्थतीर्थदृष्टान्तवर्णनम् ।
अहङ्कारान्वये तु स्यात् प्रपत्तावपि भक्तिवत् ॥ ★

ईश्वरனால் வரும் நன்மை முலைப்பால்போலே என்று பிள்ளான் நிந்தித்திருப்ப தாலே व्रज என்று விதிக்கக்கூடுமோ வென்ன பிள்ளான் வார்த்தைக்கு भावமருளிச்செய் கிறார் **இப்படி** इत्यादियால். **அவனாலே வருகிறதென்று நினைக்கவேணு மென்று தன்னுடைய पराधीनकर्तृत्वத்திலே तात्पर्यமிதி** । தன்னுடைய भक्तिप्रपत्त्यादि-कर्तृत्वமும் அவனாலேயே வந்ததென்று நினைத்தால் தன்னுடைய कर्तृत्वமும் அதடியாக வரும் कार्यங்களும் ईश्वरனால் வரும் நன்மையாக முடியுமாகையாலே முலைப்பால் तुल्यமாமென்று திருவுள்ளமேயொழிய पराधीनकर्तृत्वத்திற்கு निन्दै சொன்னபடியன்று என்று तात्पर्यம்.

ननु भक्त्यादिகள்போலே शरणागतिधर्मமும் कर्तव्यतया விதிக்கப்படுகையால் என்று சொன்னது கூடுமோ? प्रपत्तिயில் विश्वासजननार्थம் शास्त्रத்தில் भक्ति விதிக்கப்படுகிறதே யொழிய भक्तिविधिயிலேயே शास्त्रத்திற்கு तात्पर्यமில்லையே என்று சிலர் சொல்லும் चोद्यத்தை ஒரு कारिकैயாலே अनुवदिத்து परिहरिக்கிறார் अन्येति । இங்கு अन्यशब्दம் प्रपत्तिपरம். वदन्निति । वादीति शेषः । प्रथमतो भक्तिं विधाय அதில் दुश्शकतैயைக் காண்பித்து सुलभமான प्रपत्तिயில் विश्वासத்தை யுண்டுபண்ணுவதற்காக भक्तिविधानமே யொழிய அதையே साक्षान्मोक्षोपायமாக விதிப்பதில் शास्त्रத்திற்கு तात्पर्यமில்லையென்று சொல்லும் वादिயானவன் सर्वशास्त्रங்களிலும் अत एव प्रपत्तिशास्त्रத்திலும் प्रकारभेदத்தாலே अविश्वासத்தை யுண்டுபண்ணுகிறானென்கை. இப்படியே लघुவான अग्निहोत्रத்தில் विश्वास सिद्ध्यर्थம் ज्योतिष्टोमविधानமென்றும், लघुவான नामसङ्कीर्तनத்தில் विश्वाससिद्ध्यर्थं प्रपत्तिविधानமென்றும், प्रक्रियैயாலே विहितங்களான सर्वशास्त्रार्थங்களிலும் अविश्वासத்தை யுண்டுபண்ணு கிறானென்று கருத்து. சிலர் "मदिराबिन्दुमिश्रமான शातकुंभमयकुंभगततीर्थसलिलம்போலே अहङ्कारमिश्रமான उपायान्तरம் என்கிற பிள்ளான் वाक्यத்தைக்கொண்டு भक्ति अहङ्कारगर्भமா கையால் स्वरूपविरुद्धமென்பார்கள். அது अनुपपन्नம். विहितसात्विकत्यागपुरस्सरமாகப் பண்ணும் भक्तिக்கு अहङ्कारगर्भत्वமே வாராது. அப்படி வந்தால் स्वरूपविरुद्धம் தானே யென்றால் प्रपत्तिயிலும் अहं करोमि என்று अहङ्कारம் கலசினால் அதுவும் स्वरूपविरुद्ध-மாகவே முடியுமென்கிறார் मद्योपहत என்கிற காரிகையால்.

संसारोत्तारणத்தைப் பண்ணுவதற்காகத் தன்னுடைய सर्वविधमाहात्म्यத்தையும் விடாமலே आचार्यனாக अवतरिக்கிறான் என்றால் அந்த नारायणன் आचार्यனைக் காட்டிலும் अन्यனாக ஆகுகைக்கு प्रसक्तिயேயில்லை என்றும், साक्षान्नारायणனைக்காட்டிலும் आचार्य वेषविशिष्टன் उत्कृष्टனென்றும் स्पष्टமாகிறது என்று கருத்து.

॥ इति श्रीमदहोबिलमठास्थाने द्विचत्वारिंशपट्टे मूर्द्धाभिषिक्तस्य
निरवधिकगुरुभक्तिभरितस्य श्रीलक्ष्मीनृसिंहदिव्यपादुकासेवक
श्रीवण्शठकोप श्री श्रीरङ्गशठकोपयतीन्द्रस्य कृतौ
श्री सारबोधिन्याख्यायां व्याख्यायां
शिष्यकृत्याधिकारः एकत्रिंशः ॥

॥ श्रीः ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

## ॥ श्रीमद्रहस्यत्रयसारे निगमनाधिकारः ॥

करबदरितविश्वः कश्चिदाचार्यदृष्ट्या
मुषितनिखिलमोहो मूलमन्त्रादिभोगः ।
सगुणविषयसिद्धौ संप्रदायं प्रयच्छन्
सुचरितसिलहारी सूरिबृन्दाभिनन्द्यः ॥ ७३ ॥

॥ श्रीः ॥

श्रीसारबोधिन्यां

निगमनाधिकारः ॥

இனி நிगमனाधिकारத்தில் கீழ்ச்சொன்ன முப்பதோரு अधिकारार्थங்களுக்கு संग्रहेण प्रदर्शनத்தையும் असंकीर्णதையையும் சொல்லப்போகிறவராய் முதலில் भागचतुष्टयात्मகமான सारशास्त्रार्थतत्त्वज्ञனை ஒரு श्लोकத்தாலே प्रशंसिக்கிறார் **करबदरितविश्व** इति । **कश्चित्** – दुर्लभனான ஆயிரத்திலொருவன். **आचार्यदृष्ट्या** – आचार्यனுடைய कटाक्षத்தாலே, **करबदरितविश्वः** – கையில் இலந்தங்கனிபோல் பண்ணப்பட்ட, அதாவது सर्वप्रकारத்தாலும் साक्षात्कारतुल्यமான ज्ञानத்தாலே विषयीकरिக்கப்பட்ட अर्थानुशासनभागத்திற்சொன்ன सर्वपदार्थத்தையுமுடையவனாய், **मुषितनिखिलमोहः** – अपुनरुदयமாகப்போக்கடிக்கப்பட்ட, समस्तமான, सिद्धोपायविषयமாயும் साध्योपायविषयமாயும் प्रपत्ति प्रभावத்தின் ஏற்றச்சுருக்கविषयமாயுமுண்டாகும் கலக்கங்களையுடையவனாய், இதனால் स्थिरीकरणभागार्थवेदित्वம் சொல்லப்பட்டது. **मूलमन्त्रादिभोगः** – मूलमन्त्रादिகளுடைய भोगத்தையுடையவனாயும், இங்கு आदिपदத்தால் द्वयचरमश्लोकங்களுக்கு ग्रहणம். भोगமாவது अतिरसावहமான अनवरतपरिचयம். இதனால் पदवाक्ययोजनाभागार्थवेदित्वம் சொல்லப்பட்டது. **सगुण** – गुणपूर्णனான, **विषयसिद्धौ** – शिष्यरूपமான विषयத்தினுடைய सिद्धियुண்டாகுமாகில். **संप्रदायं** – भगवान्முதல் उपदेशक्रमத்தாலே अविच्छिन्नமாக வந்திருக்கிற रहस्यत्रयसारार्थங்களை, **प्रयच्छन्** – उपदेक्ष्यन्, वर्तमानसामीप्ये वर्तमानवत् प्रयोगः । अवश्यம் கொடுக்கப்போகிறவராய்க்கொண்டு, இதனால் अनुष्ठानपर्यन्तமான आचार्यकृत्याधिकारार्थवेदित्वம் சொல்லப்பட்டது. **सुचरितसिलहारी** – ''सुव्याहृतानि महतां सुकृतानि ततस्ततः । सञ्चिन्वन् धीर आसीत सिलहारी सिलं यथा'' என்கிறபடியே महान्களுடைய सुव्याहृतங்களோடு கூடின

**இப்படி இஜ்ஜீவாத்மா ஸூரிகளோடொக்க भगवदनुभवरसத்துக்கு स्वरूप-योग्यனாய் வைத்து अनादिकालமிழந்து ஓரளவிலே புரிந்து सदाचार्यसंबन्ध-முண்டாய் तत्त्वहितங்களை யறியத்துடங்கினபடியும். இவையறிவிக்கும் प्रमाणங்களில் रहस्यत्रयம் सारतमமானபடியும், இவற்றைக் கொண்டறியு மர்த்தங்களில் ईशेशितव्यங்களினுடைய शरीरात्मभावसंबन्धादिகள் प्रधानप्रतितन्त्रமாய் ज्ञातव्यங்களானபடியும், இஸ் संबन्धத்தோடே கூட ज्ञातव्यமாக पूर्वाचार्यसङ्गृहीत-மான अर्थपञ्चकம் रहस्यत्रத்தில் கிடக்கும்படியும், இவ்வர்த்தपञ्चकத்துக்குள்ளே तत्त्वत्रयादिविभागचिन्तै பண்ணுவார்க்குத் தாத்பர்யமும், இத் तत्त्वत्रयத்தில் ईश्वरனாக सात्विकशास्त्रங்களிற் சொல்லப்பட்டவன் श्रियःपतिயென்னுமிடமும்,**

---

सुचरितங்களாகிற ஶிலங்களை (शीर्णधान्यங்களை) ஆங்காங்கு பொறுக்கிச் சேர்த்து வைக்குமவன். அதாவது மஹான்களுடைய அநுஷ்டானங்களை ஒவ்வோரிடத் தி[illegible]ஹித்து அப்படியே அநுஷ்டிக்குமவன். இதனால் अनुष्ठानपर्यन्तமான शिष्यकृत्याधि-कारार्थवेदित्वம் சொல்லப்பட்டது **सूरिबृन्दाभिनन्द्यः** – இங்குள்ள மஹான்களாலும் பரம பதத்திலுள்ள नित्यसूरिகளாலும் अभिनन्द्यனாவான், இதனால் ''नित्यसूरिகள் திரளிற்புக் கால் வாசிதெரியாதபடியான निरतिशयपूर्तिயைப் பெற்று ..........வாழ்வார்கள்'' इत्यादिகளான निगमनाधिकारार्थங்கள் सूचितங்களாகின்றன.

இனி उपोद्घाताधिकारம் தொடங்கி शिष्यकृत्याधिकारपर्यन्तத்தில் சொன்ன अर्थங்களை क्रमமாக संग्रहेण प्रदर्शनம் பண்ணி निगमिக்கிறார் **இப்படி** इत्यादिना । **भगवदनुभवरसத்திற்கு** – भगवदनुभवरूपமான आनन्दத்திற்கு, **ஓரளவிலே** – ஒரு காலத்திலே, यादृच्छिकसुकृतादि-परिपाककालத்திலே என்றபடி. **புரிந்து** – संसारத்தில் நின்றும் निवृत्तனாய், ''तत्त्वहितங் களையறியத் தொடங்கினபடியு'' மென்னுமளவும் उपोद्घाताधिकारार्थம். ''இவையறி விக்கும்'' इत्यादि सारनिष्कर्षाधिकारार्थம். ''இவற்றைக்கொண்டறியும்'' इत्यादि प्रधानप्रति-तन्त्राधिकारार्थம். **शरीरात्मभावसंबन्धादिகளிதி** । आदिशब्दத்தாலே शरीरात्मभावव्याप्यங்களான आधाराधेयभावादिகளுக்கு संग्रहம். ''இஸ் संबन्धத்தோடே கூட'' என்றாரம்பித்து ''रहस्यत्रयத்தில் கிடக்கும்படியும்'' என்னுமளவும் अर्थपञ्चकाधिकारार्थம். ''இவ்வர்த்தपञ्च-कத்துக்குள்ளே'' என்று துடங்கி ''தாத்பர்ய'' மென்னுமளவும் तत्त्वत्रयचिन्तनाधिकारार्थம். தாத்பர்யமாவது प्रकृत्यात्मभ्रान्तिகளுடைய निवृत्ति अवश्यம் कर्तव्यமென்கிற எண்ணம், ''இத் तत्त्वत्रयத்தில்'' इत्यादि परदेवतापारमार्थ्याधिकारार्थம். ''இவ்வர்த்தங்களெல்லா'' मित्यादि मुमुक्षुत्वाधिकारार्थம். ''अधिकारविभागமும்'' என்பது अधिकारविभागाधिकारार्थம். ''இவ்வதிகாரி-களுக்கு'' इत्यादि उपायविभागाधिकारार्थம். ''இவ்வுபாயங்களிலி'' त्यादि प्रपत्तियोग्याधिकारार्थம்.

இவ் வர்த்தங்களெல்லாந் தெளிந்தவன் मुमुक्षुவாய் मोक्षोपायोन्मुखனாம்படியும், अधिकारिविभागமும், இவ்वधिकारिகளுக்கு अनुरूपமான उपाय विभागமும், இவ்வுपायங்களில் स्वतन्त्रप्रपत्तिनिष्ठனுக்கधिकारविशेषமிருக்குங்கட்டளையும், सकृत्कर्तव्यமான இவ் उपायத்துக்கनुरूपமாக विहितமான परिकरविभागமும், मुमुक्षुவுக்கு सपरिकरமான भरन्यासरूपप्रधानकर्तव्यத்தினுடைய सन्निवेशமிருக்கும் படியும், இப்படி साङ्गप्रपदनानुष्ठानம் பண்ணினவன் सर्वरक्षणाधिकृतன் பக்கலிலே न्यस्तभरனாகையாலே कृतकृत्यனாம்படியும், இந் निष्ठै தனக்குப் பிறந்தமை கண்டு தான் தேறியிருக்கைக்கடையாளங்களும், இவனுக்கு आर्तियில் मान्द्यத்தாலே शरीरமனுवर्तिத்தாகில் இங்கிருந்த कालத்துக்கு स्वयंप्रयोजनமாய் स्वरूपप्राप्तशेषवृत्तिरूपமான कैङ्कर्यமிருக்கும்படியும், भगवत्कैङ्कर्यத்துக்கெல்லை நிலம் भागवतकैङ्कर्यமானபடியும், शासिताவான स्वामिக்கभिमतமல்லாது कैङ्कर्य-மல்லாமையாலே यथाशास्त्रம் कैङ्कर्यமனுष्ठिக்க வேண்டினபடியும், இச் शास्त्रीय-कैङ्कर्यप्रवृत्तனுக்கு अपराधங்கள் புகாமைக்கும் புகுந்தவை கழிகைக்கும் விரகுகளும், இந் निरपराध कैङ्कर्यத்துக்கு स्थानமாக अनापத்திலுचितமாவது भागवताश्रितமான भगवत्क्षेत्रமென்னுமிடமும், இப்படியே யிருந்தவிவ்வधि-कारिக்கு शरण्यसङ्कल्पविशेषத்தாலே प्रशस्तदेशकालादि नियति निरपेक्षமாக स्थूलशरीरத்தினின்றும் निर्याणமிருக்கும்படியும், இப்படிப் புறப்பட்டால் पिता यौव-राज्यத்துக்கு முடிசூடவழைத்துவிட்ட राजकुमारன் போமாப்போலே பெரிய மேன்மையோடே परमपदपर्यन्तமாக अर्चिरादिमार्गத்தாலே போம்படியும்,

---

"सकृत्कर्तव्यமான" इत्यादियாலே परिकरविभागाधिकारार्थம் சொல்லப்பட்டது. "मुमुक्षुவுக்கு" इत्यादियாலே साङ्गप्रपदनाधिकारार्थம் சொல்லப்பட்டது. "இப்படி साङ्गप्रपदनानुष्ठानம் பண்ணினவன்" इत्यादि "कृतकृत्यனாயும்படியு" மித்यन्तம் कृतकृत्याधिकारार्थம். "இந் निष्ठै" इत्यादियால் स्वनिष्ठाभिज्ञानाधिकारार्थம் சொல்லப்பட்டது. "இவனுக்கு" इत्यादि "शेषवृत्तिरूपமான कैङ्कर्यமிருக்கும்படியு" மித்यन्तம் उत्तरकृत्याधिकारार्थம். "भगवत्कैङ्कर्यத்துக்கி" त्यादि पुरुषार्थकाष्ठाधिकारार्थம். "शासिताவான स्वामिக்கு" इत्यादि "यथाशास्त्रம் कैङ्कर्यமனுष्ठिக்க வேண்டினபடியு" மித்यन्तம் शास्त्रीयनियमनाधिकारार्थம். "இச் शास्त्रीयकैङ्कर्यप्रवृत्तனுக்கு" इत्यादि "புகுந்தவை கழிகைக்கும் விரகுகளு" மித்यन्तம் अपराधपरिहारार्थம். "இந் निरपराध-कैङ्कर्यத்துக்கு स्थानமான" इत्यादि "भगवत्क्षेत्रமென்னுமிட" மித்यन्तம் स्थानविशेषाधिकारार्थம். "இப்படி யிருந்த இவ்வधिकारिக்கி" त्यादि "निर्याणமிருக்கும்படியு" மித்यन्तம் निर्याणाधि-

**இப்படிப் போனால் அங்கு பிறக்கும் स्वच्छन्दकैङ्कर्यपर्यन्तपरिपूर्णानुभवरूपமான मुक्तैश्वर्यமிருக்கும்படியும், இப்படி उक्तமான ज्ञातव्यங்களில் प्रधानமான सिद्धो-पायத்தையும், कर्तव्यங்களில் प्रधानமான साध्योपायத்தையும், இவ்வுपायनिष्ठ-னுடைய प्रभावத்தில் शास्त्रங்களிசையாத ஏற்றச் சுருக்கங்களையும்பற்றி आहारदोषहैतुकसंसर्गयुगस्वभावादिகளாலே வருங்கலக்கங்களுக்குப் பண்ணும் परिहारप्रकारங்களும், இவையெல்லாமனுसन्धिக்கைக்கு मुखமான रहस्यत्रयத்தில் पदवाक्ययोजனைகளும், இவ்வர்थங்களுக்கெல்லாம் यथाशास्त्रம் संप्रदायप्रवर्तनம் பண்ணுமாचार्यனுக்கு उपदेशादिप्रवृत्तिनिवृत्ति विषयங்களிருக்கும்படியும், இப்படி परमोपकारகனாக आचार्यன்றிறத்தில் தகுதியான प्रत्युपकारமில்லா மையாலே नित्यऋणिயான शिष्यனுக்குச் செய்யவடுக்குமவையுமெல்லாம் श्रुतिस्मृतिसूत्रसंप्रदायங்களாலும், இவற்றுக்கனுकूलங்களான समीचीनन्यायங் களாலும் अज्ञानसंशयविपर्ययங்களற यथाश्रुतं यथाहृदयமுபபாதித்தோம்.**

**இவ்வர்थங்களையெல்லாம் முற்பட सत्संप्रदायமுடைய सदाचार्यன் பக்கலிலே सम्यगुपसन्नனாய் [1]''शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नं'' என்று விண்ணப் பஞ்செய்து सादरனாய் विशदமாக श्रवणம் பண்ணி இவற்றுக்குपयुक्तங்களான நல்வார்த்தைகளையும் [2]''सुव्याहृतानि महतां सुकृतानि ततस्ततः । सञ्चिन्वन् धीर**

---

कारार्थம். ''இப்படி புறப்பட்டா'' லித்யாதி ''अर्चिरादिमार्गத்தாலே போம்படியு'' மித்யந்தம் गतिचिन्तनाधिकारार्थம். ''இப்படி போனா'' லித்யாதி ''मुक्तैश्वर्यமிருக்கும்படியு'' மித்யந்தம் परिपूर्णब्रह्मानुभवाधिकारार्थம், ''இப்படி उक्तமான'' इत्यादिना ''परिकरप्रकारங்களு'' மித்யந்தேன सिद्धोपाय साध्योपाय प्रभावव्यवस्था प्रभावरक्षाधिकारार्थங்கள். ''இவையெல்லா'' மித்யாதி ''पदवाक्य योजனைகளு'' மித்யந்தம் मूलमन्त्रद्वय चरमश्लोकाधिकारार्थங்கள். ''இவ்வர்थங்களுக்கெல்லா'' மென்றாரம்பித்து ''प्रवृत्तिनिवृत्ति विषयங்களிருக்கும்படியு'' மித்யந்தம் आचार्यकृत्याधि-कारार्थம். ''இப்படி परमोपकारகனான'' என்றாரம்பித்து ''செய்யவடுக்குமவை'' इत्यन्तம் शिष्यकृत्याधिकारार्थம். **எல்லாம்** – முப்பத்தொன்று अधिकारத்தில் சொன்ன अर्थங் களெல்லாம், **यथा श्रुतम्** – आचार्यனிடத்தில் எப்படி கேட்டோமோ அப்படியே, **यथाहृदयम्** – எப்படி हृदयத்தில் प्रामाणिकार्थங்கள் தோற்றினவோ அப்படியே.

இப்படி रहस्यत्रयार्थங்களைச் சொல்லி முடித்து அதைக் கேட்கவேண்டும் प्रकारத்தை யருளிச்செய்கிறார் **இவ்வர்थங்களையெல்லாமி**த்யாதினா । **நல்வார்த்தைகள்**

---

[1] கீதை 2-7.
[2] பாரதம், உத்யோகபர்வம் 34-34.

**आसीत सिलहारी सिलं यथा'' என்கிறபடியே ஆய்ந்தெடுத்து अभ्यासभूयस्त्वैயாலே தெளிந்துகொள்வது. [3]''सूक्ष्मः परमदुर्ज्ञेयस्सतां धर्मः प्लवङ्गम'' என்றும், [4]''धर्मस्य तत्त्वं निहितं गुहायां'' என்றும், [5]''अणीयान् क्षुरधारायाः को धर्मं वक्तुमर्हति'' என்றும் ऋषिகளுக்குங்கூட வருந்தி पदविन्यासம் பண்ணவேண்டியிருக்கிற நிலங்களில் [6]''महाजनो येन गतस्स पन्थाः'' என்றும், [7]''धर्मशास्त्ररथारूढा वेदखड्गधरा द्विजाः । क्रीडार्थमपि यत् ब्रूयुस्स धर्मः परमो मतः'' என்றுஞ் சொல்லுகிறபடியே श्रुतिस्मृतिशरणரான पूर्वाचार्यர்கள் कण्टकशोधनம் பண்ணி நடந்தவழியிலே நடக்கையாலே நமக்கு வருவதொரு தப்பில்லை. இவ்வழி நடந்தவர்**

– पूर्वाचार्यர்களுடைய मुक्तकங்களான शास्त्रार्थसारங்களான भाषणங்கள், **सुव्याहृतानीति ।** **महतां** – மஹான்களுடைய, இது मध्यमणिन्यायத்தாலே व्याहृतத்திலும் सुकृतத்திலுமந் வயிக்கிறது. **सुव्याहृतानि** – शोभनமான शास्त्रार्थभाषणங்களையும், **सुकृतानि** – शोभनமான अनुष्ठानங்களையும், **ततस्ततः** – ஆங்காங்கு, **सिलहारी** – உதிர்ந்துபோன நெல்லுகளை ஒன்றொன்றாகப் பொறுக்குகிறவன், **सिलं यथा** – உதிர்ந்த நெல்லைப்போல, **सञ्चिन्वन्** – संग्रहिக்கிறவனாய், **आसीत** – वर्तिக்கக்கடவனென்பதுஇதினர்थம். **अभ्यासभूयस्त्वैயாலே** – पुनः पुनरनुष्ठानाधिक्यத்தாலே. परमर्षिகளுக்கும் दुर्ज्ञेयங்களான இந்த रहस्यत्रयार्थங்களை संग्रहित्தருளின உமக்கும் தப்பு संभावितமாகாதோவென்னவருளிச்செய்கிறார் **सूक्ष्मः परमदुर्ज्ञेय** इत्यादिना । **सतान्धर्मः** – ஸத்துக்களுக்கும் असाधारणமான शरणागतिधर्मமானது, **सूक्ष्मः** – स्थूलदृष्टिகளாலே அறியமுடியாதது, **परमदुर्ज्ञेयः** – प्रशस्तबुद्धिमान्களுக்கும் அறியக்கூடியதன்று, **धर्मस्य तत्त्वं** – धर्मத்தினுடைய यथावस्थितस्वरूपம், **गुहायां निहितं** – अत्यन्तगुह्यமானது महाबुद्धिमान्களுக்குமறியமுடியாதது. **क्षुरधारायाः** – वपनसाधनशस्त्रத்தின் கருக்கைக்காட்டிலும், **अणीयान्** – अत्यन्सूक्ष्मமானது, धर्म इति शेषः । **வருந்தி** – கஷ்டப்பட்டு, **धर्मशास्त्ररथारूढाः** – धर्मशास्त्रத்தை आधारமாக வுடையவர்கள், धर्मप्रवचन विषयத்திலே धर्मशास्त्रத்தையே अवलंबनமாக வுடையவர்கள், **वेदखड्गधराः** – धर्मத்தில் வரும் संशयத்தினுடைய छेदनविषयத்தில் वेदமாகிற खड्गத்தையே साधनமாக உடையவர்கள், मूलप्रमाणத்தை अनुसरित्தே धर्मसंशयங்களைப் போக்குமவர்களென்கை. **நடந்த வழியிலே நடக்கையாலே நமக்கு வருவது ஒரு தப்பில்லை** इति ।

---

[3] ராமாயணம் கிஷ்கிந்தா – 18-15.
[4] பாரதம் ஆரண்யபர்வம் 314.
[5] பாரதம் ஆரண்யபர்வம் 119.
[6] பாரதம் உத்யோகபர்வம் 35-29.
[7] போதா – க்ருஹ்யஸூ 14-1-7.

**களுக்கு [8]"अविश्रान्तमनालंबमपाथेयमदेशिकम् । तमःकान्तारमध्वानं कथमेको गमिष्यसि" என்றும், [9]"निष्पानीये निरालंबे निश्छाये निरपाश्रये । द्राघीयस्यशुभे मार्गे यमस्य सदनं प्रति" என்றும் महर्षिகள் நெஞ்சாறல்படும் வழிகள் காணவேண்டா. पञ्चाग्निविद्यैயிற் சொன்னபடியே பருத்திபட்ட பன்னிரெண்டும் பட்டுப்பூட்டைக் குண்டிகைபோலேயேறுவதிழிவதாக धूमादिमार्गத்திலே परिभ्रमिக்கவும் வேண்டா. [10]"त्वं न्यञ्चद्भिरुदञ्चद्भिः कर्मसूत्रोपपादितैः । हरे विहरसि क्रीडाकन्तुकैरिव जन्तुभिः" என்கிற भगवल्लीलोपकरणமான दशैகழிந்து மற்றுமுள்ள अतिशयित-फलங்கள் பெறப்போம் अधिकारिகளுடைய வழிகளிற்காட்டில் पुरुषार्थभूयस्तै-**

---

नूतनவழியில் நடந்தாலல்லவோ दुर्ज्ञेयतादिप्रयुक्तமான தப்புகள் வருவதற்கு संभाव-வனையுண்டென்று கருத்து. இனி இந்த रहस्यत्रयத்தாலே प्रकाशितமான सन्मार्गத்திலே सञ्चरिப்பவர்கள் नराकादिमार्गத்திலும் धूमादिमार्गத்திலும் सञ्चारமின்றிக்கே अर्चिरादिमार्गத்தாலே परमपदத்தையடைந்து परिपूर्णब्रह्मानुभवपूर्वकமான सर्वविधभगवत्कैङ्कर्यங்களையும் பெற்று ஸந்தோஷிப்பார்களென்கிறார் **இவ்வழி நடந்தவர்களுக்கு** इत्यादि महावाक्यத்தாலே. अविश्रान्तं – विश्रान्तिस्थलरहितம், **अनालंबं** – न विद्यते आलंबो यस्मिन्, यष्ट्यादिरूपமான अवष्टंबरहितமென்றபடி. **अपाथेयं** – क्षुण्णिवर्तकवस्तुशून्यம், **अदेशिकं** – வழி காண்பிக்கும் तद्देशीयजनरहितம், **तमः कान्तारं** – இருளாலே போகமுடியாததான, **अध्वानं** – नरकमार्गத்தை, **निरपाश्रये** – आवासस्थलशून्ये, **நெஞ்சாறல்படும்** – நெஞ்சினால் நினைத்து கஷ்டப்படும், **பருத்தி பட்ட பன்னிரண்டும் பட்டு** इति । பருத்திக்குப் பன்னிரண்டு பாடாவது बीजादुत्पाटनம், उत्कर्षणம், अपकर्षणம், आकुञ्चनம், प्रसारणம், ग्रन्थिश्लथनம், संघटनம், समीकरणம், पुञ्जीभवनம், विकसनம், विमलीकरणம், चतुष्कोणकरणம், மென்பவை. அப்படியே ஜீவனுக்கும் रेतஸ்ஸோடே கூட सेचनமும், योषिदुदरगमनமும், पुरुषशब्दाभिलपनीयமான पिण्डीभावமும், जन्मமும், बाल्यமும், कौमारமும், यौवनமும், वार्द्धक्यமும், उत्क्रान्तिயும், नरकमार्गगमनமும், नरकानुभवமும், पुनर्निवर्तनமும் என்று பன்னிரண்டுபாடு உண்டிறே. **பூட்டைக் குண்டிகை** – கிணற்றில் ஜலமிறைப்பதற்காக घटीयन्त्रத்தில் பூட்டின घटविशेषம், **धूमादिमार्गம்** – पञ्चाग्निविद्याप्रकरणத்தில் "अथ य इमे ग्रामे इष्टापूर्ते दत्तमित्युपासते ते धूममभिसंभवन्ति धूमाद्रात्रिं" इत्यादिகளாலே சொல்லப்பட்ட मार्गம். हे हरे! **त्वं न्यञ्चद्भिः** – கீழே விழுகிறதுகளாயும், **उदञ्चद्भिः** – மேலே போகிறதுகளாயும், **कर्मसूत्रोपपादितैः** – கர்மங்களாகிற सूत्रங்களாலே संपादिக்கப்பட்ட, अन्यत्र सूत्रங்களாலே செய்யப்பட்டதுகளான, **तेभ्य** इति ।

---

[8] பாரதம் சாந்திபர்வம் 337-34.
[9] வங்கீபுரத்துநம்பி நித்யம் 24.
[10] விஷ்ணுதர்மம்.

யாலும், புனராவृत्तिயில்லாமையாலும் [11]''तेभ्यो विशिष्टां जानामि गतिमेकान्तिनां नृणाम्'', [12]''उत्क्रामति च मार्गस्थश्शीतीभूतो निरामयः'', [13]''देवयानः परः पन्थाः योगिनां क्लेशसंक्षय'' इत्यादिகளிற்படியே अत्यन्तविशिष्टமாய் [14]''आत्मा केवलतां प्राप्तो यत्र गत्वा न शोचति'', [15]''अत्यर्कानल दीप्तन्तत् स्थानं विष्णोर्महात्मनः । स्वयैव प्रभया राजन् दुष्प्रेक्षन्देव-दानवैः । यत्र गत्वा पुनर्नेमं लोकमायान्ति भारत ॥ एते वै निरयास्तात स्थानस्य परमात्मनः'' इत्यादिகளிலும் संसाराध्वाவுக்கு पारமென்று श्रुतिகளிலுமோதப்படுகிற परमपदத்தை पर्यन्तமாக வுடைத்தாய், भगवत्प्रसादावलंबनமாய், परिपूर्णமான परमपुरुषार्थத்தைப் பெறப் புகுகிறோமென்கிற सन्तोषத்தை पाथेयமாகவுடைத்தாய், [16]''तत्प्रकाशितद्वारः'' என்கிறபடியே हार्दனான ईश्वरனுடைய सौहार्दத்தாலே காட்டப்படுகிற अर्चिरादि मार्गத்தாலே அவ்வோ देवतैகள் தந்தாமெல்லைகள்தோறும் मङ्गल प्रदीपपूर्णकुंभादिகளை முன்னிட்டு सपरिकरராய் எதிர்கொண்டு सार्वभौमोपचारங்களைப் பண்ணிவழிநடத்த, कर्मलोकத்திலிருந்த நாள் இறைகொண்ட देवतैகளெல்லாங் காணிக்கையிட்டுக்

---

एकान्तिनाङ्गतिं – परमैकान्तिகளுடைய गतिயை, तेभ्यः – आमोदादिगतिகளைக்காட்டிலும், विशिष्टां – विलक्षणமாக, அதாவது उत्कृष्टமாக, जानामि – அறிகிறேன். उत्क्रामति च मार्गस्थ इति । ''नैव क्वचन जायते'' என்பது மேல் பாதம். शीतीभूतो निरामय इति । இதற்கு ''आत्मबुद्धिं समास्थाय'' என்பது முன் பாதம். शीतीभूतः – शीतत्वं प्राप्तः, निरामयः – संसारव्याधिरहितः, देवयान इति । क्लेशसंक्षये – प्रारब्ध कर्मजनितकर्मங்களெல்லாம் கழிந்தபிறகு, केवलतां – अज्ञानकर्मप्रकृति-संबन्धरहिततां, संसाराध्वाவுக்கு पारமென்று श्रुतिகளிலுமோதப்படுகிற परमपदத்தை इति । இந்த परमपदம் ''सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदं'' என்று संसाराध्वाவுக்கு परमपदமாக ஓதப்பட்டதிறே. पर्यन्तமாக வுடைத்தாயிதி । இதனால் अविश्रान्तமென்பதற்கு प्रतिकोटि சொல்லப்பட்டது. अनालंबनமென்பதற்கு प्रतिकोटिயைச் சொல்லுகிறார் भगवत्प्रसादावलंबनமாயிதி । अपाथेयமென்பதற்கு प्रतिकोटिசொல்லுகிறார் परिपूर्णமான इति । अदेशिकமென்பதற்கு प्रतिकोटिயைக் காட்டுகிறர் तत्प्रकाशितद्वारः என்கிறபடியே इत्यादि । இறைகொண்ட – ஆஹாரத்தை வாங்கிக்கொண்ட, अग्नयेस्वाहा, सूर्याय स्वाहा என்று

---

[11] பாரதம் சாந்திபர்வம் 358-6.
[12] பாரதம் சாந்திபர்வம் 194-27.
[13]
[14] பாரதம் சாந்திபர்வம் 196-11.
[15] பாரதம் ஆரண்யபர்வம் 136-18.
[16] ப்ரஸ்மஸூத்ரம் 4-2-16.

**கண்டனுவர்திக்க, அவர்களுக்குமெட்டவொண்ணாதவெல்லைகளெல்லாங்கடந்து नित्यसूरिகள் திரளிற் புக்கால் வாசி தெரியாதபடியான निरतिशयपूर्तिயைப் பெற்று, [17]"ततो महति पर्यङ्के मणिकाञ्चनचित्रिते । ददर्श कृष्णमासीनं नीलं मेराविवांबुदम् ॥ जाज्वल्यमानं वपुषा दिव्याभरणभूषितम् । पीतकौशेयसंवीतं हेम्नीवोपचितं मणिम् ॥ कौस्तुभेन ह्युरस्थेन मणिनाभिविराजितम् । उद्यतेवोदयं शैलं सूर्येणाप्तं किरीटिनम् ॥ नौपम्यं विद्यते तस्य त्रिषु लोकेषु किञ्चन", [18]"तं वैश्रवणसङ्काशमुपविष्टं स्वलङ्कृतम् । ददर्श सूतः पर्यङ्के सौवर्णे सोत्तरच्छदे ॥ वराहरुधिराभेण शुचिना च सुगन्धिना । अनुलिप्तं परार्ध्येन चन्दनेन परन्तपम् ॥ स्थितया पार्श्वतश्चापि वालव्यजनहस्तया । उपेतं सीतया भूयश्चित्रया शशिनं यथा ॥ तं तपन्तमिवादित्यमुपपन्नं स्वतेजसा । ववन्दे वरदं वन्दी विनयज्ञो विनीतवत्" என்று भारतरामायणங்களிற் சொல்லப்பட்ட अवतारासिகையாலே व्यञ्जितமான परमपद पर्यङ्कத்திலே யெழுந்தருளியிருக்கிற सपत्नीकனான सर्वेश्वरன் தாளிணைக்கீழ் [19]"ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்ய வேண்டுநா" மென்கிற मनोरथத்தின்படியே सर्वदेश सर्वकाल सर्वावस्थोचित सर्वविधकैङ्कर्यங்களையும் பெற்று வாழ்வார்கள். இப்படி श्रियःपतिயான नारायणன் திருவடிகளிலே उपाय दशैயிலும் फलदशैயிலுமுपजीव्यங்கள்.**

---

சொல்லி हुतமான हविर्भागத்தை स्वीकरित्तु வந்த என்றபடி **காணிக்கையிட்டு** – "सर्वेऽस्मै देवा बलिमावहन्ति" என்கிறபடியே உபஹாரத்தை ஸமர்ப்பித்து. भारतरामायणादिகளிற் சொல்லப்பட்ட कृष्णरामावतारासिகைகள் போன்ற पर्यङ्कासिகை அங்குமுண்டோவென்ன வருளிச்செய்கிறார் – ततो महतीति । **हेम्नीवोपचितं मणिं** – स्वर्णத் தகட்டில் பதித்த நீலரத்னம் போலே, **किरीटिनं** – किरीटेन विराजमानं, त्रिषु लोकेषु किञ्चन என்கிற पर्यन्तம் द्वारकैயில் श्रीकृष्णावतारासिकाप्रदर्शनம். तं वैश्रवणसंकाशமென்றாரம்பித்து श्रीरामावतारासिகையைக் காட்டுகிறார். **सूतः** – सुमन्त्रः, **सोत्तरच्छदे** – उत्तरास्तरणसहिते, **शुचिना** – परिशुद्धेन । **परार्ध्येन** – सर्वोत्कृष्टेन, **स्वतेजसा** – தனக்கு असाधारणமான तेजोविशेषத்தால், **अवतारासिகை** – அவதாரங்களுடைய पर्यङ्कस्थितिः । **परमपदपर्यङ्कத்திலே** – "अमितौजसं पर्यङ्क" மென்று कौषीतकिब्राह्मणादिகளில் ஓதப்பட்ட पर्यङ्कविशेषத்திலே, **தாளிணைக்கீழ்** – परस्परसदृशங்களான திருவடித்தாமரைகளின் கீழே, **ஒழிவில்காலமெல்லாம்** – ஒழிவில்லாத காலமெல்லாம், सर्वकालத்திலுமென்றபடி. **உடனாய்** – கூடவே, सर्वदेशத்திலுமென்ற

[17] பாரதம் ஶாந்திபர்வம் 44-13 முதல் 16.
[18] ராமாயணம் அயோத்யாகாண்டம் 16-8 முதல் 11.
[19] திருவாய்மொழி 3-3-1.

உறுசகடமுடைய வொரு காலுற்றுணர்ந்தன
உடன்மருதமொடிய வொரு போதிற்றவழ்ந்தன
உறிதடவுமளவி லுரலூடுற்று நின்றன
உறுநெறியோர் தருமன்விடு தூதுக்குகந்தன
மறநெறியர் முறியபிரதானத்துவந்தன
மலர்மகள் கைவருட மலர்போதிற்சிவந்தன
மறுபிறவியறுமுனிவர் மாலுக்கிசைந்தன
மனுமுறையில் வருவதோர் விமானத்துறைந்தன
அறமுடைய விசயனமர் தேரிற்றிகழ்ந்தன
அடலுரகபட மடியவாடிக் கடிந்தன
அறுசமய மறிவரிய தானத்தமர்ந்தன
அணிகுருகை நகர்முனிவர் நாவுக்கமைந்தன
வெறியுடைய துளவமலர் வீறுக்கணிந்தன
விழுகரியோர் குமரனென மேவிச்சிறந்தன
விறலசுரர் படையடைய வியத்துடர்ந்தன
விடலரிய பெரியபெருமாள் மெய்ப்பதங்களே. **(49)**

---

படி. **மன்னி** – नित्यமாகக்கிட்டி, सर्वावस्थैயிலுமென்றபடி. **வழுவிலா** – अपराधமில்லாமல், **அடிமை** – कैङ्कर्यத்தை, **செய்யவேண்டும்** – செய்யக்கடவோம். **வாழ்வார்களிதி** । न्यश्वद्भिः என்கிறவிடத்தில் இவ்வழி நடந்தவர்களுக்கு என்பதை विभक्तिपरिणामेन வழிநடந்தவர்கள் என்றாக்கி अनुषङ्गித்து வாழ்வார்கள் என்றந்வயிப்பது. இனி प्रबन्धத்தின் प्रधानार्थத்தை எல்லோருக்கும் நெஞ்சில் படும்படி சுருங்க उपदेशिக்கிறார் **இப்படி श्रियःपतियान** इति । श्रियःपतियान नारायणனுடைய திருவடிகளே शरणवरणदशैயிலும் कैङ्कर्यदशैயிலும் परिग्राह्यங்களென்றபடி.

இப்படி श्रियःपतियान नारायणन் திருவடிகளே उपायदशैயிலும் फलदशैயிலுமுபजीव्यங்களாகில் श्रीभाष्यकारர் गद्यத்தில் विशिष्य रङ्गनाथன் திருவடிகளே उपजीव्यங்களாகச் சொல்லுவானேனென்னில், श्रीवैकुण्ठनाथனும் विभवरूपिகளான रामकृष्णादिகளும், स्वयंव्यक्तமாய் अर्चारूपियாய்ப்போந்த रङ्गनाथனும் अभिन्नர்களாகையாலே அவர்களுடைய திருவடிகளும் ஒன்றாகையால் भाष्यकारர் विशिष्य रङ्गनाथன் திருவடிகளையே आश्रयித்துப் போந்தார் என்று சொல்லக்கருதி रामकृष्णादिகளுடைய திருவடிகளின் अपदानத்தைச் சொல்லி तदभिन्नமான பெரிய பெருமாளின் திருவடிகளை விடமுடியாத उपायोपेयங்

களென்று ஒருபாட்டாலே அருளிச்செய்கிறார் **உறுசகடமுடைய** इत्यादि । **உறு** – பெரியதான, **சகடம்** – असुराविष्टமான शकटமானது, **உடைய** – உடைந்துபோம்படி, आविष्टனான असुरனோடே नशिத்துப் போம்படி, **ஒரு கால்** – தாயாரும் உதவப் பெற்றிராத ஒரு कालविशेषத்திலே, **உற்று** – सावधानமாக, **உணர்ந்தன** – जाग्रத்துக் களாக இருந்தன. இவைகளெல்லாம் प्रथम पुरुषद्विवचनங்கள். **உடன்** – கூடினது களான, यमलங்களான என்றபடி. **மருதம்** – நலகூபரமணிக்ரீவர்களென்கிற कुबेरपुत्रர் களுக்கு महर्षिशापத்தாலே शरीरமாக வந்த अर्जुनवृक्षங்கள், **ஒடிய** – ஒடிந்துபோகும்படி, **ஒரு போதில்** – ஒருகாலத்திலே, **தவழ்ந்தன** – தவழ்ந்ததுகள். रिङ्खणம் செய்ததுகள். **உறிதடவுமளவில்** – தயிரைத் திருடுவதற்காக உறிகளைத் தடவும்போது, **உரலூடு** – உரலுடைய मध्यத்திலே, **உற்று** – தாயாராலே கட்டப்பட்டு, **நின்றன** – இருந்ததுகள். **உறு** – योग्यமான **நெறியோர்** – धर्ममार्गத்தையுடைய, **தருமன்** – धर्मपुत्रன், **விடு** – விடுத்த, அனுப்பிய என்றபடி. **தூதுக்கு** – दूतकृत्यத்திற்கு, **உகந்தன** – உகந்ததுகளாயிருந்தன. **மற** – கோபத்தையே, **நெறியர்** – सञ्चारमार्गமாகவுடைய असुरराक्षसர்கள், **முறிய** – முறிந்துபோகும்படி, आत्यन्तिकமாக நசித்துப்போம்படி, **பிரதானத்து** – बृन्दावनத்திலே, **வந்தன** – सञ्चरिத்ததுகள், **மலர்மகள்** – तामरस वासिनி-யான பெரிய பிராட்டியார், **கைவருட** – கையினாலே संवाहनம் செய்ய, **மலர் போதில்** – மலர்ந்த तामरसदलங்களைக்காட்டிலும், **சிவந்தன** –சிவந்ததாயிருந்தது கள். **மறுபிறவி** – पुनर्जन्मம், **அறு** – அறவேண்டுமென்று ஆசைப்படுகிற, வாராமலிருக்கவேண்டுமென்று ஆசைப்படுகிற, **முனிவர்** – मननशीलர்களான भक्तர்களுடைய, **மாலுக்கு** – परमभक्तिக்கு, **இசைந்தன** – தன்னுடைய अङ्गीकारம் தோற்ற सदृशங்களான விஷயங்களாயின. **மநுமுறையில்** – वैवस्वतमनुவினுடைய वंशपरंपरैயில், **வருவது** – வந்ததாயிருக்கிற, "आद्यं स्थलं स्वयं व्यक्तं सत्यलोके प्रतिष्ठितं" என்கிறபடி सत्यलोकத்தில் स्वयंव्यक्तமாக प्रतिष्ठितமாய் பிறகு ब्रह्माவினாலே वैवस्वतमनुவுக்கு आराध्यமாக அளிக்கப்பட்டு அந்த वंशத்தில் பரம்பரையாக आराध्यமாக வந்து கொண்டிருக்கிற, **ஓர்** – अद्वितीयமான, **விமானத்து** – रङ्गविमानத்திலே, **உறைந்தன** – नित्यवासம் பண்ணாநின்றதுகள். **அறமுடைய** – शरणागतिधर्मத்தையுடைய, "शिष्य-स्तेऽहं शाधि मां त्वां प्रपन्नं" என்று शरणागतனான என்றபடி. **விசயன்** – அர்ஜுநனுடைய, **அமர்** – அமர்ந்ததான, उत्कृष्टமான என்றபடி. **தேரில்** – रथத்தில், **திகழ்ந்தன** – உஜ்ஜ்வலித்திருந்ததுகள், पार्थसारथि யென்று सौशील्यம் தோற்றும்படி आश्रितरक्षणोन्मुखங் களாக விளங்காநின்றதுகளென்றபடி. **அடல்** – पराक्रमத்தையுடைய, **உரக** – காளியனென்கிற सर्पத்தினுடைய, **படமடிய** – படங்கள் மடிந்துபோகும்படி, **ஆடி** — நர்த்தனம் பண்ணி, **கடிந்தன** – அவனை निरसिத்ததுகள். **அறுசமயம்** – सांख्ययोगकाणाद बौद्धजैनपाशुपतங்களென்கிற ஆறு சமயங்களாலே (सिद्धान्तங்களாலே),

**इति यतिराजमहानसपरिमळपरीवाहवासितां पिबत ।**
**विबुधपरिषन्निषेव्यां वेदान्तोदयनसंप्रदायसुधाम् ॥ ७४ ॥**

**அறிவரிய** – दुर्ज्ञेयமான, **தானத்து** – स्थानத்திலே, **அமர்ந்தன** – स्थिरप्रतिष्ठिதங்களாக இருந்ததுகள். **அணி** – भूमिக்கலங்காரமான, **குருகைநகர்** – குருகா பட்டணத்திற்கு நிர்வாஹகரான, **முனிவர்** – நம்மாழ்வாருடைய, **நாவுக்கு** – நாவிலுண்டான "சுடரடி தொழுதெழன்மனனே", "உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" इत्यादि श्रीसूक्तिகளுக்கு, **அமைந்தன** – योग्यமான விஷயங்களாயிருந்தன. **வெறியுடைய** – परिमळத்தையுடைய, **துளவமலர்** – திருத்துழாய்மலர்களை, **வீறுக்கு** – தன் वैलक्षण्यம் தோற்றுகைக்கு, **அணிந்தன** – அலங்காரமாக ஸ்வீகரித்ததுகள். **விழுகரி** – உத்தரையின் गर्भத்தில் நின்றும் द्रौण्यस्त्रविप्लुष्टமாய் விழுந்த கருவானது, **ஓர் குமரனென** – अद्वितीयனான பரீக்ஷித்தென்னும் ராஜகுமாரனாக ஆகும்படி, **மேவி** – अभिनिवेशத்தோடே स्पर्शித்து. **சிறந்தன** – सर्वोत्कृष्टங்களாய் விளங்கினதுகள். **விறல்** – शौर्यத்தையுடைய, **அசுரர் படையடைய** – असुरர்களுடைய படை முழுவதும், **வீய** – नशिத்துப்போகும்படி, **துடர்ந்தன** – துரத்திப் பின் சென்றன. மால்யவான் முதலானவர்களின் युद्धத்தில் नारायणन் அவர்களை பின்சென்றுத் துரத்தினானிறே. இப்படியெல்லாம் செய்தவை எவைகள் என்ன வருளிச் செய்கிறார் **விடலரிய** इति । விடலரிய – भक्तர்களுக்கு விடமுடியாததுகளான, दुस्त्यजங்களான என்றபடி. **பெரியபெருமாள்** – பெருமாளான ஸ்ரீராமனுக்கும் பெருமாளாகையால் பெரிய பெருமாளென்று பெயர் பெற்ற रङ्गनाथனுடைய, **மெய்ப்பதங்களே** – मृदुलங்களான திருவடித்தாமரைகளே.

இப்படி தாமருளிச்செய்த संप्रदायगतार्थமான रहस्यत्रयसारग्रन्थத்தின் रस्यतातिशयத்தை अनुभविத்து ஆனந்தமுள்ளடங்காமல் "தொண்டீரெல்லீரும் வாரீர்" என்று ஆழ்வார் அழைத்த கணக்கிலே सर्वजनங்களையும் அழைத்து देवतैகளுக்கும் सर्वदा आस्वादनीय-மான இந்த रहस्यत्रयसाररूपமான सुधैயை सर्वदा पानம் பண்ணுங்கோளென்கிறார் **इति यतिराजेति** । **इति** – गुरुपरंपरासारம் முதல் இப்படி कथितैயான, **यतिराज** – श्रीभाष्यकारருடைய, **महानस** – महानसकैङ्कर्यकर्तृतया यतिराजमहानसரென்றே व्यवहरिக்கப்பட்ட கிடாம்பியாச்சான் விஷயத்திலுண்டான, **परिमळ** – श्रीभाष्यकारருடைய पक्षपातம் அதாவது கரைபுரண்ட कृपै, அதினுடைய **परीवाह** – कृपै உள்ளடங்காமல் சொன்ன अतिरहस्यार्थोपदेशத்தாலே, **वासितां** – संस्कृतैயாயும், अत एव **विबुधपरिषन्निषेव्यां** – पण्डितपरिषத்தாலே सर्वदा सेव्यமாயுமுள்ள, अन्यत्र देवपरिषத்துக்களால் सेव्यமான வென்கை.. **वेदान्तेति** । न्यायத்தில் उदयनाचार्यரைப் போல் विशिष्टाद्वैतवेदान्तத்தில் उदयनाचार्यர் என்று प्रसिद्धரான प्रणतार्तिहराचार्यருடைய उपदेशपरंपराप्राप्तार्थமான रहस्यत्रयसाररूपமான अमृतத்தை, **पिबत** – पानம்பண்ணுங்கோள்.

**कलकण्ठगणास्वाद्ये कामस्यास्त्रे निजाङ्कुरे ।**
**निंबवृत्तिभिरुद्गीर्णे न चूतः परितप्यते ॥ ७९ ॥**

**முன்பெற்ற ஞானமுமோகந்துறக்கிலுமூன்றுரையில்**
**தன்பற்ற தன்மையுந் தாழ்ந்தவர்க்கியுந் தனித்தகவும்**
**மன்பற்றி நின்றவகை யுரைக்கின்ற மறையவர்பால்**
**சின்பற்றியென்பயன் சீரறிவோர்க்கிவை செப்பினமே. (50)**

இப்படி எல்லோரையும் रहस्यत्रयसारसुधैயை பானம் பண்ணும்படி நியமிக்கலாமோ? அப்போது சிலர் असूयाविष्टர்களாய் இப் प्रबन्धத்தை उपेक्षिத்தால் தேவரீருக்கு மனஸ்ஸில் தாபமுண்டாகாதோ வென்ன? இந்த प्रबन्धம் निष्पक्षपातिகளான மஹான்களுக்காகவே செய்யப்பட்டதாகையால் असूयालुக்களுடைய उपेक्षैயாலே நமக்கு ईषத்தும் தாபமில்லை யென்பதை अन्यापदेशश्लोकத்தாலே யருளிச்செய்கிறார் **कलकण्ठेति । कलकण्ठाः** – **कलः** – अव्यक्तमधुरस्वरः कण्ठे येषां, கோகிலங்கள், அதுகளுடைய கணங்களாலே, **आस्वाद्ये** – आस्वाद-नीयமான, अन्यत्र अनसूयुக்களான शास्त्रज्ञसमूहத்தாலே अत्यादरेण आस्वादनीयமான, **कामस्य** – मन्मथனுக்கு, **अस्त्रे** – अस्त्रமான, **निजाङ्कुरे** – स्वीयமான अङ्कुरமானது, இங்கு निजशब्दம் चूतपरம். अन्यत्र ''कामः कामप्रदः प्रभुः'' என்று पठितமான भगवानுக்கு अभीष्टसाधनशास्त्रம்போலே யிருக்கிற தன்னுடைய ग्रन्थமானது, **निंबवृत्तिभिः** – निंबभोजिகளான காகங்களாலே, अथवा निंबभोजिகளான उष्ट्रங்களாலே, अन्यत्रविஷயமறியாத அஸூயாளுக்களாலே, **उद्गीर्णे** – கக்கப்பட்டதேயாகிலும், अन्यत्र उपेक्षितமேயாகிலும், **चूतः** – ரஸாலமானது, **न परितप्यते** – परितापத்தை யடையாது. अन्यत्र चूतस्थानीयமான நான் निंबवृत्तिप्रायரான அஸூயாளுக்களாலே இந்த ग्रन्थம் उपेक्षिக்கப்பட்ட மாத்திரத்திலே மனஸ்ஸில் தாபத்தை யடையமாட்டேனென்கை. ''सार्धं कथञ्चिदुचितैः पिचुमन्दपत्रैरास्यान्तरालगतमाम्रदलं मदीयः । दासेरकस्सपदि संवलितन्निषादैर्विप्रंपुरा पतगराडिव निर्जगार'' என்கிற माघश्लोकம் இங்கே अभिप्रेतம். **दासेरकः** – उष्ट्रः ।

இப்படி विबुधपरिषन्निषेव्यமாயும் कलकण्ठगणतुल्यர்களான विद्वत्परिषத்தாலே आस्वाद्यமா யுமிருக்கிற இப் प्रबन्धம் ஸரளமான मणिप्रवाळநடையிலமைந்திருப்பதால் இதை विद्वान्கள் தாங்களே பார்த்து அறிந்து पुरुषार्थங்களையும் அடையலாமென்கிற எண்ணத்தோடு இதைச் செப்பினீரோ என்ன? सदाचार्यसकाशத்தில் முறைதப்பாமல் கேட்டு पुरुषार्थத்தைப் பெற इच्छैயுள்ளவர்களை उद्देशिத்தே இப் प्रबन्धம் செய்யப்பட்ட தென்கிறார் **முன்பெற்ற** इति । **முன்** – முதலிலே, **பெற்ற** – ''ईश्वरस्य च सौहार्दं'' என்று துடங்கி சொல்லப்பட்ட आचार्य प्राप्तिपूर्वकமாக आचार्यரிடத்தில் நின்றும் பெற்ற,

निर्विष्टं यतिसार्वभौमवचसामावृत्तिभिर्यौवनं
निर्धूतेतरपारतन्त्र्य निरया नीतास्सुखं वासराः ।
अङ्गीकृत्य सतां प्रसत्तिमसताङ्गर्वोऽपि निर्वापितः
शेषायुष्यपि शेषिदंपतिदयादीक्षामुदीक्षामहे ॥ ७६ ॥

**ஞானமும்** – अर्थानुशासनभागத்தில் சொன்ன तत्त्वहितपुरुषार्थविषयकज्ञानமும், **மோகந்துறக் கலும்** – स्थिरीकरणभागத்தில் சொன்ன सयूथ्यர்களாலே சொல்லப்பட்ட सिद्धोपायादि-विषयकமான मोहनिवृत्तिप्रकारமும், **மூன்றுரையில்** – रहस्यत्रयத்தில் சொல்லப்பட்ட, **தன்பற்ற** – अपकृष्टமான स्वातन्त्र्यान्यशेषत्वादि दोषமற்ற, **தன்மையும்** – भगवच्छेषत्वपार-तन्त्र्यादिरूपस्वस्वभावமும், இதனால் पदयोजनभागार्थம் சொல்லப்பட்டது. **தாழ்ந்தவர்க்கு** – ''शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नं'' என்று सम्यगुपसन्नர்களான सच्छिष्यர்களுக்கு, **ஈயும்** – उपदेशिப்பதற்கு हेतुவான, **தனி** – अद्वितीयமான, **தகவும்** – ''कृपया निस्पृहो वदेत्'' इत्यादि-களிற்சொல்லப்பட்ட கரைபுரண்ட कृपैயும், இங்கு தாழ்ந்தவர்க்கென்றதால் शिष्यकृत्याधिकारार्थமும், ஈயுந்தனித்தகவும் என்றதால் आचार्यकृत्याधिकारार्थமும் சூசிப்பிக் கப்பட்டன. **மன்பற்றி நின்றவகை** – மன்னென்று राजवाचकமாய் राजाधिराजனான सर्वेश्वरனைச் சொல்லுகிறது. **அவனைப்பற்றி** – शरणवरणம்பண்ணி, **நின்றவகை** – निवृत्तसर्वपापனாய் निश्शोकனாய் நின்ற प्रकारத்தை, **உரைக்கின்ற** – उपदेशिக்கிற, **மறை யவர்பால்** – वेदத்தை स्वरूपनिरूपकமாகவுடைய वेदान्तिகளான आचार्यர்பக்கலிலேயே, **சீரறிவோர்க்கு** – இந்த ग्रन्थத்தில் சீர்மையை संप्रदायமாக அறியவேண்டுமென்று इच्छैயுள்ளவர்களை उद्देशिத்தே, **செப்பினமே** – சொன்னோம். அப்படியன்றிக்கே विद्वान्கள் தான் தோன்றியாய் இந்த ग्रन्थத்தைப் பார்த்து अर्थங்களை யறிந்து पुरुषार्थங்களைப் பெறலாமென்று இருக்குமவர்களை उद्देशिத்து செப்பினோமல்லோம். **சின்பற்றியென்பயன்** – क्षुद्रार्थத்தை निरूपिப்பதால் என்ன प्रयोजनம்.

இனி स्वशिष्यர்களெல்லாம் தன்னுடைய वृत्तिशेषத்தையனுஷ்டித்தும் தம்முடைய मनोवृत्तिविशेषத்தை யடைந்து முஜ்ஜீவிக்கவேணுமென்கிற எண்ணத்தாலே தம்முடைய वृत्तिविशेषத்தையும் मनोवृत्तिविशेषத்தையும் ஒரு श्लोकத்தாலே संग्रहिத்தருளிச்செய்கிறார் **निर्विष्टमिति । यतिसार्वभौमवचसां** – यतिसार्वभौमரான श्रीभाष्यकारருடைய वचोरूपங்களான श्रीभाष्यादिகளுடைய, **आवृत्तिभिः** – ''प्रवचनविधावष्टाविंशे जयध्वजपट्टिका'' என்றும், ''त्रिंशद्वारं श्रावितशारीरकभाष्यः'' என்றுஞ்சொல்லுகிறபடியே पुनः पुनः प्रवचनावृत्तिகளாலே, **यौवनं** – यौवनावस्थैயானது, **निर्विष्टं** – सुखமாக अनुभूतம், ''युवा स्यात्साधु युवाध्यायकः'' । ''स एको मानुष आनन्दः'' என்று यौवनदशैயில் प्रवचनம் मनुष्यानन्दமாகச் சொல்லப்பட்டதிறே. இங்கு

**செப்பச்செவிக்கமுதென்னத்திகழுஞ்செழுங்குணத்துத்**
**தப்பற்றவர்க்குத் தாமே யுகந்து தருந்தகவால்**
**ஒப்பற்ற நான் மறையுள்ளக்கருத்திலுறைத்துரைத்த**
**முப்பத்திரண்டிவை முத்தமிழ்சேர்ந்தமொழித்திருவே. (51)**

आवृत्तिभिः என்று स्त्रीलिङ्गनिर्देशात् बहुवचननिर्देशाच्च यौवनம் बहुस्त्रीகளோடே ஸுखமாக அனுபவிக்கப்பட்டது என்கிற अर्थम் ध्वनिக்கிறது. இவருக்கு यौवनात्पूर्वावस्थैயும் वेदान्तोपयुक्तமான नानाविधविद्यापरिचयத்தோடே ஸுखமாகக் கழிந்ததாகவே ''विंशत्यब्दे विश्रुतनानाविधविद्यः'' என்பதாலே निश्चितமாகிறது. இங்கும் नानाविधविद्येति स्त्रीलिङ्गनिर्देशத்தால் अर्थान्तरध्वनियுண்டு. இப்படி யौवनத்தில் प्रवचनसुखமிருந்தாலும் அது पारतन्त्र्यादिदुःखसंवलितமோ வென்ன வருளிச்செய்கிறார் **निर्धूतेतरेति** । दूरतो निरस्तமான इतरपारतन्त्र्यமாகிற निरयத்தை யுடையவைகளான, **वासराः** – यौवनवासरங்கள், **सुखं नीताः** - सुखமாகக் கழிக்கப்பட்டது கள். இதனாலும் मोदकारणமே சொல்லப்பட்டது. ''अपरप्रेष्यस्स रात्रिश्च मोदते'' என்று अपरप्रेष्यतैயை मोदहेतुவாகச் சொல்லிற்றிறே यक्षप्रश्नोत्तरத்தில். இப்படி प्रवचनसुखமும் पारतन्त्र्याभावसुखமுமிருந்தாலும் वादिदमनार्थமாக क्लेशமுமனுभूतமன்றோ வென்ன வருளிச்செய்கிறார் **अङ्गीकृत्य सतामिति** । **सतां** – ब्रह्मज्ञानத்தாலே लब्धसत्ताकர்களான वात्स्यवरदाचार्यप्रभृतिகளான மஹான்களுடைய, **प्रसत्तिं** – ''प्रतिष्ठापितवेदान्तः प्रतिक्षिप्तबहिर्मतः । भूयास्त्रैविद्यमान्यस्त्वं भूरिकल्याणभाजनं'' என்கிற आशीर्वादத்திற்கு हेतुभूतமான प्रसादविशेषத்தை, **अङ्गीकृत्य** – सविनयமாக அங்கீகரித்து, இதனால் आशिष्ठत्वरूपமான அதாவது आशीर्वादयुक्तत्वरूपமான श्रुतियில் சொன்ன आनन्दवत्वமும் அதனாலே असத்துக்களுடைய गर्वनिर्वापणத்தில் क्लेशाभावமும் सूचितமாகிறது. இப்படி वेदान्तप्रवचनத்தாலும் दुर्वादिवादनिरसनத்தாலும் यौवनமெல்லாம் सुखமாகவே கழிந்தது. மேல் वार्द्धकदशैயில் मनोरथித்திருப்பது என் என்னவருளிச்செய்கிறார் **शेषायुष्यपीति** । **शेषायुष्यपि** – இருக்கவேண்டிய आयुश्शेषத்திலும், **शेषिदंपति** – निरुपाधिकशेषिகளான लक्ष्मीनारायणरूपदिव्यदंपतिகளுடைய, **दयादीक्षां** – अन्तिमस्मृति प्रभृतिपर्यङ्काधिरोहण पूर्वकगुणाष्टकाविर्भावपर्यन्तமான फलपरंपराप्रापकैயான दयैயினாலே உண்டான मोक्षयिष्यामि என்கிற ஸங்கல்பவிசேஷத்தை, **उदीक्षामहे** – ''कदाऽहं भगवन्तं नारायणं साक्षात्करवाणि चक्षुषा, कदा मां भगवान् स्वकीययाऽतिकोमलया दृशाऽवलोक्य स्निग्धगंभीरमधुरया गिरा परिचर्यायामाज्ञापयिष्यति'' என்று मनोरथித்து उत्तानदत्तानननாய் प्रतीक्षित्துக்கொண்டிருக்கிறோம்.

இனி निगमनाधिकारार्थसंग्राहकமான ஒரு பாட்டாலே तत्तदधिकारार्थ संग्राहकங்களான முப்பத்திரண்டு பாட்டுக்களின் மஹிமையைச் சொல்லி இவைகளே वक्तृवचनवैलक्षण्यங்களையுடைய இந்த मणिप्रवालरूपமான रहस्यत्रयसारप्रबन्धத்திற்கत्यन्तशोभावहங்களென்கிறார் **செப்பச்செவிக்கமுதि**त्यादि । **செப்ப** – गानத்தோடு உச்சரிக்க,

**आस्तिक्यवान्निशितबुद्धिरनभ्यसूयु-**
**स्सत्संप्रदायपरीशुद्धमनास्सदर्थी ।**
**सङ्केतभीतिरहितस्सतृणेष्वसक्त-**
**स्सद्वर्तनीमनुविधास्यति शाश्वतीन्नः ॥ ७७ ॥**

**செவிக்கு** – श्रोताக்களுடைய காதுகளுக்கு, **அமுதென்ன** – अमृतமென்னலாம்படி, **திகழும்** – விளங்காநிற்கிற, **செழும்** – श्लाघ्यமான, **குணத்து** – शमदमाद्यात्मगुणங் களிலே, **தப்பற்றவர்க்கு** – अवगुणलेशமில்லாத सच्छिष्यர்களுக்கு **உகந்து** – सन्तोषित्து, **தகவால்** – कृपैயாலே, **தாமே தரும்** – தாங்களே தரக்கூடினதுகளாயும், उपदेशिக்கக் கூடினதுகளாயுமென்றபடி. **ஒப்பற்ற** – सदृशமல்லாததுகளான, **நான்மறை** – सशिरस्कங்களான நான்கு वेदங்களுடைய, இது स्मृतिपुराणादिகளுக்குமுபலக்ஷணம். **உள்ளக்கருத்தில்** – गूढமாயுள்ள பரமதாத்பர்யத்தில், **உறைத்து** – ஸுவர்ணத்தை உறைகல்லிலே தேய்ப்பது போல் என்னுடைய बुद्धिயை நிகர்ஷணம் பண்ணி, वेदங்களின் பரமதாத்பர்யத்தை पुनः पुनः परिचयம்பண்ணி யென்றபடி. **உரைத்த** – सावधानமாகச் சொல்லப்பட்டதாயுமுள்ள, **முப்பத்திரண்டிவை** – இந்த முப்பத் திரண்டுபாட்டுகளும், **முத்தமிழ் சேர்ந்த** – वक्तृवचनविषयवैलक्षण्यरूपங்களான மூன்று குணங்களையுடையप्रवाळம் போன்ற தமிழோடே கூடினதான, **மொழி** – श्लाघ्यवचन-रूपமான இப் प्रबन्धத்திற்கு, **திருவே** – ஸ்ரீயே, अत्यन्तशोभावहங்களே என்றபடி.

இப்படி இந்த ग्रन्थம் परमरहस्यार्थबोधकமாயும் अधिकारार्थसंग्राहकங்களான श्लोकங்களாலும் பாசுரங்களாலும் अलङ्कृतமாயும் अतिसरळமான मणिप्रवाळநடையிலே அமைந்திருந் தாலும் இதை सेविத்து இதில் சொன்ன शाश्वतமான सन्मार्गத்தை யாராவது ஆதரிப் பார்களோ வென்ன? ''उत्पत्स्यते मम तु कोऽपि समानधर्मा कालो ह्ययं निरवधिर्विपुला च पृथ्वी'' என்று महाकवि சொன்னபடி நம்போலியான ஒருவன் நம்முடைய सन्मार्गத்திலும் நடப்பானாகையலிந்த ग्रन्थம் सफलமாகவே ஆகுமென்கிறார் **आस्तिक्यवानिति** । **आस्तिक्यवान्** – वेदोक्तங்களான எல்லா अर्थங்களையும் परमार्थமென்றெண்ணமுடைய வனும், **निशितबुद्धिः** – नवनवोन्मेषशालियान प्रतिभैயையும் मेधैயையுமுடையவனும், **अनभ्यसूयुः** – सद्गुणத்தில் दोषம் சொல்ல நினைக்காதவனும், **सत्संप्रदायपरिशुद्धमनाः** – आचार्योपदिष्टமான संप्रदायार्थश्रवणத்தாலே ரஜஸ்தமஸ்ஸுக்களற்றுப்போன மனதை யுடையவனும், **सदर्थी** – सत्पदार्थங்களையே ग्रहिக்கிறவனும், **सङ्केतभीतरहितः** – सदर्थங்கள் समीचीनமென்று மனதில் பட்டிருக்கச்செய்தேயும், தப்பானாலும் நாமெல்லாரும் இப்படியே अनुष्ठिக்கக்கடவோமென்கிற पामरसङ्केतத்திற்கு भयப்படாதவனும், **स तृणेष्वसक्तः** – तृणप्रायங்களான प्रयोजनान्तरங்களோடு கூடிய असन्मार्गங்களிலே संबन्ध-

**மறையுரைக்கும் பொருளெல்லா**
**மெய்யென்றோர்வார்**
**மன்னிய கூர்மதியுடையார் வண்குணத்தில்**
**குறையுரைக்க நினைவில்லார் குருக்கடம்பால்**
**கோதற்ற மனம்பெற்றார் கொள்வார் நம்மைச்**
**சிறைவளர்க்குஞ் சிலமாந்தர் சங்கேதத்தாற்**
**சிதையாத திண்மதியோர் தெரிந்ததோவார்**
**பொறை நிலத்தில் மிகும் புனிதர் காட்டுமெங்கள்**
**பொன்றாத நன்னெறியிற் புகுதுவாரே. (52)**

மற்றவனுமான ஒருவன், नः – भाष्यकारप्रभृतिपरंपरया शिक्षितसंप्रदायस्थர்களான நம்முடைய, शाश्वतीं –आचंद्रार्कம் नित्यமாக இருக்கப்போகிற, **सद्वर्तनीं** – இந்த ग्रन्थத்தில் சொன்ன நல்ல मार्गத்தை, **अनुविधास्यति** – अनुसरिத்தே போகுவனென்கை.

இந்த श्लोकार्थத்தை मन्दमतिகளுமறியும்படி द्रमिडभाषारूपமான ஒரு பாட்டாலே परिवर्तनம் பண்ணிக்காட்டுகிறார் **மறையுரைக்கு**मित्यादि । **மறை** – वेदங்கள், **உரைக்கும்** – சொல்லுகிற, **பொருளெல்லாம்** – अर्थங்களெல்லாம், **மெய் யென்று** – शक्यமென்று, **ஓர்வார்** – अभ्युपगमம் பண்ணியிருக்கிறவர், श्लोकத்தில் तादृशव्यक्तिदौर्लभ्याभिप्रायத்தாலே आस्तिक्यवानित्येकवचनम். सुकृतवशத்தாலே பலரும் संभविக் கலாமென்கிற अभिप्रायத்தாலே பாட்டில் மெய்யென்றோர் என்று बहुवचनम். இது आस्तिक्यवान् என்கிற पदத்திற்கர்த்தம். இதில் எல்லா மென்றதால் कर्मकाण्डத்தில் சொன்ன अर्थங்களே सत्यங்கள். ब्रह्मமென்பது கர்மங்களில் கர்த்தாவாகச் சொல்லப்பட்ட ஜீவனைத் தவிர வேறில்லையாகையால் ब्रह्मकाण्डமெல்லாம் அந்த ஜீவனுக்கே स्तावकமே யொழிய जीवातिरिक्तமாக ஒரு ब्रह्मத்தைச் சொல்லுகிறதன்று. அப்படிப்பட்ட ब्रह्मமென்கிற ஒரு வஸ்துவே கிடையாதென்று சொல்லும் कबन्धमीमांसकன் அதாவது निरीश्वरमीमांसकன் वेदान्तरूपமான மறையில் சொல்லப்பட்ட ब्रह्मத்தை மெய்யென்று ஒப்புக்கொள்ளாதால் அவன் ஆஸ்திகனன்றென்றும், निर्विशेषब्रह्मமே सत्यம், कर्मकर्तृ-क्रियादिभेदबोधकமான वेदभागம் अपच्छेदन्यायத்தாலே बाध्यமென்றும், அதில் சொல்லுவ தெல்லாம் असत्यமென்றும் சொல்லுகிற राहुमीमांसकனென்னும் अद्वैतियும் ஆஸ்தி கனன்றென்றும் ज्ञापिக்கப்பட்டது. **மன்னிய** – धारणावत्தான, **கூர்** – கூர்மை யுடைய, அதாவது नवनवोन्मेषशालिनियான, **மதியுடையார்** – बुद्धियை யுடையவர்கள். இது निशित बुद्धिः என்கிற பதத்திற்கர்த்தம். **வண்** – श्लाघ्यமான, **குணத்தில்** – इतरர்களுடைய गुणத்திலும், **குறை** – குறைவை அதாவது दोषத்தை, **உரைக்க** – आरोपித்துச்

**இதுவழி யின்னமுதென்றவரின்புலன் வேறிடுவார்**
**இதுவழியா மலவென்றறிவா ரெங்கடேசிகரே**
**இதுவழி யெய்துக வென்றுகப்பா லென்**
**பிழைபொறுப்பார்**
**இதுவழி யாமறையோரருளால் யாமிசை ந்தனமே. (53)**

சொல்ல, **நினைவில்லார்** – எண்ணமில்லாதவர்கள். இது अनभ्यसूयुः என்பதற்கு द्रामिडार्थம். குணங்களிலே दोषारोपம் அஸூயையிறே. **குருக்கள்தம்பால்** – குருக்களிடத்திலே, **கோதற்ற** – रजस्तमोरूपமான दोषங்கள் கலசாத, **மனம்பெற்றார்** – மனத்தைப் பெற்றவர்கள், அதாவது दोषமல்லாத बुद्धिயைப்பெற்றவர்களென்றபடி. இது सत्संप्रदायपरिशुद्धमनाः என்பதற்கு द्रामिडार्थம். **நன்மை** – நலத்தையே, **கொள்வார்** – யாசித்தாகிலும் பெறுவர். இது सदर्थी என்பதற்கு द्रामिडार्थம். **சிறை** – संसारமாகிற காராக்ருஹத்தை, **வளர்க்கும்** – वृद्धि பண்ணாநிற்கிற, **சிலமாந்தர்** – சில मन्दबुद्धिகளுடைய, **சங்கேதத்தால்** – நம் संप्रदायம் தப்பாயிருந்தலும் நாமிதை விடக்கூடாதென்கிற கட்டுப்பாட்டாலே, **சிதையாத** – சிதறிப்போகாத, அதாவது चलित्துப்போகாத, **திண்** – दृढமான, **மதியோர்** – निश्चयத்தையுடைவர்கள். இது सङ्केतभीतिरहितः என்பதற்கு द्रामिडार्थம். **தெரிந்ததோராரிதி । தெரிந்து** – क्षुद्रமென்று தெரிந்து, **அது** – ख्यातिलाभ-पूजारूपक्षुद्रपुरुषार्थத்தை, **ஓரார்** – ஆசைப்படாதவர்கள். ख्यातिलाभादिகளில் सङ्गமற்றவர் களென்றபடி. இது सतृणेष्वसक्तः என்பதற்கு द्रामिडार्थம். **பொறை** – क्षमैயினுடைய, **நிலத்தில்** – सीमाभूमिயில், **மிகும் புனிதர்** – மிகவும் परिशुद्धர்களான நம் संप्रदायाचार्यர் களாலே, **காட்டும்** – காட்டப்பட்ட, **எங்கள்** – நம்முடைய, **பொன்றாத** – நசி-யாத, शाश्वतமான என்றபடி. **நன்னெறியில்** – सन्मार्गத்தில், **புகுதுவாரே** – புகுந்து நடப்பார்கள். இந்த रहस्यत्रयसारத்தில் சொல்லப்பட்ட संप्रदायागतமான நம்முடைய सन्मार्गத்தையே आश्रयித்து அதையே अवश्यமநுஷ்டிப்பார்களென்றபடி. இது सद्वर्तनीमनु-विधास्यति शाश्वतीत्नः என்பதின் द्रामिडार्थம்.

இப்படி இந்த प्रबन्धोक्तमार्गத்தில் आस्तिक्यादिगुणமுடைய சிலர் सञ्चरिப்பார்களாகை யால் இதற்கு अधिकारिदौर्लभ्यமில்லையென்று श्लोकத்தாலும் பாட்டாலும் उपपादித்து हृष्टராய் सदसद्विवेकचतुरரான நம்மாசார்யர்கள் இந்த प्रबन्धोक्तमार्गமே இனிமையான मोक्ष-साधनமென்று उपदेशித்து இந்த मार्गமே மேல்மேலும் நடைபெறவேணுமென்கிற உகப்பாலே இதில் संभावितமான मनःकालुष्यादिजनितமான दोषங்களையெல்லாம் सहித்துக்கொள்வார்களென்றும் वेदान्तिகளான நம்மாசார்யர்களுடைய कृपैயாலே இந்த मार्गமே घण्टापथமென்று நாம் இசையப்பெற்றோமென்றும் சொல்லி सन्तुष्ट-

**எட்டுமிரண்டு மறியாதவெம்மை யிவையறிவித்**
**தெட்டவொண்ணாத விடந்தரு மெங்களம்மாதவனார்**
**முட்ட வினைத்திரண்மாள முயன்றிடு மஞ்சலென்றார்**
**கட்டெழில் வாசகத்தாற் கலங்கா நிலை பெற்றனமே. (54)**

ராகிறார் **இதுவழி யின்னமுதென்றவரித்யாதி** । **இது வழியாம்** – இந்த ப்ரவந்தத்திற் சொன்ன பக்திப்ரபத்திகளே மோக்ஷத்திற்கு உபாயமாம், **அல** – கேவலவாக்யஜன்யஜ்ஞானம் முதலானது மோக்ஷோபாயமன்று, **என்றறிவார்** – என்று த்ருடமாகத் தெரிந்தவர்களான, **எங்கள் தேசிகரே** – அஸ்மதாசார்யர்களான நாதயமுனயதிவராதிகளே, இங்கு அவதாரணத்தாலே அஸ்மதாசார்யவ்யதிரிக்தர்கள் இப்படி ஸதஸத்விவேகம் பண்ண சதுரர்களன்றென்று த்யோதிதம். **இது வழி** – இந்த ப்ரவந்தோக்த-மார்க்மே, **இன்னமுது** – பரமானந்தமான மோக்ஷஜனகம். **என்றவர்** – என்று உபதேசித்தவர்கள், **இன்புலன்** – அல்பஸுகமான இந்த்ரியவிஷயங்களை, **வேறிடுவார்** – தாங்களும் வேறிட்டு ஆச்ரிதர்களுக்கும் வேறிட்டுவைப்பார்கள். பரித்யாஜ்யதயா வேறிட்டுவைத் தார்களென்றபடி. **இதுவழி** – இந்த ப்ரவந்தோக்தமார்க்மே, **எய்துகவென்றுகப்பால்** – மேன்மேலும் அபிவ்ருத்த மாகவேண்டுமென்கிற (உகப்பாலே) திருவுள்ளத்தின் ஸந்தோஷத்தாலே, **என் பிழை பொறுப்பார்** – இதில் அனவதானத்தாலே ஸம்பாவிதமான ஸ்காலித்யத்தையெல்லாம் ஸஹித்துக்கொள்வர், **மறையோரருளால்** – வேதாந்தி-களான நம்மாசார்யர்களுடைய ஸ்காலித்யஸஹனபூர்வகமான இந்த வழிமேன்மேலும் அபிவ்ருத்தமாகவேண்டுமென்கிற க்ருபையாலே, **இது** – இதுவே, **வழி** – ஸன்மார்க்மென்று, **யாம்** – ஆசார்யக்ருபாபாத்ரனான யாம், **இசைந்தனமே** – அங்கீகரித்தோம். ஆசார்யர் களுடைய க்ருபையாலே ஆசார்யகளுகந்த இப் ப்ரவந்தோக்தமார்க்மே ஸன்மார்க்மென்று நாம் அங்கீகரித்தோமென்றபடி.

இப்படி இந்த க்ரந்தோக்தமான ஸன்மார்க்த்தில் நடக்க அதிகாரிகள் ஸம்பவிப்பார்களென்கிற நிச்சயத்தாலும், இந்த மார்க்ம் மேன்மேலும் வ்ருத்தியடையவேண்டுமென்கிற ஆசார்யர் களுடைய உகப்பாலும் இதுவே கண்டாபதமாகுமென்கிற நிச்சயம் தேவரீருக்கு இப்போதிருந்தாலும் அதற்கும் ஒருகாலத்தில் கலக்கம் ஸம்பவிக்குமோ வென்ன? ப்ரதமரஹஸ்யத்தாலே ஸ்வரூபஜ்ஞானம் பெற்று த்விதீயரஹஸ்யத்தாலே உபாயத்தை யநுஷ்டித்து த்ருதீய-ரஹஸ்யமான சரமச்லோகத்தாலே ஸர்வப்ரகாரத்தாலும் ஸ்திரப்ரதிஷ்டர்களாக ஆனோமாகையால் நமக்கு ஒரு ப்ரகாரத்தாலும் கலக்கம் ஸம்பவிக்காதென்று ஸந்துஷ்டராகிறார் **எட்டு மிரண்டுமித்யாதி** । **எட்டும்** – அஷ்டாக்ஷரத்தையும், **இரண்டும்** – த்வயாக்யமந்த்ரத்தையும், **அறியாத** – தெரிந்துகொள்ளாத, **எம்மை** – அத்யந்தாஜ்ஞானான நம்மை, எட்டுமிரண்டு மென்பதை ஸங்க்யாவாசகமாக வைத்தால் இவையறிவித்து எட்டவொண்ணாதவிடந்

**வானுளமர்ந்தவருக்கு வருந்தவருமின்னிலைகள்**
**தானுளனாயுகக்குந்தர மிங்கு நமக்குளதே**
**கூனுள நெஞ்சுகளாற் குற்றமெண்ணியிகழ்ந்திடினும்**
**தேனுளபாதமலர்த் திருமாலுக்குத் தித்திக்குமே. (55)**

தருமென்பது सङ्गतமாகாது. **இவையறிவித்து** – இவ்விரண்டு मन्त्रங்களையும் அனுष्ठानपर्यन्तமாக आचार्यमुखத்தாலே தெரியப்படுத்தி, **எட்டவொண்ணாத** – द्वयार्थानुष्ठानरहितர்க்கு எட்டுவதற்கு अशक्यமான, **இடம்** – परमपदத்தை, **தரும்** – தருகிறவரான, **எங்கள்மாதவனார்** – எங்களுடைய प्रपत्तिயாலே वशीकृतரான श्रियःपति, "एष नारायणः श्रीमान्" என்கிறபடியே மதுரையிலே யவதரித்த கண்ணன் என்றபடி. **முட்ட** – निबिडीभूतமான, **வினை** – பாபங்களுடைய, **திரள்** – கும்பலெல்லாம், **மாள** – नशित्துபோகும்படி, सर्वपापविमोचनार्थமென்றபடி. **முயன்றிடும்** – முயற்சியைச் செய், शरणवरणம் பண்ணு என்றபடி. **அஞ்சலென்றார்** – நீ ஒன்றுக்கும் भयப்பட வேண்டாம் என்று சொன்னார், मा शुचः என்றாரென்றபடி. அவருடைய என்று शेषம். **கட்டெழில் வாசகத்தால்** – सर्वतः शोभनங்களான शब्दार्थங்களுடைய கட்டாலே (சேர்த்தியாலே) प्रकाशिக்கிற चरमश्लोकरूपवाक्यத்தாலே, **கலங்கா நிலை** – கலக்கமில்லாத प्रतिष्ठैயை அதாவது अर्थनिश्चयस्थितिயை, **பெற்றனமே** – அடையப் பெற்றோம். இனி நமக்கு ஒரு प्रकारத்தாலும் கலக்கம் வர प्रसक्तिயேயில்லையென்றபடி.

இப்படி सर्वप्रकारத்தாலும் தேவரீர் हृष्टரானாலும் देवतैகளுக்கும் श्रमப்பட்டு வரக்கூடிய இப் प्रबन्धार्थத்தின் அனுष्ठानத்தைப் பண்ணி सन्तुष्टராகவேண்டாவோ? அதுவுமுண்டென்றாலும் அஸூயாளுக்களான वक्रबुद्धिகள் இந்த प्रबन्धத்தை யிகழ்ந்தால் सन्तोषம் குறைவுபடாதோ வென்ன? அவர்களிகழ்ந்தாலும் श्रियःपतिக்கு இப் प्रबन्धம் தித்திக்குமாகையால் सन्तोषத்திற்கு ஒரு प्रकारத்தாலும்குறைவே இல்லை யென்கிறார் **வானுள்** इत्यादि । **வானுள்** – परमाकाशமான परमपदத்திலும் स्वर्गத்திலும், **அமர்ந்தவர்க்கும்** – இருக்கிற नित्यसूरिகளுக்கும் देवतैகளுக்கும், **வருந்தவரும்** – श्रमப்பட்டு வரக்கூடியதான, **இந் நிலைகள்** – இந்த प्रबन्धोक्तமான परमैकान्तिधर्मங்கள், **தானுளனாய்** – ग्रन्थத்தில் எழுதுவதுமாத்ரமன்றிக்கே स्वयம் அவைகளை யுள்ளவனாய்க் கொண்டு, **உகக்கும்** – இந்த परमैकान्तिधर्मங்களை யுகக்கும்படியான, **தரம்** – ஏத்தமானது, **இங்கு** – विरोधिभूयिष्ठமான இந்த संसारத்திலேயே, **நமக்குளதே** – நமக்கு உண்டாயிருப்பதே என்று தம்முடைய स्वभावத்தினுடைய ஏத்தத்தைப் பற்றி ஸந்தோஷிக்கிறார். **கூனுளநெஞ்சுகளால்** – அஸூயாளுக்களான சில

**வெள்ளைப்பரிமுகர் தேசிகராய் விரகாலடியோ-**
**முள்ளத்தெழுதிய தோலையிட்டனம் யாமிதற்கென்**
**கொள்ளத் துணியினுங் கோதென் றிகழினுங் கூர்மதியீர்!**
**எள்ளத்தனை யுகவா திகழாதென் னெழில்மதியே. (56)**

குடிலஹ்ருதயர்களால், **குற்றமெண்ணி** – நம்மிடத்திலும் நம்முடைய ப்ரபந்தத்திலும் தோஷத்தை ஆரோபித்து, **இகழ்ந்திடினும்** – இகழப்பட்டாலும், இப் ப்ரபந்தம் அனாதரிக்கப் பட்டாலும், **தேனுளபாதமலர்** – ''விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:'' என்கிறபடி மதுஸ்யந்தினி-யான திருவடித் தாமரைகளையுடைய, **திருமாலுக்கு** – பெரிய பிராட்டியாரிடத் தில் வ்யாமுக்தனான பகவானுக்கு, **தித்திக்குமே** – அதிபோக்யமாக ஆய்விடுமே.

நிகமனத்தில் இப் ப்ரபந்தத்தை ஹயக்ரீவன் முதலில் என் நெஞ்சில் எழுத அதையே லேககஸ்தானாபன்னனான யான் ஓலையில் எழுதினேனாகையால் இதை அத்யந்த நிசித-புத்திகள் அத்யந்தஸாரமென்று அங்கீகரிக்கத்துடங்கினாலும், சிலர் அஸாரமென்று இகழ்ந் தாலும் லேககஸ்தானீயனான என்னுடைய மனஸ்ஸுக்கு ஒரு உகப்போ, வெறுப்போ உண்டாகாது; எல்லாம் ப்ரயோஜககர்தாவான அவனதே என்று முடிக்கிறார் **வெள்ளைப் பரிமுகரித்யாதி** । **வெள்ளை** – வெளுத்தவரான, ஶுத்தஸ்படிகமணிபூப்ருத்ப்ரதிபடரான. **பரிமுகர்** – ஹயக்ரீவர், **தேசிகராய்** – தான் ஹயவதனஸ்வரூபத்தோடே உபதேசிக்கப்புக்கால் ஶிஷ்யர்கள் அஞ்சி அகலுவர்களோ என்கிற எண்ணத்தாலே ஸஜாதீயரராய் ஆப்த தமரான வாதிஹம்ஸாம்புவாஹாசார்யராய் அதாவது கிடாம்பி அப்புள்ளாராய், **விரகால்** – ஆசார்யோபதேஶரூபமான ஹேதுவாலே, அதாவது உபதேஶரூபமான லேகினியாலே, **அடியோம்** – ''ஶிஷ்யஸ்தேऽஹம்''என்று அத்யந்தப்ரவணனாய் நின்றவடியேனுடைய, **உள்ளத்தெழுதியது** – மனஸ்ஸாகிற மாத்ருகையிலே எழுதப்பட்டவர்த்தங்களை. ஆசார்யோபதேஶத்தாலே நெஞ்சில் பட்டவர்த்தங்களையென்றபடி. **யாம்** – லேககஸ்தானீயனான யான், **ஓலையிலிட்டனம்** – பாஹ்யமான தாலபத்ரத்தில் எழுதினோம். **இதற்கு** – ஹயக்ரீவன் நெஞ்சில் எழுதிக் கொண்டு போக நம்மால் ஓலையிலெழுதப்பட்ட இந்த க்ரந்தத்திற்கு, **என்** – என்ன தோஷமுண்டு? மனுஷ்யரான நம்மால் உத்ப்ரேக்ஷித்து எழுதப்பட்டாலன்றோ தோஷமாவது? பகவத்கர்த்ருகமான இதில் தோஷஸம்பாவனையுண்டோவென்றபடி, இப்படிப் பட்ட இந்த க்ரந்தத்தை, **கொள்ளத்துணியினும்** – புத்திமான்களான சிலர் இதின் ஸாரத்தையறிந்து அங்கீகரிக்கவேணுமென்று நிஶ்சயித்தாலும், சிலர் அஸ்மத்கர்த்ருகத்வபுத்த்யா, **கோது** – ருஜீஷம், அதாவது ஸாரமற்றது என்று எண்ணி, **இகழினும்** – அனாதரிக் கிலும், **கூர்மதியீர்** – ஸாராஸாரங்களை விவேகிக்கும் தீக்ஷ்ணபுத்தியையுடையீர்களே!

**रहस्यत्रयसारोऽयं वेङ्कटेशविपश्चिता ।**
**शरण्यदंपतिविदां सम्मतस्समगृह्यत ॥ ७८ ॥**

॥ इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे
निगमनाधिकारो द्वात्रिंशः ॥

कवितार्किकसिंहाय कल्याणगुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ॥

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे
संप्रदायप्रक्रियाभागश्चतुर्थः ॥
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

## ॥ श्रीमद्रहस्यत्रयसारस्समाप्तः ॥

**என்** – என்னுடைய, **எழில்** – भगवाனே இந்த प्रबन्धத்தைச் செய்தருளினானென் கிற दृढाध्यवसायरूपशोभैயையுடைய, **மதியே** – மனஸ்ஸானது. **எள்ளத்தனை** – எள்ளளவும், **உகவாது** – परिग्रहिத்தார்களே என்று ஸந்தோஷியாது, **இகழாது** – எள்ளளவும் (ஸ்வல்பமும்) क्लेशத்தை அடையாது. யாரேனும் எழுதின प्रबन्धத்தை யாராகிலும் परिग्रहिத்தாலும் परित्यजिத்தாலும் எமக்கு सन्तोषமும் दुःखமும் உண்டா காதென்று கருத்து.

இனி ரூபகவிந்யாஸத்தாலே தம்முடைய अप्रधानकर्तृत्वத்தை द्योतिப்பித்துக்கொண்டு உள்ளங்கை நெல்லிக்கனிபோலே प्रत्यक्षவிஷயமான रहस्यत्रयங்களின் सारार्थமாகவே யிருக்கிற இப்प्रबन्धம் शरण्यர்களான दिव्यदंपतिகளுடைய स्वरूपरूपगुणविभूत्यभिप्रायங்களை நன்றாகவறிந்த மஹான்களுக்கு अत्यन्त ஸம்மதமாகும்படி अतिव्यासव्यतिकरமன்றியும் अतिसङ्कोचखेदமன்றியும் எழுதப்பட்டதென்கிறார் **रहस्यत्रयसारोऽयमिति । अयं** – प्रत्यक्ष-विஷயமான, **रहस्यत्रयसारः** – रहस्यत्रयங்களுடைய सारार्थप्रतिपादकतया रहस्यत्रयसारமென்று பெயர் பெற்ற இந்த प्रबन्धமானது, **वेङ्कटेशविपश्चिता** – वेङ्कटेशரென்கிற सर्वज्ञரான विद्वानாலே, विविधं पश्यन्ति चिति यस्य विपश्चित् என்கிற व्युत्पत्तिயாலே विपश्चिच्छब्दம் सर्वविषयकज्ञानவானைச் சொல்லுமிறே. இங்கு ரூபகவிந்யாஸத்தாலே ''ब्रह्मणा विपश्चिता'' என்று சொல்லப்பட்ட सर्वज्ञனான திருவேங்கடமுடையானாலேயே இந்த ग्रन्थம் செய்யப்பட்டது என்கிற வர்थம் द्योतितமாகிறது. முன்பு ஹயக்ரீவன் நெஞ்சில் எழுத நாம் ஓலையில் எழுதினோமென்கிறார். இதில் ''वेङ्कटेशावतारोऽयं'' என்கிறபடி मदभिन्नரான திருவேங்கட முடையானாலேயே இந்த ग्रन्थம் எழுதப்பட்டதென்கிறார். ஆனால் இந்த ग्रन्थம் மஹான்களுக்கு ஸம்மதமாகுமோவென்ன வருளிச்செய்கிறார் **शरण्यदंपतिविदां सम्मत इति ।** लक्ष्म्या सह हृषीकेशो देव्या कारुण्यरूपया । रक्षकः என்று ஸர்வரக்ஷகராகச் சொல்லப்பட்ட शरण्यदंपतिகளுடைய स्वरूपरूपगुणविभूतिகளையும் திருவுள்ளத்தையும் நன்றாகவறிந்து மஹான்களுக்கு अत्यन्ताभिमतமாக **समगृह्यत** – संग्रहिக்கப்பட்டது.

**श्रीमान् लक्ष्मी नृहरिः कृत्वा मां तूलिकां स्वहस्तस्य ।**
**श्रीरङ्गपूर्वशठजिद्योगिवरं प्रीतिपूर्णहृदयेन ॥**

**यावदवसानपद्यावसानमतिगुह्यसारशास्त्रस्य ।**
**अतिललितां सरसार्थां व्याख्यां श्रीसारबोधिनीं व्यलिखत् ॥**

**॥ इति श्रीमदहोबिलमठास्थाने द्विचत्वारिंशत्पट्टे मूर्द्धाभिषिक्तस्य**
**निरवधिकगुरुभक्तिभरितस्य श्रीलक्ष्मीनृसिंहदिव्यपादुकासेवक**
**श्रीवण्शठकोप श्री श्रीरङ्गशठकोपयतीन्द्रस्य कृतौ**
**श्री सारबोधिन्याख्यायां व्याख्यायां**
**निगमनाधिकारो द्वात्रिंशः ॥**

॥ इति श्रीसारबोधिन्यां संप्रदायप्रक्रियाभागश्चतुर्थः ॥

॥ श्रीमते श्रीलक्ष्मी नृसिंहदिव्यपादुकासेवक
श्रीवण्शठकोप श्रीश्रीरङ्गशठकोपयतीन्द्रमहादेशिकाय नमः ॥

श्री सारबोधिनी व्याख्या संपूर्णा

॥ शुभमस्तु ॥